# திராவிட இயக்க இதழ்கள்

தொகுதி - 2

பதிப்பாசிரியர்

இ. சுந்தரமூர்த்தி

மா. ரா. அரசு

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies

Chennai - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Tiravita iyakka italkal** |
| Editors | : | **E. Sundaramoorthy**<br>**M.R. Arasu** |
| Publisher | : | **International Institute of Tamil Studies,** C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113<br>Ph. 22542992 |
| Publication No | : | 543 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 2008 |
| Edition | : | First |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No.of Pages | : | 196 |
| Price | : | Rs. 75/-<br>(Rupees Seventy five) |
| No.of Copies | : | 1200 |
| Printed by | : | **United Bind Graphics**<br>43/95, Millers Road, Kilpauk<br>Chennai - 600 010, Ph. 26401807 |
| Subject | : | Studies on Dravidian Journalism |

முனைவர் ம. இராசேந்திரன்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113

## முகவுரை

குடியரசு என்னும் மாளிகையின் நான்கு தூண்களுள் ஒன்று இதழியல் துறையாகும். மானிட மேம்பாட்டிற்கும் சமுதாய வளர்ச்சிக்குமெனச் செய்திகளை, கருத்துகளை மக்கள் நெஞ்சத்திற்கு அனுப்பும் கம்பியில்லாத் தந்திகளாக இதழ்கள் விளங்குகின்றன.

இதழியல் வளர்ச்சி வரலாற்றில் திராவிட இயக்கங்களுக்கு மிகப் பெரிய பங்கு உண்டு. அதேபோலத் திராவிட இயக்கங்களின் வளர்ச்சிக்கு அடித்தளமாகவும் இதழ்கள் விளங்கின.

தமிழின மேம்பாட்டிற்கு இதழ்கள் பெரும் பங்காற்றி உள்ளன.

"நீ என்ன தொழில் செய்கின்றாய்"? என்று வெளிநாட்டு நிருபர்கள், வெளிமாநில நிருபர்கள் என்னைக் கேட்கும்பொழுது,

" 'நான் ஒரு பத்திரிகையாளன்' என்று சொல்வது வழக்கம் "

என்று பேரறிஞர் அண்ணா குறிப்பிடுவது (இந்நூல், ப. 102) இயக்கத் தாருக்கும் இதழியல் துறைக்குமான நெருக்கத்தை எடுத்துக்காட்டும்.

திராவிட இயக்கச் சிந்தனைகளை, திராவிட இயக்கத் தலைவர் களின் கருத்துகளைத் தாங்கிப் பல்வேறு வார, மாத, மாதமிருமுறை, தின இதழ்கள் வெளிவந்துள்ளமையை இதழியல் வரலாறுகள் பதிவு செய்துள்ளன.

திராவிட இயக்க இதழ்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை தந்தை பெரியாரின் 'குடியரசு', பேரறிஞர் அண்ணாவின் 'நம்நாடு', 'திராவிடன்', நாவலர் நெடுஞ்செழியனின் 'மன்றம்', கே.ஏ. மதியழகனின் 'தென்னகம்', கலைஞர் மு. கருணாநிதியின் 'முரசொலி', டாக்டர் புரட்சித் தலைவரின் 'சமதர்மம்' என்பனவாகும். இந்த வரிசையில் குறிக்கத்

தக்கனவாக ஏ.வி.பி. ஆசைத்தம்பியின் ‘தனிஅரசு’, அயோத்திதாச பண்டிதரின் ‘ஒரு பைசாத் தமிழன்’, திருமலைசாமியின் ‘நகரதூதன்’, பாவலர் பால்வண்ணனின் ‘கலை மன்றம்’, ப. புகழேந்தியின் ‘கதிர்’ ஆகியவையும் அமைகின்றன. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், தத்துவ மேதை டிகே. சீனிவாசன், ‘சிந்தனையாளன்’, வே. ஆனைமுத்து, சிந்தனைச் சிற்பி சி.பி. சிற்றரசு ஆகியோரின் இதழியல் பணியும் இங்குக் குறிப்பிடத் தக்கன. அறியாமை இருள் அகற்றித் தமிழ்ச் சமுதாயத்தில் ஓர் எழுச்சியை ஏற்படுத்துவதில் திராவிட இயக்க இதழ்களுக்குப் பெரும் பங்குண்டு. அந்த வகையில் திராவிட இயக்க இதழ்கள் குறித்தும், திராவிட இயக்க இதழாளர்கள் குறித்துமான செய்திகளைக் கொண்டதாக இந்நூல் அமைந் துள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நடைபெற்ற இதழியல் குறித்த தொடர் கருத்தரங்க வரிசையில், திராவிட இயக்க இதழ்கள் பற்றிய கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்புகளில் இரண்டாம் தொகுதியாக இந்நூல் இப்பொழுது வெளிவருகின்றது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்து வருவ தோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான டாக்டர் கலைஞர் அவர்களைத் தமிழுல கம் என்றும் நன்றி பாராட்டும். சிறந்த தமிழ்ப்பணிகளை அடையாளம் கண்டு ஊக்கப்படுத்திவரும் தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் அவர்களுக்கும் நன்றி. நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை அரசுச் செயலர் திருமிகு கோ. சந்தானம் இ.ஆ.ப., அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலினை அழகுற வடிவமைத்து அச்சிட்டுத் தந்த ‘தி பார்க்கர்’ அச்சகத்தார்க்கு நன்றி.

இயக்குநர்

## பதிப்புரை

சாதீய ஏற்றத்தாழ்வுகள், திராவிடர் - ஆரியர் எண்ணம், நாட்டின் விடுதலையோடு சமூகச் சமநிலை விடுதலை கிடைக்கப்பெறாமை போன்ற பல்வேறு பின்னணிகளில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே திராவிட இயக்கச் சிந்தனை வலுப்பெறத் தொடங்கியது. நாட்டின் விடுதலை என்பது ஒட்டுமொத்த சமுதாயத்தின் விடுதலையாக இருக்க வேண்டுமேயன்றிக் குறிப்பிட்ட இனங்களின் விடுதலையாக இருக்கக் கூடாது என்ற கொள்கை இந்நூற்றாண்டின் தொடக்கத்திலேயே ஒடுக்கப் பட்ட மக்களின் தலைவர்களிடையே வலுவடையத் தொடங்கியது. 1912இல் டாக்டர் சி. நடேசன் உருவாக்கிய அமைப்பு திராவிடர்களின் நலங் களையும் உரிமைகளையும் பெறச் சிறந்த தொடக்கமாக அமைந்தது.

அதைத் தொடர்ந்து அடுத்த கட்டமாக 1916ஆம் ஆண்டு, 'தென்னிந்திய நல உரிமைச்சங்கம்' உருவானது. திராவிட இயக்கக் கொள்கைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லத் தமிழ், ஆங்கிலம்,தெலுங்கு ஆகிய மொழிகளில் 'திராவிடன்', 'ஜஸ்டிஸ்', 'ஆந்திரப் பிரகாசிகா' ஆகிய இதழ்களை நல உரிமைச் சங்கத்தினர் நடத்தினர். திராவிடன் இதழின்,

> "பொதுவாக இந்துக்கள் என்ற மொத்தப் பெயரை வைத்துக் கொண்டே, இந்துக்களுள் மிகமிகச் சிறிய பிரிவினராகிய சிலரே எல்லா நலன்களையும் எல்லாப் பலன்களையும் இதுவரைக்கும் அனுபவித்து வந்திருக்கிறார்கள். இப்பொழுதும் அனுபவித்து வருகிறார்கள். முக்கியமாய் இதற்குக் காரணம், பத்திரிகைகள் என்ற பலமுள்ள ஆயுதங்கள் அவர்களிடம் இருப்பதுதான்"

என்ற தலையங்கச் செய்தி, திராவிட இதழ்கள் வேகமாக வளர்ச்சி அடைய வேண்டியதன் தேவையை உணர்த்தியது. தொடர்ந்து இவ்விதழில் பல்வேறு புள்ளி விவரங்கள் மக்கள் சதவிகித அடிப்படையில் திராவிடர் களின் நலம் புறக்கணிக்கப்பட்ட விவரத்தைத் தெளிவுப்படுத்தின.

அடித்தட்டு மக்களின் விடுதலை எண்ணமும் வளரத் தொடங்கியது. இரட்டைமலை சீனிவாசனால் தொடங்கப்பெற்ற 'பறையன்', அயோத்திதாச பண்டிதரால் தொடங்கப்பெற்ற 'தமிழன்' போன்ற பல இதழ்களும் திராவிட விழிப்புணர்வுப் பணிகளைத் தொடர்ந்து செய்து வந்தன. நாட்டின்

விடுதலைப் போராட்ட வரலாற்றோடு தொடர்ந்து அதே காலகட்டத்தில் உருவான திராவிட மக்களியக்க வரலாறும் தமிழக வரலாற்றில் சிறப்பாகப் பதிவு செய்யப்பட வேண்டிய செய்தியாகும். மாணவர்களில் தாழ்த்தப் பட்டோர், பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் உள்ளவர்களுக்குப் படிப் பிற்கான நிதி வசதி, தங்குமிடவசதி, உணவுவசதி, பண உதவி, வேலை வாய்ப்பில் இட ஒதுக்கீடு போன்றவை தமிழகத்தில் சிறப்பாக ஏற்றம் பெற்றதில் தமிழகத்தின் ஒரு நூற்றாண்டுத் திராவிட இயக்க இதழ்களின் பெரும்பங்கும் உள்ளது.

தந்தை பெரியார் 1925இல் காங்கிரஸ் இயக்கத்திலிருந்து வெளிவந்த காலம் முதலாக அவர் செய்த பிரச்சாரப் பணியும் பத்திரிகைப் பணியும் தமிழகத்தில் திராவிட இதழ்களைப் படிப்பதற்கான வாசகர் பரப்பை விரி வாக்கின. அவர் குடிஅரசு, திராவிடன், ரிவோல்ட், பகுத்தறிவு, விடுதலை போன்ற இதழ்களை நடத்தித் தம் அடுத்த தலைமுறைக்குத் திராவிட இயக்க இதழ்களின் விரிவாக்கத்திற்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்தார்.

இத்திராவிட இதழ்களின் வளர்ச்சி தமிழ்நாட்டின் அனைத்துத் தளங் களிலும் தனது பாதிப்பை ஏற்படுத்தியது. காங்கிரஸ் ஆட்சிக்கு மாற்றான ஆட்சியையும் ஏற்படுத்திட இவ்விதழ்களின் பங்களிப்பு பெருமளவு துணை புரிந்தது. தனித்தமிழ் இயக்கம், திராவிட இயக்கம் இவைகளால் மொழி நடையில் பெரும் மாற்றம் நிகழ்ந்தது. தமிழ்மொழிக்கு அரசியல் அடிப்படை யிலான அங்கீகாரம் விளைந்திடவும் மறைமுகமாக இவ்விதழ்கள் பணி யாற்றியிருக்கின்றன. இத்துணைப் பன்முக வளர்போக்குகளையும் தம்முள் கொண்ட திராவிட இதழ்கள் குறித்த விரிவான ஆய்வு, வரலாறு முதலிய வற்றின் தேவையை உணர்த்திடும் தன்மையில் திராவிட இயக்க இதழ்கள் குறித்த இரு கருத்தரங்கங்கள் நடத்தப்பெற்றன. அவற்றுள் இரண்டாம் கருத் தரங்கக் கட்டுரைகள் இரண்டாவது தொகுதியாகத் தற்பொழுது வெளிவரு கின்றன. இத்தொகுதியில் பத்து கட்டுரைகள் தொகுக்கப் பெற்றுள்ளன.

### *ஒரு பைசாத் தமிழன் (1907)*

ஒருபைசாத் தமிழனிவ னுதவா னென்பார்
ஒருபைசாத் தமிழருமை யறியா மாந்தர்
ஒருபைசாத் தமிழனுண்மை யறியா ராயின்
ஒருகோடிப் பொன்னி ஃதென் றுரைப்பர் மாதோ

என்று 'ஒரு பைசாத் தமிழன்' இதழ் ஆசிரியர் அயோத்திதாசபண்டிதர் தம் இதழை அறிமுகம் செய்கிறார். இவ்விதழ் 19-6-1907இல் வெளிவந்தது. அயோத்திதாசர் தம் காலத்திலேயே இவ்விதழின் பெயரைத் 'தமிழன்' என்று மாற்றம் செய்தார். அவருடைய மறைவிற்குப் பிறகு இதழை அவரது

மகன் பட்டாபிராமன் நடத்தினார். அவருக்குப் பிறகு கோலார் தங்கவயல் ஜி. அப்பாதுரையார் பொறுப்பில் தமிழன் வெளிவந்தது.

கால்நூற்றாண்டிற்கும் மேலாக வெளிவந்த இவ்விதழில் பார்ப்பனீய ஆதிக்கத்தில் அடித்தள மக்கள் எப்படியெல்லாம் அவதியுற்றனர் என்பது விளக்கப்பட்டுள்ளது. வர்ணாசிரமக் கோட்பாட்டில் எழுந்த வைதீக சமயத்திலிருந்து சாதீய ஏற்றத்தாழ்வுகள் அற்ற பௌத்த மதத்தால் அடித்தள மக்கள் விடுதலை பெறுவர் என்பதை அயோத்திதாசர் விளக்கியுரைத்தார். பௌத்த மதக்கோட்பாடுகள், தாழ்த்தப்பட்ட மக்களை ஒருங்கிணைப் பதற்கான முயற்சிகள் போன்றவற்றை இவ்விதழின் மூன்று ஆசிரியர்களும் செய்துள்ளனர். தமிழ்நாடு மட்டுமன்றி பர்மா, மலேசியா, தென்னாப்பிரிக்கா, நேட்டால் போன்ற நாடுகளிலும் அக்காலத்தில் இவ்விதழுக்கான வாசகர் கள் இருந்தனர் என்பது பதிவு செய்யப்பட வேண்டிய ஒன்றாகும்.

### *நகர தூதன்(1930)*

பொது ஜன சேவை என்னும் போர்வையைப்
போர்த்திக் கொண்டும் உதட்டில் சர்க்கரையைத் தடவிக்
கொண்டும் உலகை மோசடி செய்துவரும் செய்கைகளைத்
தவிடு பொடியாக்கிப் பாமர மக்களைத் தட்டி எழுப்பிக்
கண் திறந்து வைப்பதே நமது போரின் தத்துவம்

என்று தம் இதழ்க் கொள்கையை அறிவித்து எம். இரத்தினம் 25-8-1930 முதல் 'நகர தூதன்' இதழை நடத்தினார். திருச்சியிலிருந்து வெளிவந்த இவ்விதழில் சாதீய அடுக்கு முறையில் தமிழர்கள் நிலை தாழ்ந்து போனதைக் குறித்துப் பல கட்டுரைகள் வெளிவந்தன. தமிழ் மொழிக்கு அன்றைய காலகட்டத்தில் இருந்த அபாயத்தை, சூழ்ச்சியைக் குறித்த விவரங்கள் இவ்விதழில் தரப்பெற்றுள்ளன. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் பல்வேறு அம்சங்கள் சிறப்பாக இவ்விதழில் பதிவு செய்யப் பெற்றுள்ளன.

ஈழத்துச் சிவானந்த அடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார், கி.ஆ.பெ. விசுவநாதம், மணவை திருமலைசாமி போன்றோர் தம் சிந்தனைகளை நகர தூதனில் பதிவு செய்துள்ளனர். திராவிடச் சிந்தனைகளை முதன்மைப் படுத்திய இவ்விதழில், 'முசோலினியின் முற்கால ஒழுக்கம்', 'ஸ்டாலின் - டிராஸ்கி விரோதிகளா?', 'பிரிட்டனில் 296 கோடீசுவரர்கள்', 'வீர பின்லாந்தின் போர்' போன்ற சமகாலத்து உலக நடப்புக் கட்டுரைகள் பலவும் வெளிவந்தன.

### *தனி அரசு (1948)*

ஏ.வி.பி. ஆசைத்தம்பியால் நடத்தப்பெற்ற திராவிட இயக்க ஏடு தனி அரசு. இது 1948இல் மாதமிருமுறை இதழாகத் தொடங்கப் பெற்று,

1959இல் நாளிதழாக மாற்றம் பெற்றது. 'வாலிபப் பெரியார்' என்றழைக்கப் படும் அளவிற்குப் பெரியாரின் பேச்சுப் பாணியைக் கைக்கொண்ட இவர் அன்றைய அரசியல் சூழல்களை வெளிப்படுத்தும் தலையங்கங்கள் பலவற்றைப் படிப்பவர்களை ஈர்க்கும் தன்மையில் இவ்விதழில் எழுதினார்.

சிறுகதைகள், தொடர்கதைகள், திரைப்பட விளம்பரங்கள், புத்தக மதிப்புரை, இலக்கியத் திறனாய்வு ஆகியவற்றோடு 'பேனா நண்பர்கள் சங்கம்' என்ற பகுதியும் 'விவாதப் பகுதி'யும் இதழின் முதன்மைப் பகுதி களாக விளங்கின. தனி அரசு இதழில் பி.வி. கிரி, ப.சி.அ. வணங்காமுடி, சோ. ரங்கநாதன், பி.எல். இராசேந்திரன் போன்ற பலர் பணியாற்றி இதழ் வளர்ச்சிக்குத் துணை நின்றனர். படைப்பாளிகள் அன்றியும் இவ்விதழில் அறிஞர் வெ. சாமிநாத சர்மா, முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம், டாக்டர் மா. இராசமாணிக்கனார், பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம் போன்ற அறிஞர் பலரும் தங்கள் எண்ணங்களைப் பதிவு செய்துள்ளனர்.

## *நம்நாடு (1953)*

பேரறிஞர் அண்ணா பொறுப்பாசிரியராகவும் நாவலர் நெடுஞ்செழியன் வெளியீட்டாளராகவும் இருந்து நம்நாடு இதழை நடத்தினர். திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கைகளை மக்களுக்கு எடுத்துச் செல்வதில் முதன்மையான பங்காற்றிய நம்நாடு 15-7-1953இல் தொடங்கப்பெற்றது. அறிஞர் அண்ணா எழுதிய தலையங்கங்கள் இவ்விதழுக்கான வாசகர் களை அதிகப்படுத்தின. அண்ணாவுக்கே உரிய எழுத்துப் பாணியில், 'பாவ சங்கீர்த்தனம்', 'எருதின் புண் காக்கை அறியுமோ?', 'சர்க்கரை இனிக்கவில்லை', 'வெண்ணெய் இருக்க நெய்க்கு அலையும் விந்தை', 'ஆடு நனைகிறது என்று ஓநாய் அழுகிறது' போன்ற தலையங்கங்கள் அன்றைய அரசியல் நடப்புகளைப் பாமரரும் அறியும் வண்ணம் இனிய - எளிய தமிழில் இதில் வெளிவந்தன. அன்றைய தி.மு.க.வின் முன்னணிப் பேச்சாளர்களாகவும் எழுத்தாளர்களாகவும் திகழ்ந்த கலைஞர் மு. கருணாநிதி, நாஞ்சில் கி. மனோகரன், சி.பி. சிற்றரசு, ஆர்.எஸ். பாண்டியன் போன்றவர் களும் இவ்விதழில் எழுதியுள்ளனர்.

## *கலை மன்றம் (1954)*

பெரிய எழுத்துப் பாடல் நூல்கள், திரைப்படப் பாடல் நூல்கள், பஞ்சாங்கம் போன்ற நூல்களை வெளியிட்டதன் மூலம் தமிழகத்தில் பரவலாக அறியப்பட்ட ஒரு பதிப்பு நிறுவனம் ஸ்ரீமகள் கம்பெனியாகும். இப்பதிப்பு நிறுவனத்தின் வெளியீடாகக் 'கலைமன்றம்' என்னும் வார இதழ் 1954ஆம் ஆண்டு முதல் வெளிவரத் தொடங்கியது. திராவிட இயக்கச் சிந்தனைகளைத் தன்னுள் கொண்டிருந்த இவ்விதழின் ஆசிரிய

ராகப் பால்வண்ணன் திகழ்ந்தார். அவர், அழகிய வண்ணத்தாளில் அட்டைப் படம் தயாரித்து இதழை அழகியல் உணர்வோடு வெளிவரச் செய்தார்.

கவிஞர் சுப்பு ஆறுமுகம், வே. தில்லைநாயகம், க.த. திருநாவுக்கரசு, கபிலன், கோ.வி. மணிசேகரன், கௌதமன், க.வேழவேந்தன் முதலியோர் இவ்விதழில் எழுதியவர்களில் குறிப்பிடத்தகுந்தவர்கள் ஆவர்.

## *கதிர் (1965)*

ஓர் ஆண்டுக்கும் குறைவான காலமே வெளிவந்து நின்றுபோன திராவிட இயக்க இதழ்களுள் கதிரும் ஒன்றாகும். 'இலக்கியத் திங்கள் இதழ்' என்ற அடையோடு திராவிட இயக்கச் சிந்தனைகளை வளர்ப்பதில் கதிர் தன் பங்கைச் சிறப்புறச் செய்துள்ளது. அக்டோபர் 1965முதல் நவம்பர் 1966வரையிலும் வெளிவந்த இவ்விதழின் ஆசிரியராகப் புகழேந்தி பணி யாற்றினார்.

> "அண்டை மாநிலங்களான - தென்னாட்டின் பிறபகுதிகளான ஆந்திரத்திலும் கர்னாடகத்திலும் கேரளத்திலும் வளர்ந்து வரும் இலக்கிய உணர்வுகள் பற்றித் தமிழில் முறையாகச் சொல்லப்பட வில்லை. அந்தக் குறையைப் போக்கும் பெருமுயற்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வருகிறது கதிர்"

என, இவ்விதழின் நோக்கம் அறிஞர் அண்ணாவால் எடுத்துரைக்கப் படுகிறது.

படைப்பிலக்கியத்திற்குக் கதிர் அளித்த கொடை குறிப்பிடத்தக்கது. அறிஞர் அண்ணா, கலைஞர் மு. கருணாநிதி, அகிலன், ஆர். சூடாமணி, ஆ. மாதவன், சுந்தர ராமசாமி, எம். வி. வெங்கட்ராம், கி. ராஜநாராயணன் போன்றோரின் சிறுகதைகள் இவ்விதழில் வெளிவந்துள்ளன. சிறந்த தெலுங்குக் கதைகளை எம்.எஸ். கமலா என்பவரும் சிறந்த கன்னடக் கதைகளைச் சேஷ நாராயணா என்பவரும் மொழி பெயர்த்துத் தந்துள்ளனர். மலையாளக் கதைகளை ஆ. மாதவன், கோ. முருகேசன், தி.வே. திருமாறன், நீல. பத்மநாபன், நகுலன் போன்ற சிறந்த எழுத்தாளர்கள் தமிழாக்கம் செய்துள்ளனர்.

மேலும் கவிதை, இலக்கியத் திறனாய்வு, நூல் மதிப்பீடு, உலகச் செய்திகள் போன்றவற்றையும் வெளியிட்டுத் திராவிட இயக்கச் சிந்தனை கொண்ட சிறந்த இலக்கிய ஏடாகக் கதிர் திகழ்ந்தது.

## *இதழாளர் பாரதிதாசன்*

திராவிட இயக்க இதழாளர்களில் பாரதிதாசன் மிகவும் பரந்த தளத்தில் செயலாற்றியவர். ஸ்ரீசுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம்,

புதுவை முரசு, முல்லை, குயில் போன்ற இதழ்களை நடத்தியும் அவர் வாழ்ந்த காலத்தில் வெளிவந்த திராவிட இயக்க இதழ்களில் எழுதியும் ஆதரவு அளித்தும் பாரதிதாசன் ஆற்றிய பணி சிறப்பாக ஆராய்வதற்குரிய தளங்களில் ஒன்றாகும். தாம் நடத்திய இதழ்கள் வழியாகப் பாரதிதாசன் உருவாக்கிய கவிஞர்கள் இன்றும் சிறப்புறச் செயல்பட்டு வருகின்றனர்.

## இதழாளர் சி.பி. சிற்றரசு

பேரறிஞர் அண்ணா பிறந்த காஞ்சிபுரத்தில் அவரைப் போன்றே சிறந்த திராவிட இயக்க இதழாளராக உருவாகியவர் சி.பி. சிற்றரசு. பகுத்தறிவுச் சிந்தனையும் தமிழ்மொழிப் பற்றும் கொண்ட இவர் 'தீப்பொறி' என்ற இதழைத் தொடங்கினார். அதில் விடுதலைக்கும் சீர்திருத்தக் கருத்துகளுக்கும் முதன்மை கொடுத்து எழுதினார். சாக்ரடிஸ், வால்டேர் தொடங்கிப் பல சிந்தனையாளர்களை - அறிஞர்களைப் பற்றி எளிய மக்களும் அறியும் வண்ணம் பல கட்டுரைகளை எழுதினார்.

'தீச்சுடர்' என்ற இதழையும் இவர் நடத்தியுள்ளார். 'இனமுழக்கம்' இதழையும் ஆசிரியராக இருந்து நடத்திய சி.பி. சிற்றரசு 'முன்னணி' போன்ற பல இதழ்களிலும் எழுதியுள்ளார்.

## இதழாளர் வே. ஆனைமுத்து

பெரியாரின் திராவிட இயக்கக் கொள்கைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் வே. ஆனைமுத்து. 'குறள் மலர்' ,'குறள் முரசு' என்னும் வார இதழ்களை அவர் நடத்தினார். 1974ஆம் ஆண்டு முதல் 'சிந்தனையாளர்' என்னும் இதழையும் 1994ஆம் ஆண்டு முதல் Periyar Era என்னும் இதழையும் நடத்தி வருகிறார். அத்துடன் திராவிட இயக்கத்தின் பிற இதழ்களிலும் தொடர்ந்து திராவிட இனம், சமுதாயம், பண்பாடு, கல்வியியல் கொள்கைகள், உரிமைகள் குறித்து உரத்த சிந்தனையோடு வே. ஆனைமுத்து எழுதி வருகிறார்.

இதழாளர் வே. ஆனைமுத்துவின் பணியை (அ) தாய்மொழிக் கல்வி, தமிழின மேம்பாடு, (ஆ) வகுப்புரிமைப் போராட்டம், (இ) வருணாசிரம ஒழிப்பு, (ஈ) இந்திய அரசியல் சட்டம் வெகுமக்களுக்கு எதிரானது என்னும் உறுதியான நிலைப்பாடு, (உ) மார்க்சிய - பெரியாரிய நெறியில் இந்தியக் கூட்டாட்சி என ஐந்தாகப் பிரித்துக் காணலாம் எனக் கட்டுரை யாளர் விளக்குகிறார்.

## இதழாளர் டி.கே. சீனிவாசன்

ஆன்மிக உணர்வு மிகுந்ததொரு குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவ ரான டிகே. சீனிவாசன் நீதிக்கட்சியில் உறுப்பினராகி, திராவிட இயக்கத்தில்

ஆழ்ந்து நிறைந்தவர். தீவிர இயக்கப் பணிகளின் இடையே இதழ்ப் பணிகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர்.

'ஞாயிறு', 'தாய் நாடு' போன்ற இதழ்களில் பணியாற்றிய டி.கே. சீனிவாசன் தம்முடைய தனித்தன்மை வாய்ந்த எழுத்தாற்றலால் சிறப்பாக அறியப் பெற்றவர்.

'ஞாயிறு' இதழில், 'சமூக நீதி' என்ற தலைப்பில் தி.மு.க.வின் கொள்கை விளக்கம் பற்றி எழுதியும், 'எங்கள் குடும்பம், என்ற தலைப்பில் தி.மு.க. தலைவர்களின் சாதனைகள் பற்றி எழுதிய வாழ்க்கை வரலாற்றுத் தொடரும் பரவலான வரவேற்பைப் பெற்றன. 'செல்லரித்த நோட்டும் செல லாத சில்லறையும்' என்ற தலைப்பில் 'தாய்நாடு' இதழில் எழுதிய அரசியல் விமரிசனக் கட்டுரைகள், வெளிவந்த காலத்தில் சிறப்பாகப் பேசப்பட்டன.

தம்முடைய ஆற்றல்மிக்க இதழ்ப் படைப்புகளால், திராவிட இயக்க இதழியல் வரலாற்றில் தடம் பதித்தவர் டி.கே. சீனிவாசன்.

நிறுவனச் சார்பில் நடைபெறும் இதழியல் கருத்தரங்குகளில் ஆய்வுரை, அமர்வுத் தலைமையுரை, கருத்துரை, சிறப்புரைகள் வழங்குவதற்கு உரிய அறிஞர்களைத் தேர்வு செய்யும் குழுவினர் முனைவர் பொற்கோ, முனைவர் இரா. இளவரசு, முனைவர் இ. சுந்தர மூர்த்தி, திரு.மா.ரா. அரசு ஆகியோருக்கு நன்றி.

இதழியல் கருத்தரங்குகளை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தோடு இணைந்து நடத்த இசைவளித்ததோடு கருத்தரங்குகள் சிறப்புற நடை பெற ஒத்துழைப்பு நல்கிய இந்நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு நன்றி.

இந்நூல் வெளியீட்டில் பெரிதும் ஈடுபாடும் ஆர்வமும் காட்டிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கு நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

பல்வேறு காலங்களில் பல்வேறு உயரிய நோக்கங்களுக்காகத் தொடங்கப் பெற்ற திராவிட இயக்க இதழ்களைக் கட்டுரையாளர்கள் அரிதாகத் தேடிச் சிறப்பாக வடிவமைத்துத் தந்திருக்கிறார்கள். அவர்களின் கட்டுரைகள் முறையாகத் தொகுக்கப் பெற்று நூல் வடிவம் பெறுவது தமிழ் ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் நலம் பயக்கும் என்பதில் ஐயமில்லை. தகவல் பெட்டகமாகக் கட்டுரைகளை உருவாக்கிய அனை வருக்கும் நன்றி. இந்நூல் உருவாகும்போது அச்சுப் பணிகளில் பெரிதும் துணை நின்ற முனைவர் கி. ஜெயகுமார் அவர்களுக்கு நன்றி.

# பொருளடக்கம்



ooo

## கட்டுரையாளர்கள்

1. திரு. அம்பேத்கர் பிரியன்
சென்னை.

2. திரு பி.எல். இராசேந்திரன்
167, பீட்டர்ஸ் ரோடு
இராயப்பேட்டை, சென்னை - 600014.

3. திரு. டி.கே.எஸ். இளங்கோவன்
C-5, இலாயிட்ஸ் காலனி
இராயப்பேட்டை, சென்னை - 600014.

4. கவிஞர் பி.வி. கிரி
N-பிளாக், 385(1)
இருபதாவது தெரு
அண்ணாநகர் கிழக்கு, சென்னை - 600102.

5. திரு. க. சந்திரசேகரன்
ஆசிரியர்
நிலவளம், சென்னை - 600 004.

6. கவிஞர். தமிழேந்தி
வள்ளுவர் இல்லம்
இராஜாஜி தெரு, அரக்கோணம் - 631001.

7. திரு. ப. புகழேந்தி
16, யுனைடெட் இந்தியா காலனி
முதல் மெயின் ரோடு
கோடம்பாக்கம், சென்னை - 600 024.

8. முனைவர் பூவண்ணன்
1, பாரதி பூங்கா
நான்காம் குறுக்குச் சாலை
சாயிபாபா காலனி, கோவை - 641011.

9. திரு. மா.ச. மதிவாணன்
7/29, 6th சென்ஸ் பதிப்பகம்
மேட்லிசாலை, தி. நகர், சென்னை - 600 017.

10. குறிப்பு: திரு. வே. கபிலன் காலமாகிவிட்டதால்
அவர் முகவரி இங்கு இடம் பெறவில்லை.

# ஒரு பைசாத் தமிழன்

## அம்பேத்கர்பிரியன்

யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழியைப்போல்
இனிதாவது எங்கும் காணோம்.

எனும் பெருமையால் உலக மொழிகளுக்கெல்லாம் மூத்த, முதல் மொழி எனும் வரலாற்றுப் பெருமை திராவிட மொழிகளிலே தலைசிறந்த மொழி யாம் தமிழுக்குண்டு.

செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே.

எனும் எழுச்சி முழக்கமானது தன்மானமுள்ள, பகுத்தறிவுச் சிந்தனைக்குச் சொந்தமான தமிழுக்குண்டு... தமிழன் வாழ்ந்துவரும் தமிழகத்திற்கு உண்டு... ஆக வரலாற்றில் பெருமைகொண்ட தமிழ்ப் பெண்ணை மலர்ப் பாதைபோட்டு மனித இனத்திற்கு அறியாமை இருட்டிலிருந்து விடியலுக்கு அழைத்து வந்த பெருமை பகுத்தறிவுப் பகலவன், பௌத்த நெறியாளர், முப்பாலை முறையாக மனித இனத்திற்கு உணர்த்திய திருவள்ளுவருக்குண்டு.

பகுத்தறிவு சிந்தனை மங்கிக் காணப்பட்ட சமுதாயக் குப்பைகளை அறிவுப் பேனாவால் சுட்டெரித்த தீயாக விளங்கியவர்தான் திருவள்ளுவர். 'பகுத்தறிவுச் சிந்தனையை முதன்முதலில் உலகிற்கு அறிமுகம் செய்தவர் பகவான் புத்தர்... பகவான் புத்தருக்குப் பின் பகுத்தறிவை மனித சமுதாயத் திற்குப் போதித்த பெருமை பகுத்தறிவுப் பகலவன் திருவள்ளுவருக்கு உண்டு... திருவள்ளுவருக்குப்பின் பகுத்தறிவுச் சிந்தனையை ஒவ்வொரு மனிதனுக்கும் போதித்த பெருமை 'பகுத்தறிவுப் பாட்டன்' பண்டிதமணி க. அயோத்திதாசர் அவர்களுக்குண்டு... பண்டிதர் க. அயோத்திதாசர் பகுத்தறிவுச் சிந்தனையை உலகிற்கு ஊட்டிய பெருமை 'ஒரு பைசாத் தமிழன்' எனும் இதழுக்குண்டு...

அந்த இதழின் பெருமையைக் காண்போம்.

## ஒரு பைசாத் தமிழன் இதழ் ஆசிரியர்

இந்து மதம் என இன்று அழைக்கப்படுகின்ற பண்டைய வேத மதம் விரித்த மூடநம்பிக்கை எனும் திரையை, பழுத்த பகுத்தறிவு எனும் கூரிய வாளால் நார்நாராகக் கிழித்தெறியத் துணிந்தவர்தான் தமிழ் மண்ணின் பகுத்தறிவுப்பாட்டன் க. அயோத்திதாசர்.

பகுத்தறிவுத் தந்தை பெரியார், சிந்தனைச்சிற்பி சிங்கார வேலர், தமிழ்த் தென்றல் திரு.வி. கல்யாணசுந்தரனார் இவர்களால் போற்றப்பட்ட முன்னோடி வழிகாட்டி, முற்போக்குக் கருத்துக்களைச் சம்மட்டியால் அடித்தது போல் மக்களுக்குப் போதித்தவர், சுதந்திரம் பெறாத இந்தியத் திருநாட்டில் தமிழ் - தமிழன் - தமிழகம் எனும் வீரமுழக்கத்தைச் சுதந்திரமாகப் பேசியவர்; எழுதியவர்.

1845இல் கந்தசாமிக்கு மகனாகப் பிறந்த இவருக்குத் (தாயின் பெயர் அறிய முடியவில்லை) கார்த்தவராயன் எனப் பெயர் சூட்டப்பட்டது. இவருக்குத் தமிழ்போதித்த ஆசிரியர் ‘அயோத்திதாஸ் கவிராச பண்டிதர்’ என்பவரின் பெயரைப் பிற்காலத்தில் குருபக்தி காரணமாக ஏற்று ‘அயோத்தி தாஸ்’ எனும் பெயரால் அழைக்கப் பெற்றார்.

இவர் நீலகிரியில் வாழ்ந்த காலத்தில் மலைவாழ் பழங்குடி மக்களின் முன்னேற்றமான வாழ்விற்குத் தன்னை முழுவதுமாக ஈடுபடுத்திக்கொண் டார். இவரது முதல் மனைவிக்குத் தசரதராமன் என்னும் மகன் பார்வையற்ற வராகப் பிறந்தார். இரண்டாவது மனைவியாக தாத்தா ரெட்டைமலை சீனிவாசன் அவர்களுடன் பிறந்த தனலட்சுமி அம்மையாரை மணந்தார்; இந்தத் தம்பதி யினருக்கு ஆறு குழந்தைகள் பிறந்தன. முதல் மகன் பட்டாபிராமன், 2ஆவது மகன் மாதவராம், 3ஆவது மகன் ஜானகிராமன், 4ஆவது மகன் ராஜாராம், 5ஆவது மகள் அம்பிகாதேவி, 6ஆவது மகள் மாயாதேவி.

நீலகிரியில் துளசிமடம் தொடங்கினார். 1870இல் ‘அத்வைதானந்த சபை’யை ஏற்படுத்தினார். இந்து மதத்தின் சீர்கேட்டை எதிர்த்த இவர் இலங்கை சென்று பவுத்தராக மதம் மாறினார். தென்னிந்திய சாக்கைய பவுத்த சங்கத்தைத் தொடங்கிப் பவுத்த மதத்தைத் தமிழ் மண்ணில் பரப்பிய பெருமை இவருக்குண்டு.

பண்டிதமணி க. அயோத்திதாசர் பல நூல்களை எழுதியுள்ளார். அனைத்து நூல்களும் வெளிவராமல் இருட்டடிப்பு செய்யப்பட்டுள்ளது. இவரது ‘ஆதிவேதம்’ எனும் நூல் சிறப்பு பெற்றது ஆகும்.

ஒரு பைசாத் தமிழன் - பிற்காலத்தில் தமிழன் என பெயர் மாற்றம் செய்யப்பட்டது. இவ்விதழ் பிற்காலத்தில் விடுதலை பெறாத இந்தியத்

திருநாட்டில் மனித உணர்வுகளை, பகுத்தறிவுச் சிந்தனைகளை, அரசியல் சூழ்ச்சிகளை மக்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டிய இதழாகும்.

ஆதிதிராவிடர் மகாஜன சபையைத் தொடங்கி 1.12.1891இல் நீலகிரியில் மாநாட்டைக்கூட்டிப் பத்து அம்சக் கோரிக்கையை அன்றைய ஆங்கில அரசுக்கு அளித்த பெருமை இவருக்கு உண்டு.

சிந்தனைச் சிற்பி சிங்கார வேலர், இலட்சுமி நரசு ஆகியோர் பண்டித மணியோடு இணைந்து பவுத்த மதம் மாறியதோடு, பவுத்த மதத்தைத் தமிழகத்தில் வளர்த்தார்கள். தென் இந்திய சாக்கைய பவுத்த சங்கம் தொடங்கி பல கிராமங்களில் கிளைகளை ஏற்படுத்திப் பவுத்த மதத்தைப் பரவச் செய்தனர்.

பிளவட்ஸ்கி அம்மையார் மற்றும் கலோனியால் ஹென்ஸ் டீல் ஆல்காட் ஆகியோருடன் பிரும்ம ஞான சபையின் ஆதரவுடன் முதன் முதலில் பஞ்சமர் பள்ளி தொடங்கிய பெருமை இவருக்கு உண்டு.

இவரது பெருமைக்கும் புகழுக்கும் சாட்சியமாக விளங்குவது ‘ஒரு பைசாத் தமிழன்’ எனும் வார இதழ் ஆகும். வரலாற்றை உருவாக்கி வரலாறாக வாழ்ந்துகொண்டிருக்கும் பண்டிதமணி 5.5.1914இல் மறைந்தார். அவர் மறைந்தாலும் அவரது பகுத்தறிவுச் சிந்தனை இன்றும் தமிழ் மண்ணில் எவராலும் மறைக்கவோ அல்லது மறுக்கவோ, முடியாத அளவிற்கு வளர்ந்து வருவதைக் காண்கின்றோம்.

இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன் தமிழ் மண்ணில் தமிழர்களால் நடத்தப்பட்ட பத்திரிகைகள் ஏராளம். இன்று தலித் இலக்கியத்தில் பரவலாக வளர்ந்துவரும் இச்சூழ்நிலையில் விடுதலை பெறாத இந்தியாவில் தமிழ்மொழி வளர, தமிழின் தன்மானம் காக்க, பகுத்தறிவுச் சிந்தனைக் கருத்துக்களை மக்களிடையே போதித்த பெருமை ஆதிதிராவிடருக்கு உண்டு. அடிமை விலங்கினை முத்தமிட்ட இந்தியர்களுக்குப் பத்திரிகை உலகில் சுதந்திர மனிதர்களாகச் செயல்பட்ட பெருமை ஆதிதிராவிடருக்கு உண்டு. ஆதிதிராவிட எழுத்தாளர்கள் நடத்தி வந்த பெருமை வாய்ந்த பத்திரிகைகள் இன்றும் பத்திரிகையின் பெருமைக்கு, வளர்ச்சிக்கு வித்திட்டன என்றே சொல்லலாம். அந்த வகையில்,

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரியோதயம் | - | 1869 |
| 2. | பஞ்சமன் | - | 1871 |
| 3. | திராவிடமித்திரன் | - | 1885 |
| 4. | திராவிடத்தூதன் | - | 1888 |
| 5. | பறையன் | - | 1893 |

| | | | |
|---|---|---|---|
| 6. | இல்லற ஒழுக்கம் | - | 1898 |
| 7. | பூலோக வியாசன் | - | 1900 |
| 8. | ஒரு பைசாத் தமிழன் | - | 1907 |
| 9. | ஆன்றோன் மித்திரன் | - | 1910 |
| 10. | ஆதிதிராவிடமித்திரன் | - | 1939 |
| 11. | புத்துயிர் | - | 1940 |
| 12. | ஜெய்பீம் | - | 1940 |
| 13. | தமிழ் (கோலார்) | - | 1956 |

இவைகளுள் 'ஒரு பைசாத் தமிழன்' எனும் வார இதழ் சுதந்திரம் பெறாத காலத்திலேயே உலகமெலாம் கொள்கையை எடுத்துப் போதித்ததோடு, உலகச் செய்திகளையும் வெளியிட்டுவந்தது.

**ஒரு பைசாத் தமிழன்**

பண்டிதமணியின் சமுதாய மற்றும் தமிழ்ப்பற்றுக்கு எடுத்துக் காட்டாக விளங்கியது அவரது 'ஒரு பைசாத் தமிழன்' என்னும் வார இதழாகும். பவுத்தத்தின் பெருமைகளை மக்களுக்கு எடுத்துச்சொல்லும் கொள்கை ஏடாக அது வெளிவந்துகொண்டிருந்தது.

அவரது ஒரு பைசாத் தமிழன் என்னும் வார இதழ், இதழியல் வரலாற்றில் தனி இடம் பெற்றதோடு மாபெரும் சாதனையையும் படைத் துள்ளது. 'எழுதுகின்றவர்கள் எல்லாரும் எழுத்தாளர் அல்லர். எவன் ஒருவன் எழுத்தை ஆள்கின்றானோ அவனே எழுத்தாளன்' என்னும் பெருமைக்கு இலக்கணமாகத் தனது எழுத்தாற்றல் மூலமாகத் திகழ்ந்தவர் அயோத்திதாசர்.

ஆங்கிலேயர் இந்திய நாட்டை ஆண்டபொழுது, கிறித்தவ மதத் திற்கு முக்கியத்துவம் கொடுத்தனர். அப்படிப்பட்ட கிறித்தவ மதத்தின் சொந்தக்காரர்கள் நாட்டை ஆண்டகாலத்தில்கூடப் பவுத்த மதத்தின் பெருமைகளை ஒரு பைசாத் தமிழன் மூலமாகத் துணிவுடன் அவர் எடுத்துச்சொன்னார் என்றால் அதற்குக் காரணம், அவரது அஞ்சாமையும் ஏற்றுக்கொண்ட கொள்கையில் கொண்டுள்ள பற்றுமே ஆகும்.

தாழ்த்தப்பட்ட தமிழனின் வறிய நிலையை உணர்த்தும் வகையில் ஒரு பைசாத் தமிழன் என்னும் தலைப்பில் ஒவ்வொரு வாரமும் புதன் கிழமை வெளிவரும் இதழினைப் பண்டிதமணி அவர்கள் நடத்தி வந்தார். தமிழன் தமிழ் உணர்வோடு வாழவேண்டும் என்னும் எண்ணத்தில் 'தமிழன்' என்னும் பெயர்சூட்டி நடத்திய இதழ் மூலமாகத் தமிழனுக்கும் தமிழுக்கும் பெருமை சேர்த்தார் அயோத்திதாசப் பண்டிதர்.

ஒரு பைசாத் தமிழன் முதல் இதழ் நான்கு பக்கங்களைக் கொண்டு புதன்கிழமைதோறும் காலணா விலையில் சென்னை - இராயப்பேட்டை யிலிருந்து 19.06.1907 முதல் வெளிவந்தது.

பொருளியலில் எத்தகைய வறுமையில் வாடுகின்றார் பழந்தமிழர் என்பதனை உணர்த்தவே இப்படி ஒரு தலைப்பை இவர் சூட்டினாரோ எனவும் எண்ணத் தோன்றுகிறது.

பத்திரிகை என்பது ஒரு கோடிப்பொன் விலைமதிப்பிற்குச் சமமானது என்பதனைத் தமிழ் வாழ்த்து எனும் கவிதையில் முதல் இதழிலேயே இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் பண்டிதமணி.

**ஒரு பைசாத் தமிழனிவ னுதவா னென்பார்**
**ஒரு பைசாத் தமிழருமை யறியா மாந்தர்**
**ஒரு பைசாத் தமிழனுண்மை யறியா ராயின்**
**ஒரு கோடிப் பொன்னிஃதென் றுரைப்பர் மாதோ**

தத்துவ சாஸ்திரிகளில் சிலரும், வித்தியா சாஸ்திரிகளில் பலரும் இரசாயன சாஸ்திரிகளில் சிலரும் ஒன்றுகூடி இப்பத்திரிகையை 'ஒரு பைசாத் தமிழன்' என வெளியிட்டு இருக்கின்றோம். தமிழ் மணம் பரவ விரும்பும் தமிழர் ஒவ்வொருவரும் கையொப்பம் வைத்ததனை யாதரிக்கக் கோருகின்றோம்' என்று பத்திரிகை பாயிரத்தில் கூறுகின்றது. இவ்வாறு ஒரு பைசாத் தமிழன் இதழ், சமுதாய நோக்கில் பல்வேறு உண்மைக் கருத்துக் க்ளை மக்களுக்குப் புகட்டி இதழியல் வரலாற்றில் புதிய மாற்றத்தை உரு வாக்கியது. பவுத்த சமயத் தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும், பிற தமிழ் இலக்கியச் செய்திகளையும், புலமைத்திறம் நனி விளங்க அணிவகுத்துக் காட்டியுள்ளார், இவ்விதழின் ஆசிரியர் அயோத்திதாசப் பண்டிதர்.

'தமிழ் மாது' எனும் பத்திரிகையின் ஆசிரியர் கோ. சொப்பநேஸ்வரி என்பவர்,

> இப் பத்திரிகை (ஒரு பைசாத் தமிழன்) வாசிப்பதால் பல புராதன நூல்களின் கருத்துக்களையும் எளிதில் அறிய லாகும்...

என்று தெளிவாகக் கூறியுள்ளார். இவருடைய 'இந்து தேச பூர்வ பெண்களின் கல்வி' எனும் கட்டுரை ஒரு பைசாத் தமிழன் இதழில் வெளிவந்துள்ளது.

### *பவுத்த நெறியின் படைக்கலன்*

பூர்வத்தமிழொளி எனும் தலைப்பில் பவுத்தநெறித் தொடர்க்கட்டுரை, கலையரங்கப்பகுதியாக வெளிவந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இந்தத்

தலைப்பின்கீழ் ஆரிய ஆதிக்க எதிர்ப்பு மூலம், தாழ்த்தப்பட்டோரின் மனக்குமுறல்களை வெளிப்படையாக அயோத்திதாசர் முனைப்புடன் எழுதி வந்தார்.

பவுத்த நெறிமுறைகளும் அறவழியாகிய தம்மபதத்தின் தனிச் சிறப்பும் கவுதம புத்தரின் வாழ்க்கை வரலாறும் ஆங்காங்கே இதழில் பளிச்சிட்டன. இவ்விதழ் நான்கு பக்கங்களைக்கொண்டு வெளிவந் தாலும், இந்த நான்கு பக்கங்களிலும் பவுத்தக் கொள்கைகளை மக்கள் இடையே பரப்பிடச் செய்யும் பகுதிகள் ஒவ்வொரு வாரமும் வெளிவந்த தால் மக்களின் எண்ணத்தில் பவுத்தத்தின் தனிச்சிறப்பு நன்கு வளர்ந்தது. பாலி மொழியில் காணப்படும் பவுத்தத்தின் முக்கிய நோக்கங்களையும் அறவுரைகளையும் (போதனைகளையும்) மொழியாக்கம் செய்து இறுதியில் தமிழ்மொழி வாயிலாகப் பவுத்தத்தைப் பரப்பும் வகையிலே அதன் படைக்கலனாகவே இவ்விதழ் வெளிவந்தது.

இந்து மதத்தில் காணப்படும் குறைபாடுகளை எடுத்துச் சொல்வ துடன், பவுத்தத்தின் பெருமைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லும் முறையிலேயே பண்டிதமணி அவர்கள், இவ்விதழினை நடத்தி வந்தார். இவ்விதழ் மக்களுக்குப் பயன்தரும் பல செய்திகளைத் தாங்கி வெளி வந்தது தமிழருக்கே பெருமை.

**ஒரு பைசாத் தமிழன் – சமுதாயப் பார்வை**

ஒரு பைசாத் தமிழன் இதழில் இன்றைக்கு வெளிவந்து கொண்டி ருக்கும் தலித் மற்றும் பகுத்தறிவு இலக்கியங்களுக்கான வித்துகள் அன்றே பரவலாகத் தூவப்பட்டுவிட்டன. தாழ்த்தப்பட்ட மக்களின் பல்வேறு சமுதாயப் பிரச்சினைகளையும் ஆதாரங்களின் அடிப்படையில் அன்றே பண்டிதமணி எழுதிவந்தார்.

தேசியக் காங்கிரஸ் இயக்கத்தின் பெயரால் சுதேசிய இயக்கங்கள் ஆதிதிராவிட மக்களின் பிரச்சினையில் ஏன் தாமதம் காட்டுகின்றன என்ப தனைப் பல தொடர்க் கட்டுரைகள் மூலமாக எடுத்துக்காட்டினார். குடிநீர்ப் பிரச்சினை, சுடுகாட்டிற்குப் பாதை வசதி போன்ற அவசியமானவை மறுக்கப்படும் அவலங்களைத் துணிந்து எழுதினார் பண்டிதமணி. ஆதி திராவிட மக்களின் பல்வேறு குறைகளை இதழில் சுட்டிக் காட்டியதோடு அல்லாமல் அரசு அதிகாரிகள் இவற்றில் எந்த அளவிற்கு மெத்தனப் போக்கோடு நத்தைகளாகச் செயல்பட்டு வருகின்றனர் என்பதனையும் துணிந்து சுட்டிக்காட்டினார்.

தலித் இலக்கியம் என்பது இக்காலங்களில் பரவிடத் தொடங்கினாலும் அக்காலத்தில் எழுத்தாளர்கள் குறைவு என்றுதான் சொல்ல வேண்டும்.

அப்படியே எண்ணிக்கை குறைவாகக் காணப்பட்டாலும், இதழில் துணிந்து எழுதும் மனப்பக்குவம் பண்டிதமணியைப்போன்று எத்தனை பேருக்கு இருந்தது என்று கேட்டால் இல்லை என்றுதான் சொல்ல முடியும்.

### *அரசியல் பார்வை*

'வருத்தமானம்' எனும் தலைப்பில் அக்கால அரசியலைப்பற்றி மிகச்சுருக்கமாக இவ்விதழில் வெளியிடப்பட்டுள்ளது. இந்தியாவில் நிலவும் அகில இந்திய அரசியல் கண்ணோட்டம் பற்றி நாட்டுப்புற ஊர் மக்க ளிடையே நல்ல சிந்தனைக்கருத்துக்களைப் பண்டிதமணி தூவிவந்தார்.

ஆங்கில அரசுக்கு எதிராக நாட்டில் நிலவும் விடுதலைப் போராட்டச் செய்திகளை அவ்வப்பொழுது தொகுத்து எழுதிவந்தார். ஆயினும் ஆங்கிலேய அரசுக்கு எதிரான போராட்டங்களை ஆதரிக்காத போக்கி லேயே அச்செய்திகள் வெளிவந்தன. பின்வரும் செய்தித் திறனாய்வை 25.3.1908ஆம் நாளிட்ட ஒரு பைசாத் தமிழன் இதழில் காண்கிறோம்.

அமிதவாதிகள் என்னும் ஒரு கட்சியும் மிதவாதிகள் என்னும் ஒரு கட்சியும் இத்தேசத்தில் தோன்றி ரூபாய்க்கு 4படி அரிசியையும் பெற முடியாமல் போராட்டத்தில் குண்டடிபட்டுச் சாவும் குடும்பத்தார் குடிக்கக் கூழுக்கும் கட்ட துணிக்கும் அலைவதிலும் ஒரு பெரும் பலனைத் தேடி விட்டார்கள். அந்தோ - இவ்வகை வீண் வீறாப்பில் மடிந்தவர்கள் ஓர் அரசாங்க யுத்தத்தில் மடிந்திருப்பார்களாயின் தனது பெண்சாதி, பிள்ளை களுக்கு உபகாரச் சம்பளமேனும் கிடைக்கும்.[1]

அந்நாளில் காங்கிரஸ் கட்சிக்குத் தலைமை ஏற்றவர்களில் பெரும் பாலோர் உயர்சாதி இந்து மதத்தினராகவே இருந்தனர். அவர்கள் ஆதி திராவிடர் துன்பங்களை நீக்க அக்கறைகாட்டாத காரணத்தால்தான் அக்கட்சியினர் நடத்திய போராட்டங்களை அயோத்திதாசப் பண்டிதர் ஆதரிக்கவில்லையோ என எண்ணத் தோன்றுகிறது.

### *நூல் மதிப்பீடு*

நூல் மதிப்புரையும் அவ்வப்பொழுது ஒரு பைசாத் தமிழன் இதழில் வெளியிடப்பட்டுள்ளது. 'ராஜம்மாள்' எனும் புதினத்தில் (நாவலின்) மதிப்புரை 29.01.1908இல் வெளிவந்தது. இந்த நெடுங்கதையில் மனுசானி என்னும் பண்ணைப்பறையன், பண்ணையார் வீட்டில் புகுந்து பாம்பை அடிக்க நடுங்கிக்கொண்டு சென்றதை இதழ் ஆசிரியர் மதிப்புரையில் குறிப் பிட்டு, தம் மனக் குமுறல்களைப் பின்வருமாறு வெடிக்கச் செய்துள்ளார்.

'அவன் பாம்புக்குப் பயப்படவில்லை, சாஸ்திரி வீட்டில் உள்ள லட்சுமி நீங்கிடுவாள் என்று நடுங்கி உள்ளுக்குச் சென்றானாம். பண்ணைப்

பறையன் காலினால் மிதிக்கப்பட்ட அரிசி மூட்டை, புளி மூட்டை, வெல்ல மூட்டை லட்சுமி சாஸ்திரியார் வீட்டில் இருக்கிறதா இல்லையா என்று ஆராய்வரேல் இலட்சுமி சம்பத்து விளங்கும்.'

'இவ்வகை இந்து தேச முதுகெலும்பாக விளங்கும் பறையன் என்போனைப் பழிகூறிய பாவலரைப் போல பவுத்த நாவலர்கள் என்னும் பத்து பன்னிரெண்டு பேர் தோன்றுவராயின் சுதேசியமும் சீர்கெட்டு சுயராஜ்ஜியமும் பெயர் கெட்டு அழிய வேண்டியதுதாம்.'[2]

தமிழ் இதழ்கள் வளர்ச்சியிலும் சாதி உணர்ச்சியின் காரணமாக ஏற்படும் சீரழிவு பற்றிய தலையாய கருத்துகளையும் அயோத்திதாசப் பண்டிதர் தமது இதழில் பின்வருமாறு எடுத்துக் கூறியுள்ளார்:

'இத்தமிழ் வழங்குந் தென்னிந்தியாவிலோ சாதி நாற்றம் என்னும் மலத்தால் தங்கள் சாதியோர் மட்டிலும் வாசிக்கலாம், ஏனை சாதி யோர் வாசிக்கப்படாது என்னும் பொறாமையும் பொச்சிருப்பும் வாய்ந்தவர்கள் பொதுநலம் கருதிட பத்திரிகைகளே வாசிக்கப் பிரியமில்லாமல் விட்டு வருகின்றார்கள்.'

ஒவ்வொரு ஒரு பைசாத் தமிழன் இதழிலும் ஒரு பக்கத்தில் கட்டண விவரம் கீழே குறிப்பிட்டுள்ளபடி இருக்கும்.

சந்தா விவரம்

| | |
|---|---|
| ஒரு வருடத்திற்கு | ரூ.1 |
| 6 மாதத்திற்கு | அணா 12 |
| 3 மாதத்திற்கு | அணா 6 |
| 1 பத்திரிகை | பை.3 |

முத்திரை உட்பட

என அச்சிடப்பட்டுள்ளது.

அதே பக்கத்தில் விளம்பர விகிதம் அச்சிடப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| ஒரு பத்திக்கு | ரூ.2 |
| ½ பத்திக்கு | ரூ.1 |
| ¼ பத்திக்கு | ரூ.1 |

சில விளம்பரங்களுக்கு வரி 1க்கு ½ அணா. இப்படி அக்காலத்திலே விளம்பரங்கள் வெளியிட்டுவந்தார் பண்டிதமணி.

ஒவ்வொரு இதழிலும் முதல் பக்கத்தில் செய்திகள் தொடங்குவதற்கு முன்பு 'அருங்கலைச்செப்பு' என்னும் தலைப்பில் ஒரு பாட்டு அமையும்.

எடுத்துக்காட்டாக,

> மெய்ப்பொருள் காட்டி உயிர்கட் கரணாகித்
> துக்கங் கெடுப்பது நூல்
> என்று முண்டாகி இறையால் வெளிப்பட்டு
> நின்றது நூலென் றுணர்
>
> (12, எண்.2, 24.6.1908)

ஒரு பைசாத் தமிழன் பதிவு எண் - M673 Edited By Pandit C. Iyotheethass எனக் குறிப்பிட்டிருக்கும்.

**உலகப் பார்வை**

'தந்தி சமாச்சாரங்கள்' எனும் தலைப்பில் உலகச்செய்திகள் ஒரு பைசாத் தமிழன் இதழில் இடம்பெற்று வந்தன.

### பூகம்பம் மெசினாவில் சேதம்

இலண்டன் டிசம்பர் 29, 1908 மெசினா நகரம் முழுவதும் நாசமாகிவிட்டது. மெசினாவில் உள்ள டவுன் ஹாலுக்கும் தபால் ஆபிசுக்கும் பேங்கிக்கும் கோட்டைக்கும் சென்றிருந்த 90 பேர்களும் உயிர் நீத்தனர் என்று தெரிகின்றது. மெசினா ஜெலசந்தியில் கடற்கரையோரம் இருந்த அநேக கிராமங்கள் முற்றும் நாசமாயின.

உதவி சேனைகள் மெசினாவில் சேதம் அடைந்த ஜனங்களுக்கு உதவி செய்யமுடியாத சைராக்ஸியிலிருந்து பிரிட்டிஷ் கடற்படையும் அகஸ்தாவிலிருந்து ருசிய கடற்படையும் மெசினா நோக்கிப் பிரயாணமாயிருக்கின்றன.

(30.10.1908)

*அதிக மரணம்*

இலண்டன் டிசம்பர் 30, 1908. சிசிலியில் மட்டும் 70,000 பேர் மரணம் அடைந்தனர் என்றும் கலாப்பிடியாவில் 30,000 பேர் மரணம் அடைந்தனர் என்றும் தெரிய வருகின்றது.

### பூமி பிளந்தது

பல பீரங்கிகள் சப்திப்பதுபோல் பூமி பிளந்தது. ரெக்கியோவின் ஒரு பாகம் விழுங்கப்பட்டது. உடனே இந்தப் பிளவு சமுத்திரத்து தண்ணீரை நோக்கி விரைந்து ஓடிற்று. கலாபிடியாவில் உள்ள ஜனங்கள் மலைச் சோலை

களிலும் குகைகளிலும் தங்கி இருக்கின்றார்கள். மெசினா வில் தோன்றிய நெருப்பு அணைக்கப்பட்டுள்ளது.

### இத்தாலியில் யுத்தம் துக்கம்

இத்தாலி தேசமானது துக்கத்தில் மூழ்கி இருந்தது. பேங்குகளும் நாடகசாலைகளும் மூடப்பட்டிருக்கின்றன. நிவர்த்தி வேலை செய்ய முடியாத பல வாலண்டியர்கள் சென்று இருக்கின்றார்கள். ரோம், நேமிக்ஸ்பாலமோவி லுள்ள தந்தி ஆபிசுகளில் ஜனங்கள் அழுகையும், கண்ணீருமாய்ச் சூழ்ந்து தந்திக் கம்பிகள் அறுந்து போன படியால் தங்கள் பந்துகளுக்குத் தந்திச் செய்திகள் அனுப்ப முடியாது இருக்கின்றார்கள். மெசினாவில் உள்ள தபால் சேவகர்கள் 100 பேரில் 6 பேர் உயிரோடு இருப்பதாகத் தெரிகிறது.

### டிசம்பர் 31, 1908

சமீபத்தில் எடுத்த கணக்கின்படி மரணமானவர்களின் எண்ணிக்கை 2 லட்சம் எனத் தெரிகின்றது.

இப்படி உலகச் செய்திகளைத் தொகுத்து ஒரு பைசாத் தமிழன் இதழின் மூலமாகப் படிப்பறிவு அற்ற ஊர்ப்புற மக்களுக்குப் பண்டிதமணி அவர்கள் தெரிவித்து வந்துள்ளார்.

திருமண வாழ்த்துச் செய்திகளும், பொதுச்செய்திகளும் அவர் வெளி யிட்டு வந்துள்ளார். நமதன்பர் தி. கிறிஸ்டின் அவர்களின் சகோதரரின் புதல்வி ரேஞ்சல் புஷ்ப மாரியம்மாளின் தேக ஆரோக்கியத்தின் நிமித்தம் தனது திருமணம் தடையானது கேட்டு மிக்க விசனிக்கின்றேன்.

### *ஒரு பைசாத் தமிழன் பத்திரிகை தமிழன் எனப் பெயர் மாற்றம்*

26.8.1908லிருந்து ஒரு பைசாத் தமிழன் என்னும் இதழின் பெயர் தமிழன் என மாற்றப்பட்டது.

தமிழன் வார இதழ் 15.4.1914 வரையில் பண்டிதமணி அயோத்தி தாசர் அவர்களின் பொறுப்பில் வெளிவந்தது. அவர் மறைவிற்குப்பின் 17.6.1914 முதல் 26.8.1915 வரையில் அயோத்திதாசர் அவர்களின் புதல்வர் திரு. பட்டாபிராமன் அவர்களின் பொறுப்பில் அது வெளிவந்தது. பிறகு சில ஆண்டுகள் தடைப்பட்டு 7.7.1926 முதல் 27.6.1934 வரையில் கோலார் தங்க வயல் பண்டிதமணி ஜி. அப்பாதுரையார் ஆசிரியர் பொறுப்பில் வெளிவந்தது.

இப்படி, தமிழன் இதழ் மூலமாகப் பண்டிதமணி அயோத்திதாசர் அவர்கள் மதம், மொழி, சமூகம், இனம் முதலான பல துறைகளில் கருத்து களைப் பரப்பித் தமக்கென்று வரலாறு உருவாக்கிக்கொண்டார். அவர் துணிந்து எழுதிய கட்டுரைகள் கடிதங்கள் பிற்காலத்தில் நூல்களாக வெளி வந்துள்ளன.

### பெயர் மாற்றம் – அயோத்திதாசரின் விளக்கம்

இதுவரை நமது ஒரு பைசாத் தமிழன் பத்திரிகையை அச்சிட்டு வந்த பிரஸ் ஆனது கனம் ஆதிமூலம் பிள்ளை அவர்களின் சொந்தமாதலின் அந்தப் பிரஸ்ஸை சிந்தாதிரிப்பேட்டைக்குக் கொண்டு போய், தானே நடத்திக் கொள்வதாய் இம்மாதம் 20ஆம் தேதி எடுத்துக்கொண்டு போய் விட்டார்.

ஆதலின் நமது கோலார் மாரிக்குப்பத்தில் வாசஞ்செய்யும் தன்மப் பிரியர்களின் பேருதவியால் வேறு அச்சு இயந்திரத்தில் கொண்டு வந்து 24ஆம் தேதி சோமவாரம் கமிஷனரிடம் சென்று 'கௌதம பிரஸ்' என்னும் நாமகரணம் ரிஜிஸ்டர் செய்து விட்டதுமன்றி ஒரு பைசாத் தமிழன் எனும் பத்திரிகைப் பெயரில் 'ஒருபைசா' எழுத்தினை எடுத்துவிட வேண்டு மென்று அந்த அன்பர்கள் கோரியவண்ணம் 'தமிழன்' என்னும் பெயரைப் பதிவு செய்துவிட்டேன். ஆதலின் நமது பத்திரிகையின் பெயர் 'தமிழன்' என்றும் அச்சு இயந்திரத்தின் பெயர் 'கௌதம் பிரஸ்' என்றும் வழங்கப்படும்.[3]

### *தங்கவயலில் தமிழன் பத்திரிகை*

ஒரு பைசாத் தமிழன் இதழ் இன்றைய இதழ்களின் வரலாற்றில் தனி வரலாறு படைத்தாலும், நாளடைவில் தமிழ் உணர்வோடு இதழ் இருக்க வேண்டும் என்னும் எண்ணத்தின் அடிப்படையில் தமிழன் எனப் பெயர் மாற்றம் பெற்றது. தமிழ் உணர்வு உள்ளவர்கள் அன்னவரும் இவ்விதழின் மீது மிகுந்த அக்கறைகாட்டி வந்தனர். இதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன.

இன்றுகூடத் தமிழ் உணர்வு, கர்நாடக மாநிலம், கோலார் தங்கவயல் எனும் மண்ணில் உள்ளவர்களுக்கு மிகுதியாக உண்டு. அந்த மண்ணிற்குச் சென்று வந்தவர்கள் இதனை நன்கு அறிவர். இதற்குக் காரணம், தமிழன் ஏடு தங்கவயல் மண்ணிலிருந்து சமுதாயச் சிந்தனையாளரும், எழுத் துலகில் மாபெரும் சாதனை படைத்தவரும், ஆதிதிராவிட இன மக்களின் முன்னோடித் தலைவருமான பாபாசாகிப் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் வழியில் சமுதாயப்பணி ஆற்றியவரும், பவுத்த நெறிமுறைகள்ளத் தாம் பின்பற்றி அவற்றைப் பிற மக்களுக்கும் ஊட்டிய பெருமைக்கு உரியவரு மான தந்தை ஜி. அப்பாதுரையார் தமிழன் பத்திரிகையைத் தலைமை ஏற்று நடத்தியதுதான். அவரது முயற்சியால்தான் தங்கவயல் மண்ணில் மிகுதி

யாகத் தமிழ்ப்பற்று உருவாகி ஓங்கிற்று என்பது இன்றும் நாம் அறிந்து கொள்ளும் உண்மையாகும்.

### அயோத்திதாசரின் எழுத்துத் துணிவு

பத்திரிகைகள் இன்று உண்மை நிகழ்ச்சிகளை எழுதுவதற்கு அஞ்சுகின்ற நிலையையும் மக்கள் பிரச்சினைகளைப் பற்றி எழுதும் பத்திரிகைகளின் தரம் குறைந்து வரும் அவலங்களையும் பார்க்கிறோம். ஆனால் ஆங்கிலேயர் ஆண்ட அந்த அடிமையிருட்டுக் காலகட்டத்தில் பண்டிதமணி ஒரு பைசாத் தமிழன் இதழ் மூலமாகப் பல கருத்துகளை, நாட்டு நடப்புகளை, தாம் எண்ணியதைத் துணிந்து எழுதி, எழுத்தாளனுக்கும் பெருமை சேர்த்தார்.

தமிழன் இதழில் பல கடிதங்கள், கட்டுரைகள் பலரால் துணிவுடன் எழுதப்பட்டாலும், அவற்றை வெளியிடுவதில் மிகுந்த துணிச்சலைக் காட்டியவர் பண்டிதமணி ஆவார். தமிழன் இதழ் நாளடைவில் அயல்நாட்டினர் பலரால் விரும்பிப்படிக்கத் தக்கதாக வளர்ந்தது.

பர்மா, மலேசியா, தென்னாப்பிரிக்கா, நேட்டால் போன்ற நாடுகளுக்கு அனுப்பப்பட்டதற்கு ஆதாரங்கள் உள்ளன. இப்படி தமிழன் இதழ் மூலமாகப் பண்டிதமணியின் மறைவிற்குப் பின்னும் அவரது வழியில் அந்த ஏடு, சமுதாயத்தில் உள்ள சீர்கேடுகளை மக்களுக்குத் துணிந்து வெளிச்சம் போட்டுக் காட்டியதோடு, சமுதாயப் பிரச்சினைகளுக்கும் நல்ல தீர்வினை வழங்கிய எழுத்துப் போர்முரசாகவும் விளங்கியது.

### தமிழன் இதழில் அயோத்திதாசரின் சிறப்புக் கட்டுரைகள்

பவுத்தக் கொள்கைகளைப் பற்றித் தம்முடைய ‘தமிழன்’ இதழில் பண்டிதமணி அயோத்திதாசர் தொடர்ந்து பல கட்டுரைகளை எழுதி வந்தார். பல்வேறு தலைப்புகளில் அவருடைய கட்டுரைகள் வெளி வந்துள்ளன. அவற்றை இங்கே காண்போம்.

### தூஷணை – சூன்யம் – வைப்பு

பவுத்தர்கள் மத தூஷணம் செய்வதாகவும் மற்றைய மதங்களுக்கு வீண் அவதூறு செய்வதாகவும் கேள்வியுற்று மிக்க விசனிக்கின்றோம். ஒரு மதத்தோரை, அவர்களின் மனம் அவர்களுக்குத் தெரிந்த விஷயமானதினால் ஒருகாலும் தூஷிக்க மாட்டார்கள்.

அவர்கள் சகோதர அன்பினாலும் நல்ல எண்ணத்தினாலும் ஏதொன்றை எடுத்தோதியபோதிலும் அவர்கள் மீது கெட்ட எண்ணமும் விரோதச் சிந்தையும் உள்ளவர்களுக்கு, உள்ள செயல் உள்ளபடி விளங்கும்.

ஆதலின் பவுத்தர்களை வீணே அவதூறு செய்யும் அன்பர்கள் அவர் களுக்குள்ள வஞ்சினத்தையும் பொறாமையையும் பெருக்கிக்கொண்டு வீணே சினந்து திரிவார்களாயின் அச்சினம் அவர்களையே மிக்க துக்கத்தை அனுபவிக்கச் செய்யும்.

### பாதிரிகளுக்கோர் விண்ணப்பம் – 1

கத்தோலிக்க மார்க்கத்தோர்களுக்குப் பின்பு இத்தென்னிந்தியாவில் குடியேறிக் கிறித்துவின் மார்க்கத்தைப் பரவச்செய்வதற்காகச் சகல மக்களுக்கும் உபகாரமாகும் கல்விச்சாலைகளை விருத்தி செய்தீர்கள். அக்காலச் சாதித் தலைவர்களின் கொடும்செயலால் தாழ்த்தப்பட்ட நிலைகுலைந்திருந்த திராவிடப்பவுத்தர்கள் யாவருந் தங்கள் பிள்ளை களை ஆனந்தமாகக் கல்விச் சாலைகளுக்கு அனுப்பிக் கற்கச் செய்திருப் பதுடன் கிறித்தவ மதத்தையும் தழுவி பி.ஏ., எம்.ஏ. முதலிய கௌரவப் பட்டங்களையும் பெற்றுப் பாதிரிகளாகவும், உபதேசிகளாகவும், உபாத்தி மார்களாகவும் போதித்து வருங்கால சாதித் தலைவர்களின் போதனை களுக்கு உட்பட்ட பராயமதஸ்தர்களும், பராய சாதியோர்களும் தடிகளாலு மடித்துத் துரத்தப் பல பாடுகளும் பட்டுக் கிறித்தவ மார்க்கத்தைப் பரவச் செய்து வந்தார்கள்.

### பாதிரிகளுக்கோர் விண்ணப்பம் – 2

இரண்டு அங்கிகள் இருக்குமாயின் ஒன்றைத் தரித்திரர்களுக்கும், ஏழைகளுக்கும் கொடுத்து உதவும்படி போதித்து இருக்கின்றார்கள் - பண ஆசைக்காரனும், செல்வம் மிகுந்தோனும் மோட்ச ராஜ்யத்தில் பிரவேசிக்க முடியாது என்றும் கூறியிருக்கின்றார்களே!

அத்தகைய சத்திய ஞானங்களைப் போதிக்கும் குருக்களாக நீங்கள் இந்தத் தேசத்திற்கு வந்து மகா ஞானிகளின் போதகத்திற்கு மாறுதலாகப் பணம் சம்பாதிக்கக்கூடிய மதக்கடைகளைப் பரப்பி, இரவும் பகலும் ஓய் வின்றிக் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கும் ஏழைகளின் பணங்களைக் கவர்ந்து, தங்கள் சுயதேவைகளுக்காக, ரோம் நகரம் முதலிய இடங்களுக்கு அனுப்பிக் கொண்டு இந்த ஏழைத் தமிழ்க் கிறித்தவர்கள் கைகளில் ஓடும், அவர்கள் வாசம் செய்யும் சேரிகளை மூதேவி அடையவும் செய்துவிட்டீர்கள்.

இவ்வகையான ஏழைத் தமிழ்க் கிறித்தவர்களின்மீது இரக்கமின்றிப் பணங்களை வசூல் செய்து அனுப்பிவரும் ரோம் நகரின் தற்கால நிலை யைக் கவனித்துப் பாருங்கள். உலகத்தில் அதிகச் சிறப்பும், நாகரிகமும், செல்வமும் மிகுந்திருந்த ரோம்நகர், நாளுக்கு நாள் சிறுமை அடைந்து ஈனஸ்திதிக்கு வரும் காரணம் ஏழைகளின் கஷ்டார்ந்த சொத்துக்களை இரக்கமின்றிக் கொண்டுபோய் இத்தேசத்தில் சேர்ப்பதன் கர்மமேயாம்.

அத்தகைய மதக்கடை பரப்பிப் பொருள் சம்பாதிக்கும் செயல்களை மகாஞானி என்றும், தேவர்கள் என்றும் கொண்டாடப்பெற்ற மோசேயும், எலியாயும், கிறிஸ்துவும் மற்று உள்ளோரும் பார்க்கமாட்டார்கள் - நம்முடைய செயல்கள் அவர்களுக்குத் தெரியவும் மாட்டாது என்று நடத்தி வருகின்றீர் போலும் -

அந்தோ - முக்காலும் உணர்ந்த மகா ஞானிகள் எக்காலத்திருந்தே தங்கள் சத்திய தர்க்கங்களையும் அவற்றைப் போதிக்கும் போதகர்களின் செயல்களையும் பார்த்துக்கொண்டே இருக்கின்றார்கள். இதைச் சத்தியம் என்றே நம்புங்கள். அசத்தியம் என்றுவிட்டு ஏழைக் கிறித்தவர்களை வஞ்சிக்காதீர்கள்.

> நீங்கள் அளந்த படியினாலேயே உங்களுக்கும் அளக்கப் படும். உங்களுக்குள்ள இரக்கமற்ற செய்கைகள் உங்க ளுக்கும் செய்யப்படும்.

ஆதலின் போதகர்கள் என்னும் பெரியவர்களே - இந்த ஏழைக் கிறித் தவர்களிடம் பணம் சம்பாதிக்கும் எண்ணங்களை ஓர் புறம் அகற்றி நீங்கள் சேர்த்து வைத்துள்ள தொகைகளில் கல்விச்சாலைகளையும், கைத்தொழிற் சாலைகளையும் மேம்படுத்தி, இந்த ஏழைப் பேதை மக்களை இலவசமாகக் கல்வியிலும், கைத்தொழிலிலும் முன்னுக்குக் கொண்டு வாருங்கள்.

'நீதியிலும் அன்பிலும் ஒழுக்கத்திலும் பரம்பரையாகப் பயந்து நடக்கும் ஏழைக் கிறித்தவர்களை, பறையர்களென்று தாழ்த்தி, பக்கத்தில் ஒதுக்கிவிடா தீர்கள். கிறித்துவின் மார்க்கத்தை இத்தேசத்துளெங்கும் ஆதியிற் பரவச் செய்பவர்கள் இவர்கள் என்று அன்பு பாராட்டுங்கள்! அன்பு பாராட்டுங்கள்!

இவ்வகையால் விவேகமிகுந்த சமணர்களும், சாக்கையர், வள்ளுவர் களும், பாணர்களுமாகிய திராவிடப் பவுத்தர்கள் யாவரும் வேஷ பிராமணர் கட்டுக்குள் அடங்காமல் பறையர்களாகவே இருந்து கொண்டு, மிலைச்சராம் ஆரியர்களின் வஞ்சகச் செய்கைகளை மறைத்துக் கொண்டே வந்தபடியால், மலையில் வசிக்கும் கொடுந்தமிழ்ப் பவுத்தர்களைத் தீயர் களென்றும், செந்தமிழ்ப் பவுத்தர்களைப் பறையர்களென்றும் வகுத்து வழங்கி வந்தமை மிலைச்சராம் ஆரியர்கள் வழக்கமாயிருந்தது.

அச்சமயம் இவர்களைக் கண்டோர்கள் அவர்களைக் கண்டு ஏன் ஓடுகின்றீர்கள் என்றால், அவர்கள் தீண்டலாகாது என்று சொல்லிக் கொண்டே ஓடிப்போவது மிலைச்சர்களின் வழக்கமாயிருந்தது.

இந்து மதத்தின் பெயரால் பார்ப்பனர்கள் எதைச் சொன்னாலும் அதுவே வேதவாக்கு என்று ஏற்றிருந்த காலத்தில் இவ்வாறெல்லாம் மனிதனைச் சொந்தமாக (சுயமாக) சிந்திக்கத் தூண்டியுள்ளார் பண்டிதமணி.

வேதங்களையும் புராணங்களையும் கட்டுக்கதையாக மக்களிடையே பொய்ப் பிரச்சாரம் செய்துவந்த பிராமணர்களின் புரட்டு வாதங்களுக்குச் சாட்டை அடி கொடுத்த பெருமை 1979இல் தந்தை பெரியார் பிறப்பதற்கு 34 ஆண்டு களுக்கு முன்பே 1845இல் பிறந்த பண்டிதமணி அவர்களைத்தான் சாரும்.

செப்டம்பர் 9, 1908இல் தமிழன் இதழில் அவர் கீழ்க்கண்டவாறு தம்முடைய கருத்துகளை வெளியிட்டுள்ளார்:

'காஞ்சிபுரத்தில் சுதேசிகளுக்குள் நேரிட்ட வடகலை, தென்கலை கலகத்தை யாரேனும் தங்களுக்குள் அடக்கி ஆண்டு கொண்டார்களா? திரிசிரபுரத்தில் (திருச்சியில்) சுதேசிகளுக்குள் நேரிட்ட வடகலை, தென் கலை வழக்கையேனும் தங்களுக்குள் அடக்கி ஆண்டுகொண்டார்களா? சென்னையிலுள்ள சுதேசிகளின் ஆலய தர்மகர்த்தாக்கள் நியமன வழக்கை யேனும் தங்களுக்குள் அடக்கி ஆண்டுகொண்டார்களா? இல்லையே! இத் தகைய சொற்ப வாலிய வழக்குகளைத் தங்களுக்குள் அடக்கிடச் சக்தியற்ற வர்கள் ஒரு தேசத்தைக் கட்டியாளுவோம் என்று வெளிவருவது விந்தை யேயாம்... இச்செயல்பாடு விந்தையிலும் நிலையற்ற விந்தையென்று விளங்குகின்றது. தற்காலம் இத்தேசத்திலுள்ள ஓர் மனிதனை நோக்கி,

'ஐயா, நீவிர் யாவருடைய ஆளுகையில் இருக்கின்றீர்கள் என்றால், அவன் கூசாமல் நான் 7ஆவது எட்வர்ட் சக்கரவர்த்தியின் ஆளுகையில் இருக்கின்றேன் என்பான். சுதேசிகள் வசம் சுயராச்சியம் அளித்த பின்னர் ஒருவனை நோக்கி நீவீர் யாவர் ஆளுகையில் இருக்கின்றீர்கள் என்றால் யாது கூறுவான்? நாங்களே ஆண்டுக் கொள்கிறோம் என்பானா? அன்றேல் ஆளுகைக்கதிபராய் எங்களுக்குள்ளே சுதேசி ஒருவரைத் தெரிந்தெடுத்துக் கொள்ளுவோமென்பார் போலும்...'

மேற்கண்ட கருத்துகளை நாம் ஆய்ந்து பார்க்கும்போது காங்கிரஸ் பேரியக்கம் என்பது செயலுக்கும் கொள்கைக்கும் எண்ணற்ற வேறுபாடு கொண்டது என்பது பண்டிதமணியின் எண்ணமாகக் காணப்படுகிறது.

பண்டிதமணியின் காலத்திலிருந்து காங்கிரஸ் பேரியக்கம் தாழ்த்தப் பட்ட மக்களின் பிரச்சினைகளில் தலையிட்டு இருக்குமேயானால் அக் கட்சியை எவராலும் அசைக்கக்கூட முடியாது என்னும் உறுதி நிலை உருவாகியிருக்கலாம். ஆனால் பண்டிதமணியின் காலம் முதல் அலட்சிய மாக நினைத்து ஆதிதிராவிட மக்களின் பிரச்சினைகளுக்கு எதிராகக் குரல் கொடுத்த காரணத்தால் பிற்காலத்தில் காந்தியார் தனிவாக்குரிமைக்கு எதிர்ப்புத் தெரிவித்து, ஆதிதிராவிட மக்களின் வாழ்வினை இருட்டறை யில் தள்ளிடத் திட்டமிட்டாரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

இதற்குச் சரியான பாடத்தினைப் பாபாசாகிப் அம்பேத்கார் அவர்கள் கற்பித்தார். இந்த வகையில் பண்டிதமணி ஒருவர்தான் காங்கிரஸ் இயக்கத்தைத் தொடக்கத்திலேயே தட்டிக்கேட்டுச் சாடியவர் எனில் மிகையாகாது.

## துணைத்தலைவர் நிதி திரட்டும் குழுவிலும் ஆதிக்கம்

1908ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 21ஆம் தேதி வெளியான தமிழன் இதழில் சென்னை நேஷனல் பண்ட் அண்டு இண்டிஸ்டிரியல் அசோசியேசன் பண்டுக்குத் தீபாவளிக்குப் பணம் சேகரிக்கும் சங்கத்தோருக்குப் பண்டிதமணி வெளிப்படையாகத் துணிந்து எழுதிய கடிதம் ஒன்று வெளிவந்துள்ளது.

இக் கடிதம் ஆதிதிராவிட மக்களின் அன்றாட வாழ்வில் பண்டிதமணி எந்த அளவிற்கு அக்கறை காட்டியுள்ளார் என்பதனைத் தெளிவாகக் காட்டுகின்றது. இந்த இதழில் வெளியாகியுள்ள கட்டுரை இதுதான்:

'நேஷனல் பண்டு இண்டஸ்டிரியல் அசோசியேசன் எனும் சங்கத்துக் காரியதரிசிக்குச் சென்ற செப்டம்பர் 24இல் மூன்று கடிதம் அடிக்கடி விடுக்கப்பெற்றோம்.'

அதன் கருத்துக்கள் யாதெனில், வருகிற தீபாவளியன்று சகலரிடத்திலும் பணம் வசூல் செய்து மேற்படி பண்டில் சேர்த்துக் கைத்தொழில்களை விருத்தி செய்ய வேண்டுமென்றும் அதில் இராயப்பேட்டை கிளையோரமாக நின்று பணம் சேகரிப்பதற்கு,

1. ஸ்ரீ.ஜி. நாராயண செட்டிகாரு
2. எஸ்.எஸ். கஸ்தூரிரங்க ஐயங்கார், பி.ஏ.பி.எல்
3. ஏ. அரங்கசாமி ஐயங்கார், பி.ஏ.
4. க. அயோத்திதாஸ்
5. வி. திருவேங்கடாச்சாரியார், பி.ஏ.பி.எல்

ஐவரை நியமித்து அதன் கருத்துக்களையும் விவரித்து எமக்கு எழுதியிருந்தார்கள். அக்கடிதங்களைச் சாதிபேதமற்ற திராவிட மகாஜன சபையின் முக்கிய சங்கத்தோர்களுக்குக் காண்பித்து அதன் பேரில் அவர்கள் அவற்றைத் தீர்க்க ஆலோசித்தது.

இச்சங்கத்தின் உத்தியோகஸ்தருள் 14 பிராமணர்களும், 1 செட்டியார் அவர்களும், 1 முதலியார் அவர்களும், 1 முகம்மதியரும், 3 நாயுடு அவர்களும் இருப்பதில் பெருந்தொகையோர் பிராமணர்களாகவே இருக்கின்றார்கள். இஃது சில நாட்கள் சென்று செட்டியார், முதலியார், நாயுடு காரு, முகம்மதியர் முதலியவர்கள் பிரிந்து விடுவார்களாயின் நேஷனல்

இண்டஸ்டிரியல் அசோசியேசன் என்னும் பெயர் இருந்த போதிலும் பிராமணர் இண்டஸ்டிரியாகவே மாறிவிடும், நம் பணங்களைச் சேகரித்து இவர்களிடம் ஒப்படைத்துச் சகல சாதியோருக்கும் பிரயோசனம் இல்லாமல் போகுமாயின் யாது பயன்?

'இத்தகைய கூட்டத்தார் அடியிற் குறித்தவாறு உத்தியோகஸ்தர் களை நியமித்துக் காரியங்களை நடத்துவார்களாயின், சாதிபேதமற்ற திராவிடர்கள் சகலரும் முயன்று வேண்டிய பொருட்களைச் சேகரித்துத் தரலாமென்று முடிவு செய்து மேற்படி சங்கத்தாருக்கு எழுதிய பதில் கடிதம்.'

'நேஷனல் பண்ட் அண்டு இண்டஸ்டிரியல் அசோசியேசன் கூட்டத் தவர்களுக்கு, ஐயா, தங்களுடைய கூட்டத்தார் விசயமாக அந்தரங்கத்தில் பெருந்தொகையார் ஆட்சேபணையும் பகிரங்கத்தில் சிறுந்தொகையார் ஆட்சேபணையும் இருக்கின்றன.'

ஆட்சேபணை - 1 இக்கூட்டத்தில் சேர்ந்திருப்பவர்கள் பெருந் தொகை பிராமணர்களாக இருப்பதினாலே இக்கூட்டம் எப்பொழுது நேஷனலாக ஏற்பட்டதோ அதன் அங்கங்களும் இப்படியே இருத்தல் வேண்டும்.

அதாவது, பிரசிடெண்ட்டுகளின் ஒரு பிராமணர், ஒரு யூரேஷியர், ஒரு முகம்மதியர் ஆகிய காரியதரிசிகள் சமயம்போல் நடத்திவர வேண்டி யது. செக்ரட்டரிகளிலும், டிரஷரர்களிலும் ஒரு பிராமணர், ஒரு நான் - பிராமணர் (பிராமணர் அல்லாத திராவிடர்) ஒரு முகம்மதியர் ஆக மூன்று பெயர் பொக்கிஷம் வைக்கவும் இருத்தல் வேண்டியது.

டைரக்டர்களில் 4 பிராமணர்கள், கேஷியர்களில் 4 நான் - பிராமணர் கள், 4 முகம்மதியர்கள் இருத்தல்வேண்டும். பணத்தைச் செலவிடும் போதும் வசூல் செய்யும்போதும் சாதிபேதம் உண்டாகாமல் போகும். பணத்தைச் செலவிடும்போதும், வேலை கற்பிக்கப்படும்போதும் உண்டாகும் போல் காண்கின்றது.

ஆதலின் இத்தகைய பேதங்கள் இல்லாமல் சகல காரியங்களிலும் நடத்துவோமென்னும் மேற் குறித்துள்ளபடி அலுவலகங்களும் பேதமில் லாமல் சேருமாயின் பணம் சேகரிக்கக் கூடிய முயற்சியெடுத்துக் கொள் ளுவோம்.

இப்படி ஆதிதிராவிட மக்களின் உரிமைகள் பறிபோய்விடக்கூடாது என்பதற்காகவே பணத்தைத் திரட்டுவதிலும் எச்சரிக்கையைக்காட்டி, அந்தப் பணம் உயர் சாதியைச் சார்ந்தவர்களின் நலனுக்கு மட்டுமே பயன் படக்கூடாது என்பதில் பண்டிதமணி அயோத்திதாசர் விழிப்புணர்வோடு இருந்தார் என்பதற்கு மேற்காணும் மடலும் ஒரு சீரிய சான்றாகும். இந்தியா

வில் தாழ்த்தப்பட்டோர் தலை நிமிர்வதற்காக 1908இல் ஒரு சங்கம் தோற்றுவிக்கப்பெற்றது. அது குறித்து அயோத்திதாசப் பண்டிதர் 'தமிழன்' இதழில் இவ்வாறு குறிப்பிடுகிறார்:

> இந்த டிசம்பர் கால விடுமுறைக் காலத்தில் சில பெரியோர்கள் கூடி இந்தியாவில் தாழ்த்தப்பட்டுள்ள சாதியோரைச் சீர்திருத்த வேண்டுமென்று முடிவு செய்து இருக்கிறார்கள். இவற்றுள் இயல்பாகவே அறிவின்றித் தாழ்ந்துள்ள சில வகுப்பாருமுண்டு. அவர்கள் யாரென் பீரேல் குறவர், வில்லியர், சக்கிலியர், மலமெடுக்குந் தோட்டிகள் - இயல்பாகவே தாழ்ந்த நிலையில் உள்ள வர்கள்.
>
> வேஷப் பிராமணர்களால் பறையரென்றும், சாம்பாவனென்றும் விலங்கையர் என்றுங் கூறி அவர்களைச் சுத்த ஜலங்களை மொண்டு குடிக்கவிடாமலும், அந்தஸ்தான உத்தியோகங்களில் பிரவேசிக்க விடாமலும், ஏதோ துரைமக்கள் கருணையால் ஓர் உத்தியோகத்தைப் பெற்றுக் கொண்ட போதிலும் அதனின்று முன்னுக்கு ஏற விடாமலும், பலவகை இடுக்கண்களைச் செய்து தாழ்த்திக் கொண்டே வருகின்றார்கள். இவர்களைத் தாழ்ந்த வகுப்பாரென்று கூறலாகாது. சாதிபேதமுள்ள மற்றவர்களால் தாழ்த்தப்பட்ட வகுப்பாரென்று கூறல் வேண்டும்.
>
> இவற்றுள் கூளங் குப்பைகளுடன் குணப்பெரும் பொருட்களையும் சேரக்குவித்துக் குப்பை குழி என்பது போல் கல்வியிலும், நாகரிகத்திலும், விவேகத்திலும், ஒற்றுமையிலும் மிகுந்த வேஷப் பிராமணர்கள் கற்பனைக் கதைகளுக்கு இணங்காமல் விரோதிகளாய் நின்ற திராவிடப் பவுத்தர்கள் யாவரையும் பறையர், சாம்யவர், வலங்கை என்று தாழ்த்திக் கொண்டதுமின்றி சக்கிலி, தோட்டி, குறவர், வில்லியர் இவர்கள் யாவரையும் ஐந்தாவது சாதி என்னும் 'பஞ்சமர்' ஜாதியென நூதனப்பெயரிட்டு மேன்மக்களாம் பவுத்தர்களையும் அக்குப்பையில் சேர்த்துப் பஞ்சம ஜாதியென்று வகுத்திருக்கின்றார்கள்.
>
> சாதித் தலைவர்களோ நீதிநெறியமைந்த பவுத்த தன்மத்தைப் பாழ்படுத்திப் புத்தர்கள் யாவரையும் பறையரென்றும் தாழ்த்தித் தலையெடுக்கவிடாமல் செய்து வந்தவர்களாதலின், அவர்களின் முன் கிறிஸ்தவ மார்க்கத்தைத் தழுவிக் கல்வியிலும், நாகரிகத்திலிருந்து பொய்ச்சாதி

> பொய் மதங்களைத் தழுவியுள்ள அஞ்ஞானச் செயல் களைக் கண்டித்து வந்ததனால் இன்னும் அதிக பொறாமை கொண்டு மேலும் மேலும் துன்பங்களைச் செய்துகொண்டு வந்தார்கள்.

இப்படி அயோத்திதாசர் தமது தமிழன் இதழ் மூலமாகத் தமது கருத்தினைப் பரந்து விரிந்து வாழ்ந்துவரும் ஆதிதிராவிட மக்களுக்கு எடுத்துரைத்து அவர்களைச் சிந்திக்கக் கூடிய மக்களாக - சுயமரியாதையுள்ள மக்களாக உயர்த்துவதில் ஈடுபட்டார்.

### பச்சையப்பர் அறநிதிக் குழுவிலும் ஆதிக்கம்

புகழ்பெற்ற வள்ளலாக அறப்பணிகள் புரிந்தவர் பச்சையப்பர். அவர் பெயரில் அமைந்த அறநிதிக் குழுவிலும் பார்ப்பனர் ஆதிக்கம் ஊடுருவியதை அன்றே அயோத்திதாசப் பண்டிதர் கண்டித்துள்ளார். 'சுதேசிக் கூட்டத்தாருள் சுயநல சுதேசிகளும் பிறநல சுதேசிகளும், பொதுநல சுதேசிகளும் இவர்கள் எடுத்த விஷயங்களால் யாவும் சுய நலமாகவே தோன்றும்போலும். காரணம், பச்சையப்பன் தரும நிதியின் விசயமாய்த் தற்கால அட்வகேட் ஜெனரல் யோசித்துள்ள டிரஸ்ட்களின் நியமனம் சரியல்லவென்று உள்ள டிரஸ்டிகளும், ரெவின்யூ போர்டிலும் தடுத்திருப்பதாகத் தெரிய வருகின்றது. அவர்கள் உத்தேசம் யாதெனில் அட்வகேட் ஜெனரலின் அபிப்ராயப்படி டிரஸ்டிகளை நியமிப்பதனால் பிராமணர்களே பெருந்தொகையாகச் சேர்ந்துகொண்டு மற்ற வகுப்பார் களுக்குத் தருமநிதி தடைப்படும் என்பதேயாகும்.'

இதன் கருத்தை உணர்ந்த 'சுதேசமித்திரன்' பத்திரிகை அதிபர், தான் வெளியிட்டுள்ள அக்டோபர் 10ஆம் தேதி சனி வாரத்தியப் பத்திரிகையில் 'பச்சையப்ப முதலியார் தர்மங்கள்' என்னும் முகப்பிட்டு அதன் கடைசியில்,

> பச்சையப்ப முதலியார் சாதி மத வேற்றுமை உணர்ச்சியை மனதிற் கொண்டு தர்மம் செய்தோரை நாமறியோம். பொது விஷயங்களில் வேற்றுமை உணர்ச்சியை மனதிற் கொண்டு பார்க்கும்போதுதான் அவ்வேற்றுமை உணர்ச்சி இருக்குமேயன்றி அதை மறந்து பார்க்கும் பட்சத்தில் அது தோன்றாது. இதனை அனுபவத்தில் அறியக்கூடும் என்ப தால் சாதி பேதம், சமய பேதங்களை அற்றவர் போல் வரைந் திருக்கின்றார்.
>
> இத்தகைய சாதி பேத உணர்ச்சிகளை இவர் அற்றிருப் பாராயின், பச்சையப்பன் தன்ம சத்திரங்களிலும், பச்சை யப்பன் கலாசாலைகளிலும், பச்சையப்பன் நிதிப் பெயரிலும்,

கலாசாலை, பச்சையப்பன் தன்ம சத்திரம், பச்சையப்பன் தன்ம நிதி என்று கல்லூரிகளில் அச்சிட் டிருப்பதை இவர் கண்ணாரக் கண்டிருந்தும், இவர் எழுதும் பத்திரிகையில் பச்சையப்ப முதலியார், பச்சை யப்ப முதலியார் தன்மமென வரைந்துவருவதில் முதலி யாரெனும் சாதித்தொடர் மொழியைச் சேர்த்து வருவது, பச்சையப்பனுக்கு இல்லாத சாதியை நிலைப்படுத்த வேண்டுமென்று உணர்ச்சியோ அன்றேல் சாதிகளைச் தவிர்க்க வேண்டுமென்னு முயற்சியா? இவரது கருத்தை விசாரணைப் புருஷர் உணரற்பாலதே.

பிரச்சினை முன்வைத்து ஒருசிலர் வாழ்ந்து கொள் வோருமுண்டு. பலர் விழித்தெழமாட்டார்கள். இதில் பிராமணர்கள் எப்பொழுதும் விழிப்புடன்தான் இருப் பார்கள். பிறர் எவ்வளவுதான் விழிப்புடன் இருந்தாலும் ஏதையும் சரியாகப் பார்ப்பதில்லை, உதாரணத்திற்கு.

“ஒரு மனிதன் தருப்பைப் புல்லைக் கையிலேந்திக் கொண்டு வந்து நான் பிராமணன் என்பானாயின் அவ னைச் சரிவர விழித்து நோக்காமலும் இவன், நம்மைப் போன்ற மனிதனா என்று பாராமலும், இவன் நமக்கு ஏதேனும் வித்தைகளைக் கற்பிக்கக் கூடியவனா இன்றேல் ஏதேனும் சுகவழி காட்டக் கூடியவனா என்று உணராமலும், யாது விசாரணையுமின்றி அவனை “சுவாமி.. சுவாமி..” என்று வணங்கிக் கும்பிடும்படியான நாம் – குண்டு மருந்து ஒரு புறமும் துப்பாக்கிப் பீரங்கி ஒரு புறமும் வைத்துக் கொண்டு நீதி நெறிகளாம் செங் கோலைக் கையிலேந்தி சீருஞ்சிறப்புஞ் செய்துவரும் பிரிட்டிஷ் துரைத்தனத்தோரை எதிர்த்து நிற்பது என்பது என்ன காலக்குறைவோ, யாது விபரீதமோ யாவர் தூண்டு தலோ? விளங்கவில்லை. கட்டு சாதமும் ஒருவர் கற்பனா செயலும் நெடுநாளைக்கு இருக்கமாட்டா. சில நாளில் அழிந்துபோம். அக்கால் துயரும் நேரும். (1)

### சென்னை நகராட்சியில் பேசிய சேஷாச்சாரிக்குக் கண்டனம்

சென்னை நகராட்சியாக இருந்த முன் காலத்தில் அதன் கூட்டம் ஒன்றில் மயிலாப்பூர் சுடுகாடு செல்லும் வழியில் உள்ள ஆதிதிராவிடர் குடியிருப்புக்கு எதிராக ஸ்ரீ. சேஷாச்சாரி என்னும் உச்ச சாதிக்காரார் பேசி

யுள்ளார். உடனே தமது தமிழன் இதழில் பண்டிதமணி வெளியிட்ட கண்டனக்கணை வருமாறு:

**முனிசிபல் சங்கமும் ஸ்ரீ. சேஷாச்சாரி அவர்களும்**

சென்ற மங்கள வாரம் கூடிய நகரச் சீர்த்திருத்தச் சங்கத்தாரும், மயிலாப்பூரில் சுடலை விசயமாக நடந்த ஆலோசனையில் ஸ்ரீ. சேஷாச்சாரி ஒரு மறுப்பு கூறியிருக்கின்றார். அதாவது, 'மேற்படி சுடலைக்குப் போகும் வழியில் பறைச்சேரி இருக்கின்றபடியால் இதில் உயர்ந்த சாதியார் என்போர் தற்காலப் பறையர் என்று அழைக்கப்படுவோர் வாசம் செய்யும் இடங்களுக்குப் போவார்களேயானால் அடித்துத் துரத்திச் சாணி சட்டியை உடைப்பது பூர்ண வழக்கமாய் இருந்தது.

அப்பயத்தைக் கொண்டு உயர்ந்த சாதியார் பறைச்சேரியின் வழியில் போவதற்கு அஞ்சுகின்றார்கள். மேலும், அத்தகைய சாணிச்சட்டியை உடைப்பது என்ற செயலும் அவ்வளவாகத் தற்காலத்தில் நிறைவேறுவதில்லை. தாழ்ந்த சாதியார் வாசம் செய்யும் இடத்தில் உயர்ந்த சாதிகள் போவது என்பது சாதி கெடும் என்பது அவரவர் அபிப்பிராயமாய் இருக்குமாயின் சக்கிலிப் பிணம், தோட்டிப் பிணங்களை அறுத்துச் சோதிப்பதை விடப் பறைச்சேரியின் வழியில் போவது சாதி கெடமாட்டாது. ஈதன்றி, பறைச்சேரி மத்தியில் இருக்கும் பள்ளிக் கூடங்களில் பிராமணர்கள் என்று சொல்லிக் கொள்ளும்படியானவர்களே ஆசிரியர்களாக இருந்து அப்பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிப்பதும் சேரிக்குள் போக்குவரத்தாய் இருப்பதும் ஸ்ரீ. சேஷாத்திரி அவர்களுக்கும் தெரிந்து இருக்கலாம்.

சொற்ப முனிசிபல் அதிகாரம் கொடுத்தபின் பறைச்சேரி மீதுள்ள பொறாமை விடாதவர்கள்வசம் சுயாட்சியும் கொடுத்து விட்டால் பறைச்சேரிகளும், பறையர்கள் என்று அழைக்கப்படுகின்றவர்களும் பெயர் ஊரில் இல்லாமல் பறக்க வேண்டியதேயாகும். ஆதலின் சாதி, பேதமற்ற திராவிடர்களே! - அதி சீக்கிரம் உங்களது சீர்திருத்தக் கூட்டத்தை வலுவு செய்து கிராமங்கள் தோறும் வியாபாரக் கூடங்களை நிலைநாட்டுங்கள். கருணை தாங்கிய பிரிட்டிஷ் துரைத்தனமே இவ்விடம் நீடித்து நிலைக்க வழி தேடுங்கள், வழி தேடுங்கள்.

இவ்வாறு பண்டிதமணி அவர்கள் ஸ்ரீ. சேஷாச்சாரியின் சாதித் திமிரைக் கண்டித்ததோடு சமுதாயச் சீர்த்திருத்தக் கருத்துகளையும் எவருக்கும் அஞ்சாமல் எழுதினார். ஆதிதிராவிடர் அடிமை இல்லை என்பதனையும் எடுத்துக்காட்டி வந்தார். அதனால் அவரது காலத்தில் ஆதிதிராவிட மக்கள் அவரால் விழிப்புணர்வோடு வாழ்ந்தனர் என்பதோடு, இழிவுபடுத்தும் கூட்டங் களின் முகத்திரையை அவர் கிழித்தார் என்பதும் மறுக்க முடியாத உண்மை.

அன்று சுடுகாட்டிற்குக் குரல் கொடுத்த பண்டிதமணியின் கோரிக் கையை ஏற்றுக்கொண்டு அனைத்துப் பகுதிகளுக்கும் மயானப் பாதை அமைத்துக் கொடுக்க வெள்ளையர் முன்வந்துள்ளதை நாம் நினைவு படுத் திட வேண்டும். அவரது அனைத்துக் கோரிக்கைகளும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்திற்குப் புதிய பாதையை அன்றே அமைத்து என்றுதான் சொல்ல வேண்டும்.

***சுதேசிகளின் சீர்திருத்தம்***

சாதிபேதமற்ற திராவிடர்களே, இத்தேசத்தின் பூர்வ குடிகளாகும். இவர்கள் பெரும்பாலும் தமிழ்பாஷை விருத்தியைக் கோரி நின்றவர்கள். ஆதலின் தென்னாட்டில் தமிழரென்றும், வடநாட்டில் திராவிடர்கள் என்றும், திராவிட பவுத்தர் என்றும் வழங்கி வந்ததுமன்றி,

'இலங்கைத் தீவில் உள்ளோர் சாஸ்திரங்களிலும் சரித்திரங்களிலும் பூர்வ குடிகளே திராவிட பவுத்தர் என்று வரைந்து இருப்பதுமன்றி வழங்கிக் கொண்டும் வருகின்றார்கள். சாக்கைய தன்மமானது இந்தத் தேசம் முழு வதும் பரவி இருந்த காலத்தில் இவர்களும் எங்கும் பரவினர். கணித சாஸ்திர வல்லுநர் வள்ளுவர், என்றும் தமிழ் பாஷை, இலக்கிய, இலக்கணம் வாசித்துக் கவிபாடும் திறத்தால் கவிவாணர், பாணர் என்றும், அக்கவிவாணருடன் கலந்து பாடுவோரை யாழ்ப்பாணர் என்றும், பூமி களைப் பண்படுத்திப் பயிரிட்டுச் சர்வ சீவர்களுக்கும் உபரிகளாகவும், ஈகை யுள்ளவர்களாகவும் இருப்பவர்களை வேளாளர்கள் என்றும், ஒன்றைக் கொடுத்து மற்றொன்றைச் செட்டாக மாறி வியாபாரம் செய்வோரை வணிகர் என்றும், பவுத்த சங்கம் சார்ந்த ஞானவிசாரணை உள்ளவர்களைச் சமணர்கள் என்றும், சமநிலை முதிர்ந்து உயர்குணம் பெற்று சர்வ உயிர் களையும் தன்னுயிர்போல் பாவிக்கும் தன்மையைச் சார்ந்த நிலை பெற்று இருடிப்பாய் மறந்து வணங்கி வந்தார்கள். இப்பெயர்கள் யாவும் அவரவர் கள் தொழிலுக்கும் செயலுக்கும் தக்கவாறு விவேகிகளால் வகுத்த பெயர் களாகும்.'

'எவ்வகையெனில் நமது விவேகம் மிகுந்த பிரிட்டிஷ் துரைத்தனத் தார் தங்கள் ஆங்கில பாஷையில் போதகர்களுக்கு 'பிரிஸ்ட்' என்றும்,

அரசர்களுக்கு 'கிங்' என்றும், படைவல்லுநர்களுக்கு 'சோல்ஜர்கள்' என்றும் வியாபாரிகளுக்கு 'மர்ச்செண்ட்ஸ்' என்றும், பயிரிடுவோருக்கு 'அக்ரிகல்சரிஸ்ட்' என்றும் வான சாஸ்திரிகளுக்கு 'அஸ்ட்ராமினர்கள்' என்றும் அவரவர்கள் தொழிலுக்கும், சொல் செயலுக்கும்பெயர் கொடுப் பது போல் தமிழ்ப் பாஷையதில் வல்லுநர்களான சமண முனிவர்கள் மேற் கூறியுள்ள மொழிப் பெயர்களை வகுத்து அழைத்து வந்தார்கள்.

'இத்தகைய தொழில் பெயர்களையும், செயற் பெயர்களையும் பெற்றிருந்த போதிலும் ஒவ்வொருவருக்கும் உள்ள அன்பும், ஐக்கியமும் மாறாமல் சிங்கள ராஜன் மணம் புரிந்து கொள்வதும், சிங்கள ராஜன் மகளை வங்காள ராஜன் மகன் மணம் புரிந்துகொள்வதும், வங்காள ராஜன் மகளை சீனராஜன் மகன் மணம் புரிந்து கொள்வதுமாகிய பேதமின்றி இன்புற்று வாழ்ந்தனர்.

'அரசன் எவ்வழியோ குடிகளும் அவ்வழியே' என்பதற்கிணங்கப் பூர்வ சுதேச குடிகளும் திராவிடர்களும் வேளாளத் தொழிலாளியின் மகளை வாணியத் தொழிலாளியும், வாணிபத் தொழிலாளி மகளை மண்ணுத் தொழிலாளியின் மகனும், மணம் புரிந்து ஒருவருக்கொருவர் பேதமின்றிச் சுக வாழ்க்கையில் இருந்தார்கள். இத்தகைய ஒற்றுமையான வாழ்க்கைக் கும் ஒழுக்கத்திற்கும் புத்ததம்ம சீர்திருத்தங்களே ஆதாரமாகும்" (1)

வரவுக்கு மிஞ்சிய செலவு

**ஆன முதலி லதிகஞ் செலவானால்**
**மான மழிந்து மதிகெட்டுப் – போனதிசை**
**எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்புந் தீயனாய்**
**நல்லார்க்கும் பொல்லனாம் நாடு** அவ்வையார் பாடல்

'ஒரு மனிதன் பத்து ரூபாய் சம்பாதிப்பானாயின் அவன் அதற்குத் தக்க பசிப்பும், அதற்குத்தக்க வாடகையும், அதற்குத் தக்க ஒழுக்கத்தை யும் ஒழுகுவானாயின் யாதொரு கவலையுமின்றி சுகஜீவியாக வாழ்வான். அங்ஙனமின்றி வரவுக்கு மிஞ்சிய செலவானால் கொழுமெய்ப்பசிப்பும், டம்பவுடையும், மதிமயக்கக்கூடிய குடியும் கற்று, மனம் போன போக்கில் செலவு செய்து வருவானாயின் மானமிழந்து, அறிவு மயங்கி, சென்ற இடங்களில் ஒளிந்து, நல்லவர்களுக்கும் பொல்லானாய் மற்றவர்களுக்கு முன் அதே கவலையால் சுழன்று அல்லல் அடைவான்.

ஆதலில் மக்கள் தங்கள் வருமானத்திற்கேற்பத் தங்களது செலவு களை வைத்துக்கொண்டு வாழவேண்டும். அதைவிடுத்து வீண் செலவு செய்வதை விட்டுத் தாங்கள் சம்பாதிக்கும் திரவியத்திற்குத்தக்க செலவும்,

தாங்கள் சென்ற இடங்களில் எல்லாம் சிறப்பெய்தி நல்லவர்களுக்கு நல்லவராய்ப் பிறவித் துக்கமற்ற பரிபூரண நிலை அடைவான். (1)

இப்படி பண்டிதமணி அவர்கள் ஆதிதிராவிட மக்களின் உரிமைக்குக் குரல் கொடுத்ததோடு நில்லாமல், அவர்கள் வாழ்க்கையில் எப்படி வாழ வேண்டும் என்றும் சிக்கனத்தை ஏன் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் உணர்த்தியுள்ளார். இப்படிப்பட்ட சமுதாயத் தியாகச் செம்மலை இக்காலத்தில் பார்க்க முடியுமா? என்பது கேள்விக்குறியாகவே இருக்கின் றது. ஓர் இனத்தைப் பாதுகாப்பது என்பதும், அந்த இனத்தை நல்லவழியில் அழைத்துச் செல்ல வேண்டும் என்பதும் அக்காலத் தலைவர்களிடத்தில் மிகுதியாகவே காணப்பட்டன. அவர்களுக்கெல்லாம் முன்னோடியாக வழிகாட்டியவர் பண்டிதமணி அயோத்திதாசர் அவர்களே ஆவார்.

# நகர தூதன்

## மா. ச. மதிவாணன்

திராவிடர் இயக்கத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாக நின்ற - தந்தை பெரியாரின் குடிஅரசு, புரட்சி, பகுத்தறிவு ஏடுகளின் வரிசையில் 'நகர தூதன்' வார இதழும் முக்கியப் பங்களிப்பு செய்துள்ளது.

1930ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 25ஆம் தேதி முதல் 'திருச்சினாப் பள்ளி' என்று அப்போது அழைக்கப்பட்ட திருச்சியிலிருந்து நகர தூதன் வார ஏடாக வெளிவரத் தொடங்கியது.

ஆனாலும், 1933ஆம் ஆண்டு வெளிவந்த நகர தூதன் இதழ்களி லிருந்து தொடங்கிதான் நான் செய்திகளைத் திரட்ட முடிந்தது. நகர தூதனின் ஆசிரியர்களாக எம். இரத்தினம், எம். துரைசாமி, எம். ஆர். திருமலைசாமி ஆகியோர் இருந்துள்ளனர்.

நகர தூதன் வார ஏட்டைப் பற்றிய செய்திகளை அறிய மூன்று கால கட்டங்களாகப் பிரித்துப் பார்த்தால் அது ஆற்றிய பணிகளையும், அதன் திராவிடர் இயக்கக் கொள்கைப் பரிணாமத்தையும் நம்மால் எளிதில் விளங்கிக் கொள்ள முடியும்.

1930 முதல் 1935 வரை

1936 முதல் 1944 வரை

1945 முதல் இறுதிவரை

1947க்குப் பிறகு வெளிவந்த நகர தூதன் இதழ்களை என்னால் திரட்ட இயலவில்லை. இதை இன்னும் விரிவாகச் சொல்வதானால் - திராவிடர் இயக்க வரலாற்றுப் பார்வையில் விளக்குவதானால் தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கம் வேரூன்றல் - நீதிக்கட்சி சரிவுகாலம்

(1930 - 1935)

முதலாவது இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போர் - தமிழ்நாடு விடுதலை - நீதிக்கட்சி திராவிடர் கழகமாதல்

(1936 - 1944)

திராவிடர் கழக உருவாக்கத்தை விரும்பாமல் தொடர்ந்து நீதிக்கட்சியின் பெயரால் இயங்கியோருக்கு ஆதரவு - இந்திய விடுதலை - தந்தை பெரியார் எதிர்ப்பு நிலை (1945 முதல் 1947) என்றும் பிரித்துக் கொள்ளலாம்.

இனி முதல் காலகட்டத்தைப் பார்ப்போம். அதற்கு முன்பு இதழ் குறித்த அறிமுகத்தை விளக்குகிறேன்.

1925ஆம் ஆண்டு நவ. 21, 22ஆம் தேதிகளில் காஞ்சிபுரத்தில் திரு.வி.க. தலைமையில் நடந்த 31ஆவது ராஜீய காங்கிரஸ் மாநாட்டின் இரண்டாவது நாளில் பார்ப்பனரல்லாத மக்களின் வகுப்புவாரி உரிமை கோரும் 2 தீர்மானங்களைத் தந்தை பெரியார் கொண்டுவந்தார். அதற்கு அனுமதி மறுக்கப்பட்ட சூழலில் காங்கிரசிலிருந்து வெளியேறிய தந்தை பெரியார், சுயமரியாதை இயக்கத்தை உருவாக்கினார். முதலாவது சுயமரியாதை மாகாண மாநாட்டை 1929 பிப்.17, 18 தேதிகளில் செங்கல்பட்டில் நடத்தினார்.

அதேபோல 1916இல் பார்ப்பனரல்லாத மக்களுக்காக உருவான தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் வளர்ந்து 1930ஆம் ஆண்டு அக்.27இல் சென்னை மாகாணத்தில் பி. முனுசாமி நாயுடு தலைமையில் 4ஆவது நீதிக்கட்சி அமைச்சரவையை உருவாக்கியது. இத்தகைய அரசியல் சூழலில் திருச்சி, உறையூரிலிருந்து 'நகர தூதன்' வெளிவரத் தொடங்கியது.

நகர தூதனின் முதல் இதழ் கிடைக்காத போதும் அதன் மூன்றாம் ஆண்டு தொடக்க இதழில் (20.8.1933) வெளியிடப்பட்ட தலையங்கச் செய்தி மூலம் அது உருவாக்கப்பட்டதன் நோக்கத்தை நாம் உணர முடிகிறது.

> இரண்டாம் போரை இனிதே முடித்து, 52 வெற்றிகளையும் ஈட்டி (வாரங்கள் - கட்டுரையாளர்) இன்று முதல் 3ஆம் போர்க்களத்தில் இறங்குகிறோம்."
>
> நமது போர், துப்பாக்கிக் குண்டுகளைச் சொரிந்து, வெடி குண்டுகளை வீசி, விஷப்புகையைப் பரப்பி யுத்த முனையில் மயங்கிக் கிடக்கும் மக்களை மாய்க்கக் கூடியது அன்று; அனாவசியமாக சர்க்காரையும் தனி மனிதரையும் சதா தாக்கிக்கொண்டிருப்பதும் அல்ல. மக்கள் சமூகத்தைப் பித்தர்களாக்கும் அரசியல் கட்சிகளில் சேர்ந்துழைப் போரின் பிரீதியைப் பெறுதல் பொருட்டுப் போராடுவதும் அன்று.
>
> உலகினரின் சாதாரண தினசரி வாழ்க்கையில் நடக்கின்ற காரியங்களுக்காக, வாக்குச் சாதுர்யமும், பண வலிமையும்,

> ஜனக்கட்டுமுடையார் இவை இல்லாதவரை, பொதுஜன சேவை என்னும் போர்வையைப் போர்த்திக் கொண்டும் உதட்டில் சர்க்கரையைத் தடவிக் கொண்டும் உலகை மோசடி செய்துவரும் செய்கைகளைத் தவிடு பொடி யாக்கி, பாமர மக்களைத் தட்டி எழுப்பிக் கண்திறந்து வைப்பதே நமது போரின் தத்துவம்."

என்று நீள்கிறது அத் தலையங்கம். அத்தலையங்கத்திலிருந்து மேலை நாடுகளில் வெளியிடப்பட்ட பகுதிகளுக்கான செய்தி ஏட்டைப் போல் - தற்போது சென்னை மாநகரில் வெளியிடப்படும் Adyar Times, அடையாறு செய்திகள், மயிலை செய்திகள் போன்று விரிவான தளத்தில் வெளியிடுவது என்ற திட்டமிடல் இருப்பதையும் உணரமுடிகிறது.

நகரதூதனின் ஆண்டுத் தொகுப்புக்கு, 'போர்' என்றும் வாரத் தொகுப்புக்கு 'வெற்றி' என்றும் பெயரிடப்பட்டுள்ளது.

தொடக்க காலத்தில் 'டம்மி சைஸ்' அளவில் 12 பக்கங்களுடன் நகர தூதன் வெளிவந்தது. பின்னர் அது 16 பக்கங்களாகவும், அவ்வப்போது 20 பக்கங்களாகவும் வெளிவந்தது.

நகர தூதன் என்ற பெயர் திருச்சி மலைக்கோட்டை வரைவோவியம் (அ) கோட்டோவியத்தின்மீது எழுதப்பட்டும் கீழே 'ஞாயிறுதோறும்' வெளிவரும் என்றும் குறிப்பிட்டுள்ளனர். ஒவ்வொரு உள்பக்கத்தின் மேலும் City Herald என்று எழுதப்பட்டிருக்கிறது. தமிழ் மாதங்களாகச் சொல்லப்படுகிற சித்திரையில் தொடங்கும் மாதங்களும், 'பவ' போன்ற சமசுகிருத மாதங்களும் முகப்பில் நகர தூதன் தலைப்புக்குக்கீழே இரு கோடுகளுக்குக்கிடையில் குறிக்கப்பட்டுள்ளது.

நகரதூதனின் முதல் பக்கத்தில் பெரும்பாலும் 'பேனா நர்த்தனம்' பகுதியே இடம் பெற்றுள்ளது.

17.9.33 வரை 'நமது பேனாவின் நர்த்தனம்' என்றும் பின்னர் 1.10.33இல் 'பேனா நர்த்தனம்' என்பதன் கீழ்ப்பெயரும், 8.10.33, 15.10.33 இதழ்களில் பெயரின்றிப் பேனா நர்த்தனமும் 19.11.33 முதல் தொடர்ந்து 'பேனா நர்த்தனம்' பெயருடனும் வெளியிடப்பட்டது.

இதில் - பேனா நர்த்தனத்தில் 'கேசரி' என்ற புனைபெயரில் எழுதப்பட்ட 'நர்த்தனங்களே' மிகுதியாக உள்ளன.

இந்தக் 'கேசரி' என்பவர்தான் முதலாவது இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் திருச்சியிலிருந்து தமிழர் விடுதலைக்காய் 'பெரும்படை' திரட்டி

வழி நடத்திச்சென்றார் அப்போரில் 'ராணுவ மந்திரி' என அழைக்கப்பட்ட சுயமரியாதைச் சுடரொளி மணவை ரெ. திருமலைசாமி அவர்கள்.

அவரே பின்னாளில் அதாவது 1939இல் சென்னையிலிருந்து நகர தூதன் வெளிவந்தபோது ஆசிரியராகவும் பொறுப்பேற்றிருக்கிறார்.

நகர தூதன் இதழில் திராவிடர் இயக்கத்தால் செவிவழியிலும் எழுத்திலும் சிறப்பாகச் சொல்லப்படுவது கேசரியின் 'பேனா நர்த்தன'மே.

நகர தூதன் இதழின் இறுதிப் பக்கம் பெரும்பகுதி விளம்பரங்களாகவே அமைந்துள்ளன.

இதழின் 6ஆம் பக்கத்திலும் அவ்வப்போது 8ஆம் பக்கத்திலும் தலையங்கம் தொடர்ந்து எழுதப்பட்டிருக்கிறது.

1945க்கு முன்பு வரை தலையங்கப் பகுதியின் முகப்பில்,

**புற்றில் வாழ் அரவுக்கஞ்சோம், பொய்யர் தம் மெய்யுக்கஞ்சோம்**
**வற்றெழில் வேந்தர்க்கஞ்சோம், வெஞ்சிறை வாழ்வுக்கஞ்சோம்**
**கொற்றொழில் பீரங்கிக்கும், கொடும் பணத் திமிர்க்குமஞ்சோம்**
**பற்றில்லா ஏழை கண்ணீர் பார்க்க நாம் அஞ்சுவோமே**

என்ற வரிகள் தொடர்ச்சியாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

இன்றைய நாளேடுகளில் செய்தியாளர்கள் செய்திகளைச் சேகரிப்பது போல் – அதாவது.

மாநகராட்சி (அ) நகராட்சி, அரசு தலைமையகம், நீதிமன்றம், காவல் துறை, இயக்கத் தலைவர்கள் அறிக்கை, ஆன்மிகச் செய்திகள் என்ற அடிப்படையில் திருச்சி நகரைச் சுற்றி, எட்டிய பகுதிகளில் செய்திகளைத் தொகுத்து 'வார ஏட்டில்' கடைப்பிடித்திருப்பது நகர தூதனை நிமிர்ந்து பார்க்க வைக்கிறது.

அதன் வளர்ச்சிப் போக்கில் சினிமாப் பகுதி, உலகச் செய்திகள், இடம் பெறுகின்றன. அதேபோல் திருச்சி மட்டுமல்லாது பிற நகரச் செய்திகளையும் முக்கியச் செய்திகளாக வெளியிட்டது 'நகர தூதன்'.

சென்னை திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலில் தர்மகர்த்தா தேர்தலில் மதிகர்களுக்குத் (சக்கிலியர்களுக்கு) தர்மகர்த்தாவைத் தேர்ந்தெடுக்கும் உரிமை உண்டு என்று சென்னை உயர்நீதிமன்றம் அளித்த தீர்ப்பு (13.1.1935),

கோவை ஜில்லா சுயமரியாதை மாகாண மாநாடு ஈரோட்டில் நடைபெறுவது குறித்த விளம்பரம், 'நாயக்கர் நாயுடு முதலியார் சந்திப்பு' என்று மாநாட்டுச் செய்தி,

1933களில் சலவையாளர்களின் கடும் எதிர்ப்புக்குள்ளான நாடகப் பாட்டான 'வண்ணான் வந்தானே' பாட்டுக்கு எதிர்ப்புகள் குறித்த செய்திகள், அதேபோல் லால்குடி தாலுகா மேல அரசூரில் ஆதி திராவிடர் மீதான ஒடுக்கு முறைகள் போலப் பல்வேறு சமூகச் செய்திகளையும் நகர தூதன் தாங்கிப் பரிணமித்தது.

இனி அதன் முதல் காலகட்டத்தைப் பார்ப்போம்:

## *1930 – 1935*

இந்தக் காலகட்டத்தில் நகர தூதன் இதழ் குறித்துத் 'திருவரங்கம் பெரிய கோயில்' என்ற ஆன்மிக இதழ் வெளியிட்ட செய்தி மூலம் தெளிவாக அறியலாம். அச் செய்தியை 14.10.34 நகர தூதன், 'நகர தூதனுக்கு நற்சாக்ஷிபத்திரம்' தலைப்பில் வெளியிடப்பட்டுள்ளது. அது நகர தூதனின் அரசியல் தன்மையைச் சுட்டும் வகையில் இருக்கிறது.

'சுயமரியாதை இயக்கத்துக்கும், நாத்திகப் பிரச்சாரத்துக்கும் அதிக இடம்கொடுக்கிறது' என்று அந்த ஏட்டின் செய்தி எழுதியுள்ளது. அதே போல் 'பேனா நர்த்தனம்' பகுதியில் 'கேசரி' எழுதியதில் (2.9.34).

நான் பக்கா சுயமரியாதைக்காரன். அதிலும் ஜஸ்டிஸ் கட்சி குட்டையில் ஊறிய மட்டை. என் வயசில் பாதிக்கு மேல் ஜஸ்டிஸ் கட்சிக்கு அர்ப்பணமாயிற்று...

ஜஸ்டிஸ் கட்சியிலும் சுயமரியாதை இயக்கத்திலும் ஏன் உயர்த்திக் கூறிப் பாத்யதை கொண்டாடினேன் தெரியுமா? பொதுவான விஷயங்களில் தன்னுடைய அறிவைத் துலக்கியது ஜஸ்டிஸ் என்கிறார்.

அறிமுகவுரையில் சுட்டியது போல் துறையூர்ப் பஞ்சாயத்து போர்டு, குளித்தலை தாலுகா போர்டு, திருச்சி நகரசபை, திருச்சி டிஸ்ட்ரிக்டு முன்சீப் கோர்ட், ஸ்மால் கோர்ட், பொன்மலை ரயில்வே தொழிலாளர் சங்கம், கரூர் சொசைட்டி, கொலை வழக்குகள், திருட்டுச் சம்பவங்கள், பல்வேறு சங்கங்களின் செய்திகள், சமகாலத்திய ஏடுகள் குறித்த அறிவிப்புகள் என்று பொதுவான ஏடாகவே நடத்தப்பட்டது.

இருப்பினும் சுயமரியாதை இயக்கம், தந்தை பெரியார் குறித்தும் செய்திகள் அதிகம் இருக்கின்றன.

20.11.33இல் தந்தை பெரியார் தொடங்கிய புரட்சி வார ஏடு குறித்தும் 'புரட்சி' ஏடு நிறுத்தப்பட்டது குறித்தும், பின்னர் பகுத்தறிவு தினசரி தொடங்கப்பட்ட செய்தியையும் அவர் வெளியிட்டார்.

பகுத்தறிவு தினசரி குறித்து 26.8.34இல் நகர தூதனில் எழுதப்பட்ட செய்தியில்; 'பகுத்தறிவுக்கு மதிப்புரை எழுதி, குருவுக்கு மிஞ்சிய சிஷ்ய னாக நாம் விரும்பவில்லை' என்று பெரியாரின் மேல் வைத்திருந்த பற்றை நகர தூதன் வெளிப்படுத்தியது.

புரோகித மறுப்புத் திருமணச் செய்திகளை வெளியிட்ட நகர தூதன்

22.7.1934 இதழில் திருச்சி விதவா விவாகத் தம்பதிகள் தலைப்பின் கீழ்.

'A.L. சிதம்பரம் - T. ரங்கம்மாள்' ஆகியோரது நிழற்படத்தை வெளி யிட்டுள்ளது. அதுவே தூதன் பிரசுரித்த முதல் நிழற்படமாக இருக்கலாம்.

அதே போல் 1.7.34 இதழில், 'ஆரணியில் தோழர் ஈ.வெ. இராமசாமி அவர்களின் சொற்பெருக்கு'

'யாகக் கண்டனக் கூட்டம்'

செய்திக்குக் கீழே 'யாகத்தில் ஆடுகளைக் கொல்லும் கொடுமை' தலைப்பிட்ட (கார்ட்டூன்) கேலிச் சித்திரம் வரையப்பட்டுள்ளது. பார்ப்பனர் கள் கூட்டத்தில் யாகம் வளர்ப்பதற்கு ஆடுகளை வெட்டுதல் போல் அக் கார்ட்டூன் உள்ளது. அதுவும் தூதனின் முதல் கேலிச் சித்திரமாயிருக்கலாம்.

25.10.36 முதல் தூதனில் தனியே சினிமா பகுதி வரத் தொடங்கினா லும் 18.8.35 தூதனில் 'குலேபகாவலி' படம் பற்றிய செய்தி வெளியாகி யுள்ளது. அவ்வப்போது 'கேசரி' எழுதிய பேனா நர்த்தனம் 14.1.34 முதல் தொடர்ந்து வெளிவரத் தொடங்கியது.

மக்கள் அடைந்த வறுமையைச் சுட்டும் புரட்சிக்கவிஞனின் 'சோபன அறை' கவிதை 4.3.34இல் வெளியாகியுள்ளது.

இப்படி அனைத்துப் பிரிவுச் செய்திகளோடு வெளிவந்த நகர தூதன் திராவிடர் இயக்கப் போர்வாளாகப் பரிணமித்த 1936 முதல் 1944 வரை யிலான காலகட்டத்தை இனி பார்ப்போம்:

## *1936 – 1944*

1936களில் தமிழகத்தின் அரசியல் சூழல் பற்றி ஒரு சில வரிகள்.

1935ஆம் ஆண்டு புதிய இந்திய அரசியல் சட்டப்படி 1936இல் பொதுத் தேர்தல் நடைபெற்றது. காங்கிரசுக் கட்சி தேர்தலில் ஈடுபடலாம் எனக் காந்தியார் எடுத்த முடிவின்படி அப்போது தமிழ்நாடு காங்கிரசின் பொறுப் பாளராக இருந்த ராஜாஜியும் காங்கிரசைத் தேர்தலில் ஈடுபடுத்தினார். காங்கிரசு வெற்றி பெற்றது. இருப்பினும் ஆளுநர்களின் அதிகாரம் குறித்த விஷயத்தில் உருவான முரண்பாடுகளால் காங்கிரசு ஆட்சியமைக்க முன்வரவில்லை.

சென்னை மாகாணத்தில் நீதிக்கட்சியை ஆட்சி அமைக்க அப்போதைய ஆளுநர் கோரினார். இதையடுத்து 1937 ஏப்ரல் 1இல் கே.வி. ரெட்டி நாயுடுவை முதல் அமைச்சராகக் கொண்டு ஏ.டி. பன்னீர்செல்வம் எம்.ஏ., முத்தையா செட்டியார், பி. கலிபுல்லா சாகிப் பகதூர், மயிலை எம்.சி. இராஜா, ஆர்.எம். பாலட் ஆகியோரை உள்ளடக்கிய அமைச்சரவை அமைந்தது. பின்பு ஜூலை 14இல் இராஜாஜி தலைமையில் 10 அமைச்சர்கள் கொண்ட அமைச்சரவை உருவானது.

இராஜாஜி மாகாண முதல்வராகப் பொறுப்பேற்பதற்கு முன்பிருந்தே தமிழ்நாட்டில் இந்தி திணிக்கப்படும் சூழல் நிலவிவந்தது.

1938இல் ஏப்ரல் 21இல் தமிழ்நாட்டில் 1 முதல் 3ஆம் பாரம் வரையிலான வகுப்புகளில் 'கட்டாய இந்தி' உத்தரவை ராஜாஜி பிறப்பித்தார். ஆனாலும் இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் அதற்கு முன்பாகவே நகர தூதன் இறங்கியது.

காந்தியடிகளின் 'கனிவுப் பேட்டி' தலைப்பில் தினமணி வெளியிட்ட செய்திக்கு எதிர்ப்பாக 4.4.1937 தூதனில் ஈழத்து சிவானந்த அடிகள் கட்டுரை எழுதினார். அக்கட்டுரையில் 'இந்தியைப் பொதுமொழியாக்க வேண்டும்' என்ற நோக்கில் தினமணி நிருபர் காந்தியிடம் பேட்டி கண்டதாகவும், அதற்கேற்பக் காந்தியடிகளும் பொதுமொழியாக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளதாகவும் கூறி இந்தி ஆதிக்கத் திட்டங்களை அடிகளார் சாடியுள்ளார்.

1937 மார்ச் 30இல் விழா ஒன்றில் பேசிய ராஜாஜி,

> கவர்னர் நிபந்தனைகளை ஏற்று, மந்திரி பதவி ஏற்றால் எனக்காக என்ன செய்வாய் என்று ஜம்னாலால் பஜாஜ் என்னை ரயிலில் கேட்டார். நான் ஸ்கூல் பைனலில் இந்தியைக் கட்டாயப்பாடமாக வைப்பதாகச் சொன்னேன். அவருக்கேற்பட்ட ஆனந்தம் அளவற்றது.

என்ற செய்தியை மையப்படுத்தி 18.4.37 இல் அடுத்த கட்டுரையை ஈழத்து சிவானந்த அடிகள் எழுதினார். அதிலிருந்து தொடர்ந்து இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் 'தூதன்' பங்கேற்கத் தொடங்கியது. இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் - இந்தி கட்டாய உத்தரவுக்கு முன்பு 'தூதனில்' வெளிவந்த செய்திகளில் சில தலைப்புகள்:

காந்தி செய்யும் கலாட்டா - தமிழர்கள் எந்த இந்தியைக் கற்பது? இந்தி பொது மொழியாகுமா? (11.4.37)

தேசத் துரோகி யார்? - ராஜாஜி கடைத் தேங்காயை வழிப் பிள்ளை யாருக்கு உடைக்கிறார் - வாக்குச் சம்பாதிக்க, கொடுத்த வாக்கு இதுதானா? (18.4.37)

15.8.1937இல் தூதன் எழுதிய 'வீரத் தமிழா வேடிக்கை பார்க்காதே!' தலையங்கம் இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் தூதனின் முதல் தலை யங்கம் அது sub-heading எனப்படும் 19 துணைத் தலைப்புகளுடன் 3 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளது. உணர்ச்சியைத் தட்டியெழுப்பி, தமிழருக்கு உரமூட்டிய அந்தத் தலையங்கத்தின் இறுதி வரிகள்:

'துயிலினின்றும் வீறிட்டு எழு! வீரத் தமிழா ரோஷத் தமிழா, ஆண் மைத் தமிழா திடகாத்திரத் திராவிடா! எழுந்திரு உறங்காதே! உற்றுப்பார்! உன்னைப் பெற்றதாய், ஈ உட்காராமல் எறும்பு கடிக்காமல் உன்னைப் பாது காத்து வளர்த்த பெற்றோர்களுக்கு நீ இன்பமூட்டிய குதலைப் பேச்சில் குடிகொண்ட தமிழ் அன்னை ஆபத்தில் இருக்கிறாள். வல்லரக்கர்கள் கையில் சிக்கித் திருமேனி கருமேனியாக்கப்படப் போகிறாள், மானபங்கம் செய்யப்படப் போகிறாள்! அந்த ஏற்பாட்டை எதிர்த்து நில்! அடியோடு ஒழி!! சிறைவாசமோ தடியடியோ எது வந்தாலும் லட்சியம் செய்யாதே! இல்லை - இல்லை என்று எதிரொலி கேட்கும்வரையில் உரைத்து நில்!!

தமிழ்நாட்டில் இந்தி கட்டாயக் கல்வியா? தமிழர்களே விழியுங்கள்! தாய்மொழிக்கு ஆக்கந் தாருங்கள் - ஈழத்து சிவானந்த அடிகள் (29.8.37)

தேசிய பாஷை பேச்சிலா? எழுத்திலா? (5.9.37)

29.8.37 முதல் தமிழ்நாடெங்கும் எழுந்த இந்தி ஆதிக்க எதிர்ப்புக் குரல்களை 'ஹிந்திக்கு ஆட்சேபம்' தலைப்பில் வாரந்தோறும் வெளி யிடத் தொடங்கியது.

இந்திக்கு எங்கும் எதிர்ப்பு, தோழர் பாரதியார் (சோமசுந்தர) வீர முழக்கம்.

தாய் மொழிக்காகச் சிறை செல்லவும் தயார். உயிர்விடவும் சித்தம் (12.9.37)

தோழர் ஆச்சாரியரும் ஓர் தமிழனா? - தேசீய வளர்ச்சிக்கு இந்தி அவசியமா? (26.9.37)

'ஹிந்தி ஏற்பட்டால்?' 10.10.37இல் இக்கட்டுரை வெளியானது. இந்தி ஆதிக்கத்துக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டால் தமிழர்கள் என்ன நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தியிருந்தது அக்கட்டுரை. இச்செய்தியில் ஒன்றைக் குறிப்பிடுவதைக் கடமையாகக் கருதுகிறேன். 1938இல் இந்தித் திணிப்புக்குப் பிறகு உருவாக்கப்பட்ட 'தமிழர்

பெரும்படை' குறித்துதான் இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது. தமிழரின் உரிமைக்கு எதிராய் நிற்கும் எதிராளிகளை எப்படிச் சமாளிப்பது என்று திட்டமிட்டுப் போராடிய வரலாறு திராவிடர் இயக்கத்தின் வரலாறு என்பதையே இது வெளிப்படுத்தியது.

'ஹிந்தியைக் கட்டாயப் பாடமாக நுழைத்த பிறகுதான் தமிழர்கள் தங்கள் 'தாய்மொழி'ப் பற்றைக் காட்ட வேண்டும். ஹிந்தியை எதிர்த்து சத்தியாகிரகப்படை கிளம்பி ஊர் ஊராகப் பிரச்சாரம் செய்து கொண்டு சென்னை வந்து சேர வேண்டும். 1 முதல் 3வது பாரம் வரையுள்ள பாட சாலைகள் எந்தெந்த ஊர்களில் இருக்கின்றனவோ அங்கெல்லாம் தலைமைச் சத்தியாகிரகப் படையின் கிளைப் படைகள் ஏற்பட வேண்டும்.'

அதில் தொடர்ச்சியாக -

சத்தியாகிரகப் படை - புரபொஸர் சோமசுந்தர பாரதியார் தளகர்த்த ராய்த் தலைமை வகித்து நடத்திச் செல்வாரென்று கேள்விப்படுகிறோம். அதிலேயே தொடர்ந்து, முதல் சத்தியாகிரகப் படை திருநெல்வேலி யிலிருந்து புறப்பட்டு இருபிரிவாகச் செல்லுமென்று தெரிகிறது என்று அச் செய்தி முழுமையும் சத்யாகிரகப் படை குறித்தே இருக்கிறது. இச் சிந்த னைதான் வளர்ந்து 'தமிழ்நாடு! தமிழருக்கே!' முழக்கத்துக்கு வழிவகுத்த வரலாற்றைப் பின்னர் தெரிவிக்கிறேன்.

அதே போல் 'தமிழா! கச்சை வரிந்து கட்டு' 27.3.38 தூதன் தலை யங்கம், நம்மைச் சிலிர்க்க வைக்கிறது -

> இந்தியைக் கட்டாயப் பாடமாக 125 பள்ளிகளில் ஏற்பாடு செய்துவிட்டார்கள். இந்த ஏற்பாடு கோடைக்கால விடுமுறை தீர்ந்ததும் அடுத்த மே, ஜூன் மாதம் முதல் அமுலுக்கு வரப்போகிறது

என்று தொடங்கும் அத்தலையங்கம் இறுதியில்,

> தோழர்களே! வாய்க்கரிசி போட்டுக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறுங்கள்! ஹிந்தி ஒழியும் வரை வீடு திரும்போம் என்ற சபதத்தோடு கச்சை கட்டிப் புறப் படுங்கள்! புஜத்தைக் குலுக்குங்கள்! ஆச்சாரி மந்திரி சபை அலறித் தவிக்கும்படி தொடைதட்டிக் கிளம்புங் கள்!! உங்கள் உறுதியானது நெஞ்சும் மலையும் நொறுக் கத்தக்கது. மனம் இரும்பையும் நசுக்கத்தக்கது; புஜம் எதிரிகளை பயமுறுத்தத்தக்கது, வீரம் உலகம் பூராவும் பாராட்டப்பட்டது - அப்படிப்பட்ட நீங்கள் கேவலம் ஆச்

சாரி வர்க்கத்துக்கா பயப்படப் போகிறீர்கள்?. ஒன்றுக்குமே நினைக்க வேண்டாம். அதோ இருக்கிறார்கள் ஈ.வே.ரா. வும் எஸ்.எஸ். பாரதியும் உங்களுக்கு வழிகாட்ட!

1938 ஏப்ரலில் கட்டாய இந்தி ஆணை பிறந்தது. கட்டாரிகளை முத்தமிட்ட தமிழ் அடலேறுகள் அணி அணியாய் ஆதிக்கத்துக்கு எதிராய் அணிதிரளத் தொடங்கினர்.

சென்னை தியாகராய நகரில் K.N. ஸ்டாலின் ஜெகதீசன் உண்ணா விரதச் செய்தியை 15.5.38 முதல் வாரந்தோறும் வெளியிட்டது.

'திருச்சி வாருங்கள்' என்ற தலைப்பில் 22.5.38இல் வெளியான தூதன் செய்தியில் இந்தி எதிர்ப்புப் போரில் தளபதிகளாகச் செயல்பட்டோர் குறித்த விவரம் இருக்கிறது.

'அடுத்த சனிக்கிழமை 28.5.38ஆம் தேதி தமிழ்நாட்டு சேனைத் தலைவர்கள் எல்லாம் திருச்சியில் ஒன்று திரள வேண்டும்' என்று தோழர் விசுவநாதம் (கி.ஆ.பெ.) ஓலை அனுப்பிவிட்டார்.

பட்டிவீரம்பட்டி பாண்டியன், பேட்டை தளவாய் குமாரசாமி, ஈழத்து சிவானந்தப் பரதேசி முதலிய தென்னகச் சேனைத் தலைவர்கள் தலைமையிலும்,

சென்னை நாயகம், காஞ்சி தங்கவேலு, தஞ்சை உமா மகேஸ்வரம் பிள்ளை முதலிய வடநாட்டு சேனைத் தலைவர்கள் தலைமையிலும்

28ஆம் தேதி திருச்சியில் தண்டு இறங்கிவிடும் இளந்தலைவர்கள் கே.எம். பாலசுப்ரமணியம், ஸி.என். அண்ணாதுரை, கே.வி. அழகர்சாமி, சேலம் ஜெகதீசன் முதலியோரும் சங்குகளைக் கையிலேந்தி வந்து விடுவார்கள்.

சேனாதிபதிகளான ஈ.வெ.ரா.வும் பாரதியும் அன்றைய தினமே துவஜம் துவக்கிவிடுவார்கள்.

10.8.1938இல் இந்தி ஆதிக்கத்தை முறியடிக்கும் தமிழர் பெரும் படை திருச்சியிலிருந்து புறப்படும். 9.9.38இல் சென்னை சென்றடையும் என்ப தோடு ராணுவ மந்திரி திருமலைச்சாமி பெயரில் அறிக்கை 24.7.38 இல் வெளியானது.

சென்னையைச் சேர்ந்த இந்தி எதிர்ப்புப் பெரும்படை 'கடந்து வரும் பாதை' குறித்த வரைபடம், சேர்ந்த பின்பு 11.9.38இல் சென்னை கடற் கரைக் கூட்டத்தில் மணவை திருமலைசாமி வெளியிட்ட 'பெரும்படை' விவர அறிக்கை தமிழர்களின் வீரத்துக்குச் சாட்சி. அக்கூட்டத்தில்தான் (25.9.38 தூதன்) தமிழ்த் தேசிய இனத்தின் விடுதலைக்கான முழக்கமாகத் 'தமிழ்நாடு தமிழருக்கே' எழும்பியது.

தமிழர் அரசியல் விடுதலை முழக்கமான தமிழ்நாடு தமிழருக்கே எழுப்பக் காரணமாக இருந்த இப்படை குறித்த முழுமையான செய்திகள் 'தூதனில்' நிச்சயம் இருக்கிறது என்றே கருதுகிறேன்.

தமிழ்நாடு தமிழருக்கே! முழக்கம் எழுந்தபிறகு 'தமிழ்நாடு தமிழருக்கே முழக்கம் எழுப்புகிறீர்களே! அப்படியானால் கன்னடப் பெரியாருக்கு இங்கு என்ன வேலை?' என்ற எதிர்முழக்கம் எழும்பியது. அதற்கு 16.10.38 தூதன் எழுதியது என்ன தெரியுமா?

> தோழர் ஈ.வெ. இராமசாமி தமிழரல்லர் என்று தகப்பன் பெயர் தெரியாத ஒரு மிக்ஸட் சொன்னான். அவனைப் பின்பற்றிச் சில செம்மறி ஆடுகள். இப்படிச் சொல்லு கிறவர்களில் எவனாவது, அவன் ஒரே அப்பனுக்குப் பிறந்தவனாயிருந்தால் ஈ.வெ.ரா. தமிழர் அல்ல என்று சென்னையில் ஒரு கூட்டம் போட்டு பேசட்டும்.

என்று கடுமையாகத் தொடர்ந்தது கேசரியின் 'பேனா நர்த்தனம்' அதைத் தொடர்ந்து தமிழ்நாடு விடுதலை முழக்கம் தீவிரமடைந்து - சென்னை மாகாணத்தில் வாழ்ந்த ஆந்திரர், கர்னாடகத்தினர், மலையாளிகள் நலனைக் கொண்டு சென்னை மாகாணமாகிய திராவிடர் நாடு திராவிடருக்கே என்ற முழக்கத்தை ஆதரித்துக் கட்டுரைகளும், பேனா நர்த்தனங்களும் வெளி யிட்டது. 'ஆரியர் - திராவிடர்' கருத்தியல் விவாதங்களும் தொடர்ந்தன (3.12.39, 8.1.39, 26.11.39). திராவிடர் சாம்ராஜ்யம் குறித்த விரிவான தலை யங்கத்தைத் தீட்டியது தூதன்.

இந்திப் போரில் கைது செய்யப்பட்ட பெரியார் சிறையிலிருந்தார். நீதிக்கட்சித் தலைவராக 1938 டிசம்பர் 29, 30இல் சென்னை மாநாட்டில் தேர்வு செய்யப்பட்டார். இன்றைய நாளேடுகள் - இதழ்களில் 'Scoop' எனப்படும் ரகசியச் செய்தியையும் தூதன் கடைப்பிடித்தது.

எப்படி தெரியுமா? இச்செய்தியை 24.4.38இல் 'நாளை நடைபெறும் ஜஸ்டிஸ் கட்சிக் கூட்டத்தில் தோழர் ஈ.வெ.ரா. அவர்கள் ஜஸ்டிஸ் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படலாம் என்று நம்பத்தகுந்த தகவல்கள் தெரிவிக்கிறது' என்பதாகத் தூதன் செய்தி வெளியிட்டது.

இந்தி எதிர்ப்புப் போர் தொடங்கியிருந்தபோதும் தமிழ்நாட்டில் தமிழ் சினிமாக்களின் நுழைவுக் காலமாகவும் 1936கள் அமைந்தது. அத்துறையிலும் தூதன் மிகுந்த கவனம் செலுத்தியது. இறுதிப் பக்க விளம்பரங்கள் திரைப்பட விளம்பரங்களாகவே வந்தன.

25.10.36 முதல் 'சினிமா பகுதி' வெளிவரத் தொடங்கியது. சினிமா குறித்துத் தூதன் வெளியிட்ட செய்திகளில் மிகச் சிலவற்றின் தொகுப்பு.

மதுரை மோகன் மூவிடோன் கம்பெனியின் ‘சந்திரமோகனா’ திரைப்பட விமர்சனம் (25.10.36)

தேவிகாராணி நடித்த ‘அச்சுக்கனியர்’ படம் குறித்து படத்தின் போட்டோகிராபி, சப்தம் பதிவு, டைரக்ஷன் குறித்தும் ஆழமான விமர் சனம் (15.11.36)

சந்திரகாந்த விமர்சனம் (3.1.37)

தேவிகாராணியின் வாழ்க்கைச் சரித்திரம் (17.1.37)

முத்தமிடலுக்குத் (திரைப்படத்தில்) தடை, சென்னையில் நடிப்புக் கல்லூரி (17.1.37)

வடஆர்க்காடு மாவட்டம் செய்யாறு தாலுகாவில் 16.1.37இல் நடந்த அப்பர் படப்பிடிப்புக்கு ஜைனர்கள் எதிர்ப்பு (24.1.37)

சினிமாவின் தீமைகளைத் திருத்துவதெப்படி? (10.1.37)

இரு சகோதரர்கள் விமர்சனம் (7.2.37)

மருத்துவர்களுக்குச் ‘சந்திரகாந்தா’ படம் எதிர்ப்பா? (14.2.37)

1936ஆம் வருடத்தின் சிறந்த நடிகர் - சிறந்த படங்கள் எதுவென்பது குறித்துச் சென்னை பிலிம் லீகினர் நடத்திய சினிமா தேர்தல் முடிவுகள் (21.2.37)

சுவைக்காகச் சில தகவல்கள்

| தமிழ்ப் படங்கள் | ஓட்டுகள் |
|---|---|
| பக்த குசேலா | 560 |
| பட்டினத்தார் | 401 |
| இரு சகோதரர்கள் | 332 |
| நடிகைகள் | |
| எஸ்.டி. சுப்புலட்சுமி | 961 |
| எம்.எல். விஜயாள் | 293 |
| பாலசரஸ்வதி | 184 |
| நடிகர் | |
| கே.பி. கேசவன் | 662 |
| எம்.கே. தியாகராஜ பாகவதர் | 352 |
| தண்டபாணி தேசிகர் | 227 |

சதி அகல்யாவில் நடித்த நடிகை கே. தவமணி தேவியின் பெரிய புகைப்படம், இன்றைய நாளிதழ், வார இதழ்கள் வெளியிடும் அளவில் (11.7.37)

1.8.37 முதல் படமும் பாட்டும் தலைப்பில் சினிமாத் துணுக்குகள்

தமிழ்த் திரைப்பட வரலாறு குறித்து ஆய்வு செய்வோர் நகர தூதனை அவசியம் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்.

1936இல் மொத்தம் 39 தமிழ்த் திரைப்படங்களே வெளிவந்ததாகத் திரைப்பட ஆய்வாளர் அறந்தை நாராயணன் எழுதியுள்ளார். அந்தக் காலகட்டத்தில் நகர தூதன் வார ஏடும் தமிழ்த்திரை வளர்ச்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு இன்றைய நாளேடுகள், இதழ்கள் போலத் திரைப் படம் குறித்த விமர்சனங்களையும், ஏராளமான துணுக்குச் செய்திகளையும் தூதன் வெளியிட்டுள்ளது.

அதே காலகட்டத்தில் வெளிவந்த உலகச் செய்திகளில் சில:

முசோலினியின் முற்கால ஒழுக்கம் (11.10.36)

ஸ்பெயின் கலக விபரீதங்கள் (படத்துடன் 11.10.36)

இத்தாலி அல்பானியாவை விழுங்குகிறது (25.10.36)

வாலிபக் காதலுக்கு உகந்த நாடு (18.10.36)

ஸ்காட்லாந்து சுயாட்சி உரிமை கோருகிறது 8.11.36

விளையும் பயிர் முளையிலேயே

ஸ்டாலின் - கெமால் - ஹிட்லர் - முசோலினி படங்களுடன் முழு விவரங்கள் (2.7.39)

ஸ்டாலின் - டிராட்ஸ்கி விரோதிகளா?

ரகசிய ஏஜெண்டுகளா?

சதி வழக்குகள் (7.2.37)

பிரிட்டனில் 296 கோடீசுவரர்கள் (28.2.37)

முடி இழந்த மன்னர்கள், நாடு துறந்த தலைவர்கள் 13 பேரின் படங்கள் - விவரங்களுடன் (18.6.39)

சர்வாதிகாரிகளின் லீலா விநோதம் (9.7.39)

அழகிய சுவிட்சர்லாந்தை ஹிட்லர் படை அழிக்குமா? (19.11.39)

வீர பின்லாந்தின் போர் (12.11.39)

ஸ்பெயின் என்னவாகும்? (16.7.37)

சீனத்து சகோதரிகள் தலைப்பில் (13.8.39)

ஸ்ன்யாட் சென்,

சியாங்கே ஷேக்

பிக்டர் குஸ் மனைவிகள் பற்றிய செய்திகள்

11.12.38இல் வீங்கல் - வெடித்தல் - சுருங்கல் பகுதியும் - நகைச்சுவை - கிண்டல் கலந்த விமர்சனப் பகுதியாக வெளியானது.

இரண்டாம் உலகப் போர் குறித்த செய்திகளை 'யுத்த டைரி' பெயரிலும், படங்கள், வரைபடங்களுடனும் தூதன் வெளியிட்டதும்.

1940களின் தொடக்கத்தில் நீதிக்கட்சியில் சலசலப்பு உருவானது. திருவாரூரில் 1940இல் நடந்த நீதிக்கட்சியின் 15வது மாநாடு அடுத்த மாநாட்டைச் சேலத்தில் நடத்த முடிவு செய்தது. இருப்பினும் 1944இல் தான் சேலம் மாநாடு நடந்தது. இதற்கிடையில் நீதிக்கட்சியில் உருவான பிணக்கு களின் பின்னணியில் 1944 ஆகஸ்டு 27இல் சேலம் மாநாடு நடந்தது. பின்னர் 'திராவிடர் கழகமாக' மாற்றம் பெறுவதற்கான அறிவிப்பு செய்யப் பட்டது. அதிருப்தியடைந்தோர் நீதிக்கட்சியின் பெயராலேயே தொடர்ந்து இயங்க முற்பட்டனர். பி.டி. இராசன் தலைமையில் அவர்கள் இயங்கினர். அவர்களுக்குக் கைவாளாக நகர தூதன் மாறியது.

இதே சூழலில் திருச்சியிலிருந்து வெளிவந்த நகர தூதன் 1939 ஜூன் மாதம் முதல் சென்னையில் வெளிவரத் தொடங்கியது.

அப்போது தந்தை பெரியாரின் விடுதலை - ஈரோட்டுக்கு மாறியது. சென்னைக்கு வந்த பிறகுதான் உலகச் செய்திகள், சினிமாச் செய்திகள் அதிகளவில் படங்களுடன் அதிகமாக வெளிவரத் தொடங்கின. சென்னை யிலிருந்து வெளியிட்டபோதுதான் M.R. திருமலைசாமி ஆசிரியராக இருந்தார்.

தூதன் இறுதிப் பக்கத்தில் 'City Herald' என்று முகப்பைப் போலவே இறுதியிலும் போர் - வெற்றி என எழுதி முன் அட்டை போலவே தொடர்ந்தது.

இந்தி ஆதிக்கம் ஒழிந்த செய்தியைப் பீடை ஒழிந்தது (25.2.40) ஏ.டி. பன்னீர் செல்வம் மறைந்த செய்திக்கான படத்துடனான தலையங்கம் (10.3.40), 15.9.40 தூதனில் வித்தியாசமாக 10ஆம் ஆண்டு இதழை முன்னிட்டு தந்தை பெரியார் படம் எனப் பல்வேறு செய்திகளுடன்

திராவிடர் இயக்கப் போர்வாளாக வந்த தூதன்தான் 1944க்குப் பிறகு பாதை மாறியது. 1941, 42, 43, 44 இதழ்கள் கிடைக்கவில்லை.

### *1945க்குப் பின் தூதனின் செய்திகள்*

1944இல் நடந்த சேலம் மாநாட்டில் திராவிடர் கழகம் பெயர் மாற்றம் நடந்த பின்பும் தொடர்ந்து நீதிக்கட்சிக்கு ஆதரவாக இருந்ததை 27.5.45 பேனா நர்த்தனம் தெரிவிக்கிறது.

பார்ப்பனர் எதிர்ப்பில் முனை மழுங்கி, நீதிக்கட்சியாக அது தொடர்ந்தாலும் 'தமிழ்நாடு விடுதலை' கொள்கைக்காகக் குரல் கொடுத்தது நகர தூதன். தந்தை பெரியார் அவர்களை விமர்சித்த இதழாக மாறிய பின்னும் '1947 ஆகஸ்ட் 15 துக்க நாள்' என்று பெரியார் அறிவித்ததை அண்ணா மறுத்து இன்ப நாள் என்றார். அதற்கு விளக்கமளித்து "ஆகஸ்டு 15 சுதந்திர நாளா?" என்று மணவை திருமலைசாமி எழுதிய கட்டுரை இன்று திராவிடர் இயக்கத்தின் வரலாற்றில் போற்றப்படுகிற ஒன்று.

அதேபோல் 13.1.47 முதல் தொடர்ந்து 9 வாரங்கள் 'திராவிடஸ்தானும் பாகிஸ்தானும்' தலைப்பில் பேனா நர்த்தனம் எழுதியது.

1945களில் கிடைத்த இதழில் தூதனின் தலையங்க முழக்கம் இல்லை. பக்கங்கள் எண்ணிக்கை 8 ஆகக் குறைந்திருந்தது. முழுவதும் செய்தி களாக, விளம்பரங்கள் இன்றி 'நீதிக்கட்சி'யாகத் தொடர்ந்து செயல்பட்ட பி.டி. இராஜனுக்கு முழு ஆதரவளித்தது தூதன்.

நகர தூதனின் இறுதிக் காலமாகக் கருதுவது அது பெரியார் தலை மையில் இல்லாதபோதும் திராவிடர் இயக்கம் என்றே செயல்பட்டது. அதே போல் தமிழ்நாடு விடுதலைக் கொள்கையில் பிடிப்பு இருந்தது. ஆனால் திராவிடர் இயக்கத்தின் 'பார்ப்பனர் எதிர்ப்பு'க் கொள்கை கைவிடப்பட்ட தோற்றம் இருந்தது.

தூதனின் வரலாற்றுப்பாதையில் முக்கியமானது 1936 முதல் 1944 வரை. அதில் இரைந்து கிடந்த செய்திகள் ஓரளவு தொகுக்கப்பட்டுள்ளன. இருப்பினும் தூதன் குறித்து நான் ஆய்வு செய்தபோது எனக்குத் தோன்றிய இரண்டு சிந்தனைகளைத் தமிழாய்ந்த, திராவிடர் இயக்க முன்னோடிகள் உள்ள இந்த அவையில் முன்வைக்க விரும்புகிறேன்.

1. இன்னமும் திராவிடர் இயக்க வரலாறு முழுமையாக எழுதப் படவில்லை.

2. இன்னமும் இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போர் முழுமையாக எழுதப் படவில்லை.

திராவிடர் இயக்கம் குறித்த நல்ல அம்சங்கள் வைக்கிற அதே நேரத்தில் அந்த இயக்கத்துக்குக் குழிதோண்டியவர்களை ஒரு கட்டம் வரை தூதன் படம் பிடித்துள்ளது. நீதிக்கட்சியில் கி.ஆ.பெ. குறித்த தூதனின் பேனா நர்த்தனம் 6.10.40, 3.11.40களில் எழுதிய நர்த்தனங்கள் என்னை இப்படிச் சொல்ல வைத்தது.

அன்றைய 'தினமணி' நாளேடு, திராவிடர் இயக்கத்தை ஒழித்துக் கட்ட என்று சொல்லுமளவுக்குச் செயல்பட்டதைப் பெரும்பாலான வாரங்களின் - நர்த்தனத்தில் கேசரியின் எழுத்தில் சொன்னால் 'தினப் புளுகன்' என விமர்சிக்கப்பட்டுள்ளது - போன்ற செய்திகளும் (22.8.37).

இந்தி ஆதிக்க எதிர்ப்புப் பெரும்படைக்கு '101 பேர்' தேவை என்று விளம்பரம் செய்தபோதும் 425 பேர் விண்ணப்பித்தனர். 1938 ஆகஸ்ட் 1இல் திருச்சி நகர தூதன் அலுவலகம் முன்பு புறப்பட்ட அப்படை 42 நாட்கள், 234 கிராமங்களில் பிரச்சாரம் செய்து 60 முக்கிய கிராமங்களில் தங்கி - 87 பொதுக்கூட்டங்களை நடத்தி 9 நாட்கள் இளைப்பாறி ஊர் விட்டு ஊர் செல்ல நடந்த மைல்கள் 409.

உள்பகுதிகளில் சுற்றிய சுற்றாக 108 மைல்கள் கொள்ளிடத்தின் ¾ மைல் அகலத்தைத் தோணி மூலமும்,

பண்ருட்டி அருகில் பெண்ணையாற்றை ½ மைல் அகலத்தில் அரைவயிறு அளவில் நீந்தி -

திருக்கழுக்குன்றம் அருகே பாலாற்றில் உச்சி வெயிலில் நடந்து

27 மைல்கள் நனைந்த உடுப்புகளோடு நடந்து

11.8.38இல் அப்படை சென்னை சேர்ந்தது.

நகர தூதன் எப்போது நின்று போனது எனத் தெரியவில்லை. ஆனால் தமிழ்நாடு விடுதலை முழக்கம் எழுந்துள்ள இந்தச் சூழலில் தூதனின் சுவடுகளை வெளிக்கொணர்தல் அவசியம்.

# தனி அரசு

## பி.வி. கிரி

திராவிட இயக்க வரலாற்றில், பத்திரிகைக்கும் பெரும் பங்குண்டு. சுருங்கச் சொன்னால், பத்திரிகைகளே அதற்கு அடித்தளமாய் இருந்திருக் கின்றன என்பதுதான் உண்மையாகும்.

பொதுவாகப் பத்திரிகைகளைக் காலத்தின் கண்ணாடி என்று கூறு வார்கள்; இதழியல் வரலாறும் அப்படித்தான் கூறுகின்றன. அந்தந்தக் கால வாழ்க்கை, கலை நாகரிகம், மொழி நடை முதலான பண்புகளைப் படம் பிடித்துக் காட்டுவனவாகப் பத்திரிகைகள் விளங்கியிருக்கின்றன.

விடுதலைக்கு முன் வெளிவந்த பத்திரிகைகள் விடுதலைக்குப் பின் வெளிவந்து கொண்டிருக்கின்ற பத்திரிகைகள் எல்லாமே விடுதலைப் போருக்கான கேடயமாகவும் சமுதாய வளர்ச்சிக்கான வழிகாட்டியாகவும் இருந்திருக்கின்றன. அதே சமயம் இதழியல் வளர்ச்சிக்கும், அவற்றின் வரலாற்றுக்கும் அவை பெரிதும் உதவியாக இருந்திருக்கின்றன.

இதழியல் உலகில் ‘மணிக்கொடி’ இலக்கிய இதழுக்குப் பெரும் மதிப்புண்டு. ‘மணிக்கொடிக் காலம்’ என்று சொல்லுகின்ற அளவுக்கு அது தோன்றி முத்திரை பதித்தது. இது, முப்பதில் தொடங்கி, நாற்பதில் அதாவது பத்தாண்டுக்காலம் நடந்து முடிவு பெற்றது. இந்தக் காலகட்டத்தில் இது பல எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தியது - உருவாக்கியது. மணிக்கொடி எழுத்தாளன் என்று பெருமையோடு பேசிக் கொள்ளும் அளவுக்கு அது புகழ்பெற்று விளங்கியது.

அதைப் போல, இதழியல் உலகில் திராவிட இயக்க இதழான ‘தனி அரசு’ இதழும் வாசகர்களை வெகுவாகக் கவர்ந்தது. பல்வேறு கால கட்டங்களில் அது உருவாக்கம் பெற்று, பிறகு நாளிதழாக வெளிவந்தது. புத்தக அளவில் வெளிவந்தபோதும் சரி நாளிதழ் அளவில் வெளிவந்த போதும் சரி அது பல எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தியது. நான் அறிமுகமானதும் இந்த இதழிலேதான் என்று பெருமையோடு சொல்லிக்

கொள்ள விரும்புகிறேன். அதில் பணியாற்றிய பலரும் அவ்வாறே கருது கின்றனர்.

தனி அரசு தி.மு.க.வின் முரசாகத் தொடங்கப்பட்டாலும் தமிழ் இலக்கியங்களை அது ஒதுக்கிவிடவில்லை. அரசியலும், இலக்கியமும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களாகக் கருதி அது வெளிவந்ததை அதன் இதழ்கள் சான்று பகர்கின்றன. எனவே, 'தனி அரசுக் காலம்' என்று ஒரு காலகட்டம் இருந்தது. அது திராவிட இயக்க வரலாற்றில், தனி அரசோச்சியது என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

இந்த இதழை நடத்தியவர், திராவிட முன்னேற்றக் கழக ஐம்பெரும் தலைவர்களில் ஒருவரான திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள்.

இந்த இதழில் பணியாற்றியவர்கள் இன்று சிறந்த எழுத்தாளர்களாக, கவிஞர்களாக, பத்திரிகையாசிரியர்களாக, செய்தியாளர்களாக, பதிப்பாளர் களாக விளங்குகிறார்கள். தனி அரசு அவர்களுடைய வாழ்க்கைக்கு வழி காட்டியாக இருந்தது மட்டுமல்ல, அடித்தளமாகவும் இருந்தது என்பதே உண்மையாகும்.

1954 - 55களில் இது புத்தக அளவில் இப்போதுள்ள குமுதம், ஆனந்தவிகடன் போல மாதமிருமுறை இதழாக வெளிவந்துள்ளது. 1959இல் இது நாளிதழாக மலர்ந்துள்ளது.

சென்னை, நுங்கம்பாக்கம், ஸ்டர்லிங் சாலையை ஒட்டியுள்ள வில்லேஜ் சாலையில் தனி அரசு நாளிதழ் அலுவலகம் அமைந்தது. 1959ஆம் ஆண்டு, நான் அதில் துணையாசிரியராகச் சேர்ந்தேன். அப்போது எனக்கு வயது 21, மாதச் சம்பளம் எவ்வளவு தெரியுமா? நாற்பது ரூபாய்.

திரு ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள், 24.9.1924இல் விருதுநகரில் பிறந்தார். பெற்றோர் பழனியப்பன் - நாகம்மாள். தந்தையார் நீதிக்கட்சியில் மிகுந்த ஈடுபாடுடையவராக விளங்கினார். அது, அவரது மகனையும் கவர்ந்தது. படிக்குங் காலத்திலேயே தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கக் கருத்துக்கள் அவரை வெகுவாகக் கவர்ந்தன.

28.5.44இல் தந்தை பெரியார் அவர்களின் தலைமையில் சீர்திருத்தத் திருமணம் நடந்தது. அப்போது அவருக்கு வயது 20 துணைவியார் பெயர். திருமதி பரமேஸ்வரி. இவர்களுக்குக் காந்தி, சௌந்தர் என்ற இரு புதல்வர்களும், வசந்தா என்ற புதல்வியும் பிறந்தனர்.

திரு ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள், விருது நகர் நகராட்சியில் பத்தாண்டுக் காலம் (1946 முதல் 1956 வரை) உறுப்பினராக இருந்தார். அவர் இருமுறை (1957 - 1967) சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்

பட்டார். தமிழ்நாடு சட்டமன்றத்தில் ஒன்பது ஆண்டுக்காலம் எதிர்க்கட்சி உறுப்பினராகச் செயலாற்றியிருக்கிறார். பிறகு ஆளுங்கட்சி உறுப்பினராக வும் இருந்து மிகச் சிறந்த பணியாற்றியுள்ளார்.

சட்டமன்ற உறுப்பினராக இருந்த காலத்தில் மதிப்பீட்டுக் குழுத் தலைவராக இருந்தார். 1968இல் இங்கிலாந்தில் நடந்த காமன்வெல்த் நாடாளுமன்ற மாநாட்டில் இந்தியப் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். 1977இல், வடசென்னைத் தொகுதியில் மக்களவை உறுப்பினராக வெற்றி பெற்று, ஒரே தி.மு.க. எம்.பி., என்ற பெருமையுடன், தி.மு.க.வின் கொள்கை களைப் பறைசாற்றினார்.

திரு ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள் மிகச் சிறந்த இதழாளராக விளங்கினார். அவரது எழுத்தில், பேச்சில் எளிமை, இனிமை கைகோத்து நிற்கும். பாமரரும் படித்து உணர்கின்ற வகையிலே, அவரது படைப்புகள் விளங்கும். அவர், மேடைப் பேச்சில் வல்லவர். சொல்ல வேண்டிய கருத்தைச் சுருக்கமாக மனத்தில் தைக்கிற மாதிரி கூறுவார்.

திராவிட இயக்கத்தில் இளம் வயதிலிருந்தே திரு. ஏ.வி.பி. ஆசைத் தம்பி அவர்கள் மிகுந்த பற்றுகொண்டு, பெரும் தொண்டாற்றியுள்ளார். 'திராவிட இயக்கத்திலே இன்று நேற்று அல்ல, 1937 - 38ஆம் ஆண்டு முதற்கொண்டு, நான் மாணவனாக இருந்த காலத்திலே இருந்து பணியாற்றி வருகிறவன்' என்று அந்தமானில் தமக்கு வழங்கப்பட்ட வரவேற்புப் பொதுக்கூட்டத்தில் அவர் தெரிவித்துள்ளார்.

இவருடைய எழுத்துக்கள் முதன்முதலில் பிரசண்டவிகடன் இதழில் வெளிவந்தது. இவர் சுமார் 40 நூல்கள் எழுதியுள்ளார்.

1948இல் 'காந்தியார் சாந்தியடைய' என்னும் நூலை எழுதியதற்காக அவர் ஆறுமாதக் கடுங்காவல் தண்டனை பெற்று, சிறையில் மொட்டை அடிக்கப்பட்டார். பல்வேறு காலகட்டங்களில் அவர் பத்து முறை சிறை சென்றுள்ளார்.

தந்தை பெரியார் அவர்களின் பேச்சுப்பாணியைப் பின்பற்றி, மேடை களில் அவரைப் போலவே பேசினார். இது, மக்கள் மத்தியிலே பெரும் வரவேற்பைப் பெற்றது. அதனால் அவரை 'வாலிபப் பெரியார்' என அழைத்தனர்.

1968இல் சிங்கப்பூருக்கும் 1972இல் தாய்லாந்துக்கும் அவர் பயணம் மேற்கொண்டார். மாடர்ன் தியேட்டரில் பல படங்களுக்குக் கதை, வசனம் எழுதியுள்ளார். தமிழ்நாடு சுற்றுலா வாரியத் தலைவராகப் பணியாற்றி யுள்ளார்.

அவர் மிகச் சிறந்த எழுத்தாளராக, பேச்சாளராக, பத்திரிகையாளராக, திரைப்பட வசனகர்த்தாவாக, எல்லாவற்றுக்கும் மேலாக மனித நேயமிக்க மாமனிதராக விளங்கினார்.

அந்தமான் தீவில் வாழும் தமிழ்ப் பெருங்குடி மக்களைச் சந்திக்கச் சென்ற அவர், 6.4.79 அன்று, அங்கு நடந்த மாபெரும் வரவேற்புப் பொதுக்கூட்டத்தில் உரையாற்றினார். இதுவே அவர் ஆற்றிய இறுதி உரையாகும். மறுநாள் 7.4.79 அன்று அங்கு அவர் இயற்கை எய்தினார்.

திரு ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள் நடத்திய தனி அரசு இதழ் கள் குறித்த வரலாற்றுக் குறிப்புகளைச் சேகரிக்க, முனைந்து செயல்பட்ட போது, பல நூலகங்களை நாடிச் சென்றேன்.

சென்னை எழும்பூரிலுள்ள கன்னிமாரா பொது நூலகம், அரசு ஆவணக் காப்பகம், பெரியார் திடலிலுள்ள பெரியார் நூலகம் - ஆய்வகம் இங்கெல்லாம் தேடிப் பார்த்தும் தனி அரசு இதழ்கள் கிடைக்கவில்லை. ஆனால், மறைமலையடிகள் நூலகத்தில் மட்டும், 1955இல், விருதுநகரிலி ருந்து வெளிவந்த தனி அரசு ஒரே ஒரு தொகுதி மட்டும் கிடைத்தது. அது, பாலைவனத்தில் ஒரு சோலைவனம் மாதிரி எனக்குப்பட்டது. ஓடிச் சென்று ஒரு நாள் முழுக்க அங்கேயே இருந்து குறிப்புகள் எடுத்தேன்.

விருதுநகரிலிருந்து வெளிவந்த அந்த இதழ்களைப் பார்த்தபோது, பழைய நினைவுகள் என் கண்முன் நிழலாடின. ஆனால், நாளிதழ்கள் எங்குமே கிடைக்கவில்லை. அத்துடன் திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்களைப் பற்றிய முழுமையான தகவல்களும் கிடைக்கவில்லை. இந்த நிலையில், ஒரே நம்பிக்கையாக அண்ணா அறிவாலயத்திலுள்ள, பேராசிரியர் ஆய்வக நூல் நிலையத்தை நாடிச் சென்றேன். அங்கேயும் தனி அரசு இதழ்கள் எதுவும் இல்லை. ஆனால், திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்களைப் பற்றிய குறிப்புகள் மட்டும் கிடைத்தன. அவை புதையல் கிடைத்தது போன்ற உணர்வை ஏற்படுத்தின. இந் நூலகத்தின் நூலகர் திரு. சி.கே. சுந்தரராசன் அவர்கள் மிகுந்த ஆர்வத்துடனும், பொறுமையுடனும் திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள் குறித்த பழைய இதழ்களைத் தேடி எடுத்துக் கொடுத்து, அவற்றை நகல் எடுக்கவும் உதவினார் அங்கிருந்த பழைய நண்பர் திரு. செ. பூபதி அவர்களும் எனக்கு உதவினார்.

ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல, 1955இல் வெளிவந்த இதழ்களை ஆராய்ந்தபோது, பல அரிய செய்திகள் கிடைத்தன.

25.5.55 தனி அரசு மாதமிருமுறை இதழைப் பார்க்கிறோம். அதா வது 43 ஆண்டுகளுக்கு முற்பட்ட அந்தப் பழம் பெரும் பத்திரிகையைப் பார்வையிடுகிறோம்.

அட்டையின் மேல் பகுதியில் பாதி அளவு கேலிச்சித்திரம் இடம் பெற்றுள்ளது. கீழ்ப்பகுதியில் 'தனி அரசு', ஆசிரியர்: ஏ.வி.பி. ஆசைத் தம்பி, விலை 3 அணா என்கிற விவரம் குறிக்கப்பட்டுள்ளது. பொதுவாக எல்லா இதழ்களின் முகப்புகளும் இப்படித்தான் அமைந்துள்ளன.

அட்டையை அடுத்து முதல் பக்கத்தில் தீப்பெட்டி விளம்பரம் ஒன்று காணப்படுகிறது. அந்த விளம்பரத்தில், 'எங்கள் 40 குச்சி கோபுர மார்க், 60 குச்சி வேட்டைச் சிங்கம் - தீப்பெட்டிகள், கடற்கரைக் குளிர்பிரதேசம் மலபார் மழைக்கு உகந்தது' என்னும் வரிகள் காணப்படுகின்றன. பொது வாக இந்த விளம்பரம் ஒவ்வொரு இதழிலும் இடம் பெற்றுள்ளது. மலர் - இதழ் என்பதற்குப் பதிலாக, வாள் 6 - வீச்சு 13 என்று குறிக்கப்பட்டுள்ளது.

அடுத்து, 'இதனுள்ளே...' என்ற தலைப்பில் பொருளடக்கம் காணப் படுகிறது. அதற்குக் கீழே, 'எழுத்தாளர் கருத்துக்கு ஆசிரியர் பொறுப் பல்ல. கதையில் வரும் பெயர்கள், சம்பவங்கள் கற்பனையே!' என்கிற வரிகள் காணப்படுகின்றன. இன்றும் பல பத்திரிகைகளில் இந்த வரிகள் இடம் பெற்றிருப்பதை நாம் பார்க்கலாம். இந்த இதழ், தொடர்ந்து விருது நகர் காந்தி அச்சகத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

முதல் கட்டுரையாக நம் கண்ணில் படுவது தலையங்கம். 'நரிக் குணம் ஒழியுமா?' என்னும் தலைப்பில், இராஜாஜியைத் தாக்கி அது எழுதப்பட் டுள்ளது. தலையங்கத்தில் சூடும் இருக்கிறது; சுவையும் இருக்கிறது. ஒவ்வொரு இதழிலும் இப்படி அந்தந்தச் சூழ்நிலைக்கு ஏற்பத் தலையங்கங் கள் இடம் பெற்றிருக்கின்றன. எதையும் துணிவுடன், யாருக்கும் அஞ்சாமல் எழுதுகின்ற மன உறுதி திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்களுக்கு இருந் தது என்பதற்குத் 'தனி அரசு' தலையங்கங்களே தக்க சாட்சியாகும்.

அடுத்து 'ஏகலைவன்' என்னும் சிறுகதை. இதை எழுதியவர், ஆசிரியரின் நெருங்கிய நண்பரான திரு. ப.சி.அ. வணங்காமுடி அவர்கள். இவர் 'தனி அரசு' நாளிதழாக வெளிவந்தபோதும் அதில் பணியாற்றினார்.

'பேனா நண்பர்கள் சங்கம்' என்ற பகுதி தொடர்ந்து இடம் பெற்றுள் ளது. 'இளைஞர் மன்றம்' என்னும் தலைப்பில் திரு அன்புப் பழம்நீ அவர்கள் இதனை நடத்தி வந்தார். இதில் சேருவதற்கான விண்ணப்பப் படிவமும் இதில் இருந்தது.

ஒவ்வொரு பக்கத்திலும் மாஜினி, பாரதியார், சாக்ரடீஸ், பிளேட்டோ முதலான அறிஞர்களின் பொன்மொழிகள் இடம் பெற்றிருந்தன.

இளைஞருக்கான 'விவாத மன்றம்' ஒன்றும் தொடர்ந்து இடம் பெற் றுள்ளது. 'பெண்களுக்கும் கல்லூரிப் படிப்பு அவசியம்' என்கிறது ஒரு கட்

டுரை. 'அகில உலகத்தோடும் தொடர்பு கொள்ள இந்தி போதுமானால், இந்தி கற்கத் தயார்' என்று நாவலர் இரா. நெடுஞ்செழியன் ஆற்றிய உரையை திரு கெ. பக்தவத்சலம் அவர்கள் குறிப்பெடுத்து எழுதியுள்ளார்.

'லட்சியப்பெண்' என்னும் தலைப்பில் சிறுகதை ஒன்றை திரு. இ.எல்.எம். சௌந்திரபாண்டியன் அவர்கள் எழுதியுள்ளார். கதையைப் படித்துக்கொண்டே வருகிறோம். ஒரு இடத்தில், இதன் தொடர்ச்சி ஆனி 12 'திராவிட சினிமா'வில் வெளிவரும் என்னும் குறிப்பு காணப்படுகிறது. திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள் 'திராவிட சினிமா' என்னும் மாத மிருமுறை இதழையும் நடத்தி வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

தொடர்ந்து இதழைப் பார்வையிடுகிறோம். திரு. ஏ.வி.பி. ஆசைத் தம்பி அவர்கள் எழுதிய 'அரச குமாரி' என்னும் தொடர்கதையின் 13ஆம் அத்தியாயம் இடம் பெற்றுள்ளது.

கடந்த கதையைப் பற்றி அறிந்து கொள்ள நமக்கு ஆசை வருவது இயல்புதானே. அந்த ஆசையை நிறைவேற்றும் வகையில், கடந்த கதை யைச் சுருக்கமாகக் கூறுகிறார் ஆசிரியர்.

'உப தளபதி மகேந்திரனும், அரச குமாரி கிளிமொழியும் காதல் கொண்டு சந்தித்து வருகின்றனர். கிளிமொழியின் பிறந்த நாள் விழா நடக்கிறது. பல நாட்டரசர்கள் வந்திருக்கின்றனர். இலஞ்சி நாட்டரசன் இந்திரஜித்தன் அரசகுமாரியைக் கண்டு மோகித்து, தன் நாடு சென்று மேக நாதன் என்ப வனை ஈழநாடு அனுப்புகிறான் பின்...' என்று கதை வளர்கிறது.

'இது உண்மையா?' என்னும் தலைப்பில் ஒரு பெட்டிச் செய்தி நம்மைப் படிக்கத் தூண்டுகிறது. அந்தப் பெட்டிச் செய்தி வருமாறு:

'வாலாஜாபாத் இந்துமதப் பாடசாலையின் நிர்வாகத்தில் ஊழல்கள் பல மலிந்திருப்பதாகத் தமிழ்நாடெங்கும் பொதுமக்கள் பேசிக்கொள்வது உண்மையா? ஊழல்களை மறைப்பதற்காக, அதன் நிர்வாகி, அங்கு செல் வோருக்கு, விலாப்புடைக்க விருந்தளிப்பது உண்மையா?' என்று மேலும் அந்தச் செய்தி தொடர்கிறது. இந்தப் பெட்டிச் செய்தி ஒவ்வொரு இதழி லும் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

கேள்வி – பதில் பகுதி ஒன்று 'படியுங்கள் பதிலை!' என்னும் தலைப் பில் தொடர்ந்து இடம் பெற்றுள்ளது. சினிமா அறிவுப் போட்டி ஒன்றும் தொடர்ந்து வந்துள்ளது. 'தனி அரசு' ஒவ்வொரு இதழும் 40 பக்க அள வில் வெளிவந்துள்ளது.

அடுத்த இதழ் அதாவது 10.6.55 இதழைப் பார்க்கிறபோது –

வழக்கம்போல் தலையங்கம். 'பயன்படுமா பண்டிதரின் பயணம்?' இது தலைப்பு. நேருவின் ரஷ்யப் பயணம் குறித்து இது எழுதப்பட்டுள்ளது. மஞ்சூர் என்பவர் எழுதிய 'வழுக்கி விழுந்த வள்ளி' என்னும் சிறுகதை ஒன்றும் இந்த இதழில் இடம் பெற்றுள்ளது. 'இது உண்மையா?' பெட்டிச் செய்தி இதிலும் உண்டு. பல இடங்களில் விசாரித்து அறிந்து சேகரிக்கப் பட்ட செய்திகள் இந்தப் பகுதியில் தொடர்ந்து இடம் பெற்று வந்தது என்று அறிகிறோம்.

'நமது விமர்சனம்' என்பது புத்தக மதிப்புரைப் பகுதி. விமர்சனங்கள் இப்போது வெளிப்படுவதுபோல, நான்கைந்து வரிகளிலேயே அமைந்து விடுகிறது.

இதற்கு அடுத்த இதழில் (25.6.55), 'சித்திரக்காரர்களே! எழுத்தாளர் களே!' என்னும் ஒரு பெட்டிச் செய்தியில், 'தனி அரசு' அட்டைப் படத்தில் வெளியிட நல்ல கருத்துள்ள கார்ட்டூன்களை ஓவியர்கள் வரைந்தனுப் பும்படியும், அரசியல், பொருளாதாரம், சமூகம் தொடர்பான கட்டுரைகளை எழுத்தாளர்கள் அனுப்பலாம் என்றும், விஷமிகள் பொறாமைக்காரர்கள் - ஆதிக்க வெறியர்கள் ஆகியோருக்குச் சுடச்சுட 'டோஸ்' கொடுக்கலாம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த 'டோஸ்' பகுதி தொடர்ந்து வெளி வந்தது. இந்தப் பகுதிக்குப் பெயர்: 'டோஸ் - டாக்டர்' என்பதாகும். டாக்டர் தானே 'டோஸ்' கொடுக்கிறார்?

'அன்புப் போர்' என்னும் இலக்கிய விமர்சனப் பகுதி ஒன்றும் இதழ்தோறும் இடம் பெற்று வந்துள்ளதைப் பார்க்கிறோம். இதில் டாக்டர் மா. இராசமாணிக்கனார், முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதன், வெ. சாமிநாதசர்மா, அ.மு. பரமசிவானந்தம் ஆகியோரைக் குறித்துக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

திரைப்படச் செய்திகளைத் தொகுத்துக் கூறும் 'கலைச் செய்தி' என்னும் பகுதியும் உள்ளது.

'ஒரு இதழில்(25.8.55), கோவா விடுதலைப் போர் ஹர்த்தாலை முன்னிட்டு நமது அச்சகம் இன்று அடைக்கப்படுவதால், இவ்விதழ் 36 பக்கங்களுடன் தொடர்கதை இன்றி வெளிவருகிறது. வாசகர்கள் பொறுத் தருளவேண்டுகிறேன்' என்று முழுப்பக்க விளம்பரத்தில் திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள் கூறியிருக்கிறார்.

'உலக வரலாற்றில் நாம்' என்னும் தலைப்பில் பேரறிஞர் அண்ணா அவர்களின் உரை ஓர் இதழில் இடம்பெற்றுள்ளது. இதேபோல், பல்கலைச் செல்வர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களின் உரையும் ஓர் இதழில் இடம் பெற்றுள்ளது.

மகாகவி பாரதியை நமக்கும் தெரியும். அவருக்குப் 'பாரதி' என்ற பட்டத்தைத் தந்தது யார்? இந்த விவரம் ஒரு பெட்டிச் செய்தியில் உள்ளது. அது இது:

கவிஞர் சுப்பிரமணியம் என்றால் யாருக்கும் தெரியாது. பாரதியார் என்றால் எல்லோருக்கும் தெரியும். பிரசித்த பெற்ற 'பாரதி' என்ற பெயரைச் சூட்டியது யார் தெரியுமா?

'திருநெல்வேலியில், அறிஞர்கள் அவையில் கவிஞர் சுப்பிரமணி யம் பேச்சைப் பாராட்டி, அவருக்குப் 'பாரதி' என்ற பட்டத்தை விருது நகர் சிவஞான யோகி அளித்தார்' என்கிற புதிய தகவலைத் தெரிந்து கொள் கிறோம்.

பொதுவாக, இந்த இதழ்களில் அரசியல் கருத்துக்கள், பகுத்தறிவுக் கொள்கைகள், இலக்கியச் செல்வங்கள், கவிதை மாலைகள் முதலான சமுதாயத்தை உயர்த்தும் கட்டுரைகள் தொடர்ந்து இடம் பெற்றிருந்தன. அக்கால வாசகர்களுக்கு ஏற்ற வகையில் அவை பல்சுவை இதழ்களாகப் பரிணமித்தன.

***தனி அரசு – நாளிதழ்***

இனி, தனி அரசு நாளிதழைப் பற்றிச் சற்று ஆராய்வோம்:

தனி அரசு நாளிதழ் 1958 முதல் 1963 வரை சென்னையில் வெளி வந்தது. நான்கு பக்கங்களுள்ள இதன் விலை 2 அணா என்று நினைவு.

சென்னை, நுங்கம்பாக்கம், வில்லேஜ் சாலையில் ஒரு இல்லம். கீழே அச்சகம், அலுவலகம். மேலே வீடு. 'தனி அரசு' அச்சகம் மிகச் சிறியது. இப்போது இருப்பதுபோன்று அதி நவீன அச்சு இயந்திரங்கள் அப்போது இல்லை. 'டெம்மி' அளவு சிலிண்டர் இயந்திரம் மட்டுமே இருந்தது. தாளை, கையால் ஒவ்வொன்றாகத் தள்ளித்தள்ளி அச்சிடவேண்டும். அச்சுக் கோப்பதற்கும் அப்போது லைனோவோ, மோனோவோ, லேசரோ அந்த அச்சுக்கூடத்தில் இல்லை. எல்லாம் கண்ணால் பார்த்துப் பார்த்துக் கையால் அச்சுக்கோக்க வேண்டும். திரு. செல்வராஜ் என்பவர்தான் மேற் பார்வை யாளர். அவர் பல சமயங்களில் வீட்டுக்குக்கூடச் செல்லாமல், இரவும் பகலும் அங்கேயே இருந்து உழைத்தவர். பொதுவாக, அங்கே பணியாற்றிய அனைவருமே, அந்த இதழ் வளர்ச்சிக்காக உற்சாகத்துடன் உழைத்தவர் கள். அதற்குக் காரணமே, ஆசிரியர் அனைவருடனும் ஒரு தொழிலாளியாக இருந்து பழகியதே ஆகும்.

தொடக்க காலத்தில் அதாவது தனி அரசு நாளிதழ் வெளிவரு வதற்கு ஒரு வாரத்துக்கு முன்னதாகவே நான் வேலையில் சேர்ந்துவிட்

டேன். ஒரு வாரமாக, பத்திரிகையை எப்படி குறித்த காலத்தில் கொண்டு வருவது என்பது குறித்து, ஒரு சோதனை ஓட்டம் - ஒரு பயிற்சி நடத்தப் பட்டது. அப்போது அங்கு இருவர் மட்டுமே ஆசிரியர் குழுவில் இருந் தோம். ஒருவர் நண்பர் திரு கௌந்தி அவர்கள். மற்றொருவர் அடியேன்.

பத்திரிகை அதிகாலையில் வெளிவந்துவிட வேண்டும். அதற்காக அல்லும் பகலும், கண்ணுங் கருத்துமாக இருந்தார். ஆசிரியர். இரவில் சரி யாகத் தூங்கக்கூட மாட்டார். நள்ளிரவில் கூட எழுந்து 'என்ன ஆச்சு?' என்று குரல் கொடுப்பார். பத்திரிகையை விநியோகிக்க அதிகாலை 4 மணிக்கே கீழே இறங்கி வந்து, பிறகு 11 மணிக்குத்தான் மேலே வீட்டுக்குப் போவார்.

1958 - 63 இந்தக் காலகட்டங்களில் தனி அரசு கொடிகட்டிப் பறந்தது; பரபரப்பாக விற்பனையாகியது. கழகச் செய்திகள் உடனுக்குடன் வெளிவந்தன. தலைவர்களின் உரைகள் முழு அளவில் இடம் பெற்றன. செய்திகளை உள்ளது உள்ளபடி வெளியிட வேண்டும் என்றும், அவற்றைத் திரித்து எழுதக்கூடாது என்றும் ஆசிரியர் அவர்கள் அடிக்கடி கூறுவார். நீங்கள் எழுதுவது News ஆக இருக்கவேண்டுமே தவிர, Views ஆக இருக்கக்கூடாது என்பார். 'என்கிட்டே வேலை செய்யறவன், நாளை பக்கா எடிட்டரா வருவான்!' என்றும் எங்களுக்கு ஊக்கம் தருவார்.

மறுநாள் காலை பத்திரிகை வெளிவந்ததும், அமைதியாக அதைப் பார்வையிடுவார். குற்றங்குறைகள் இருந்தால், சம்பந்தப்பட்டவரை அழைத்து, 'இப்படி இருக்க வேண்டும்' என்று அன்புடன் அறிவுரை கூறுவார்.

பி.டி.ஐ., யு.என்.ஐ., என்னும் செய்தி நிறுவனங்களின் பெயர்கள், செய்தி முடிவில் இடம் பெறுவதுபோல, செய்தி எழுதுபவர்களின் பெயர் களையும் செய்திக்குக் கீழே சுருக்கமாகப் போடும்படிக் கூறுவார். உதாரணமாக, நான் எழுதும் செய்திக்குக் கீழே (பி.வி.ஜி.) என்று இருக்கும்.

பொதுவாக, முதல் பக்கத்தில் இடம் பெறும் எட்டுப்பத்திச் செய்தியை யும், தலையங்கத்தையும் திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள்தான் எழுதுவார். எட்டுப் பத்திச் செய்தி என்கிறபோது, ஒன்று நினைவுக்கு வருகிறது.

'எட்டுப் பத்திச் செய்தி என்ன போடலாம்?' என்று எங்களை அழைத் துக் கேட்பார். அப்போது நாங்கள் எதைச் சொல்வது என்று தலையைச் சொறிந்து கொண்டிருப்போம்.

'அப்போது ஷவர், தினமணியைக் கொண்டு வாய்யா!' என்பார். அதைக் கொடுப்போம். அதை அவர் புரட்டிப் பார்த்துவிட்டு, 'இதுதான் எட்டுப் பத்திச் செய்தி' என்பார்.

அதாவது, அந்தப் பத்திரிகையில் தலைப்பே இல்லாமல், நான்கே வரிகளில் ஒரு செய்தி, ஒரு மூலையில் வெளிவந்திருக்கும்.

'இன்றைக்கு இதுதான் எட்டுப் பத்திச் செய்தி' என்று எழுதிக் கொடுப் பார். 'நான்கு வரிகளை நாற்பது வரிகளாகவும், நாற்பது வரிகளை நான்கு வரிகளாகவும் ஆக்கும் திறமை வேண்டும். இதுதான் எடிட்டிங்' என்பார்.

அவர் எழுதும் தலையங்கத்தில் அவருடைய தனித்தன்மை வெளிப் படும். எவ்வளவு பெரிய அரசியல் கருத்தையும், பாமரரும் மிக எளிதாகப் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில், எழுதுகின்ற ஆற்றல் பெற்றவர் அவர். எளிய இனிய நடையில் எழுதுவது அவருக்குக் கைவந்த கலை யாக இருந்தது.

தலையங்கம் எழுதும்போது, முழுத்தாளில் எழுதமாட்டார். முழுத் தாளை நான்காக மடித்துக்கொண்டு, பச்சை மையினால் நுணுக்கி, நுணுக்கி எழுதுவார். சில சமயங்களில், ஆசிரியர் குழுவிலிருந்து ஒருவரைக் கூப்பிடுவார். அவர் தாளை எடுத்துக்கொண்டு போவார். ஆசிரியர் சொல்லச் சொல்ல, துணையாசிரியர் எழுதுவார். இந்த வாய்ப்பு திரு. கௌந்தி அவர்களுக்கும், பெரும்பாலும் எனக்கும் கிடைத்தது என்பதை இங்கே மகிழ்ச்சியோடு குறிப்பிட விரும்புகிறேன். ஆசிரியருக்கு முடியாத சமயங் களில், திரு ப.சி.அ. வணங்காமுடி அவர்கள் தலையங்கம் எழுதியிருக் கிறார். நானும் ஓரிரு தலையங்கம் எழுதியிருக்கிறேன்.

ஆசிரியர் அவர்களிடம், இதழியல் தொடர்பான பல அனுபவங் களை நிறையக் கற்றுக் கொண்டிருக்கிறேன். பிற்காலத்தில், ஒரு எளிய பத்திரிகையாளனாக வருவதற்கு ஆசிரியரே எனக்கு அடித்தளமாக இருந்திருக்கிறார். அவரே என் பத்திரிகை உலகின் குருவாக விளங்கியவர். அவரை இந்தக் கருத்தரங்கிலே நன்றியுடன் நினைவு கூறுகிறேன்.

தனி அரசு நாளிதழில், திராவிட முன்னேற்றக் கழகச் செய்திகளுக்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டு, அவை முழு அளவில் வெளிவந்தன. தேர்தல் காலங்களில், தேர்தல் செய்திகள் 'சுடச்சுட' வெளியிடப்பட்டன. மாநாட்டுச் செய்திகளும் விரிவான அளவில் படங்களுடன் வெளியிடப் பட்டன. வார மலரில் கதை, கட்டுரை, கவிதை என்று பல்சுவை இதழாகவும் அது மலர்ந்து மணம் வீசியது.

சமுதாயத்தில் அன்றாடம் நிகழும் அவலங்களைப் படம் பிடித்துக் காட்டும் வகையில் 'வெட்டு – 1 துண்டு – 2' என்னும் பகுதி தொடர்ந்து இடம் பெற்றது. இது வாசகர்களை வெகுவாகக் கவர்ந்தது. இந்தச் செய்திக்கோவையை ஆசிரியர் அவர்களே எழுதுவார். அதில் அவர் முத்திரை இருக்கும்.

இதேபோல, 'பறக்குது பார்' என்னும் தலைப்பில் ஒரு பகுதி. இது, அன்றாடப் பிரச்சினைகளை அலசுகின்ற பகுதியாக இருந்தது.

பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்த நாளையொட்டி, தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் செய்திகள் வந்து குவியும். அவை, 'அண்ணனுக்குத் திருவிழா, அவனி எங்கும் பெருவிழா' என்னும் தலைப்பில், முழுப் பக்க அளவில் இடம்பெறும்.

கழகப் பேச்சாளர்கள் யாராக இருந்தாலும், அவர்களது உரையை முழு அளவில் வெளியிடும்படிக் கூறுவார் ஆசிரியர்.

தனி அரசு அலுவலகம் எப்போதும் பரபரப்பாக இயங்கியது. யார் எப்போது வேண்டுமானாலும் செய்திகளைக் கொண்டு வரலாம். எல்லாரை யும் அன்புடன் வரவேற்கும் ஒரு வரவேற்பு அறையாக 'தனி அரசு' அலுவலகம் காட்சியளித்தது.

'மக்கள் குரலே மகேசன் குரல்' என்கிற வகையில், மக்கள் குரலை எதிரொலிக்கும் 'எங்கள் குரல்' என்னும் பகுதியும் தொடர்ந்து வெளி வந்தது. அவ்வப்போது அரசியல், கலை தொடர்பான கட்டுரைகளும் இடம்பெற்றன. புத்தக, நாடக, திரைப்பட விமர்சனங்களும், 'நடிக்கும்போது நடந்தது' என்னும் தலைப்பில் திரைப்படச் செய்திகளும் வெளிவந்தன. ஆண்டுதோறும் 'பொங்கல் மலர்' மிகச் சிறப்பாக வெளியிடப்பட்டது. கதை, கட்டுரை, கவிதை என்று அது படிக்க மட்டும் அல்ல, பாதுகாக்கத் தக்க மலராக விளங்கியது. பேரறிஞர் அண்ணா, தந்தை பெரியாரின் கருத்துக்களைத் தாங்கி, ஒரு பகுத்தறிவுப் பெட்டகமாகத் 'தனி அரசு' வெளிவந்தது. கட்சிப் பத்திரிகையாக இருந்தாலும், கலையம்சம் நிறைந்த பத்திரிகையாக அது விளங்கியது.

இதே காலகட்டத்தில் 'சினிமா செய்தி' என்னும் நாளிதழ் ஒன்றும் சிறிய அளவில் வெளிவந்தது. இதில் முழுக்க முழுக்கத் திரைப்படச் செய்திகள் வெளிவந்தன. இது மாலையில் மலர்ந்தது.

தனி அரசு இதழில் பலர் பணியாற்றி இருக்கிறார்கள். என் நினைவுக்குத் தெரிந்த வரையில், திருவாளர்கள்: கௌந்தி, ப.சி.அ. வணங்காமுடி, சோ. ரங்கநாதன், பி.எல். இராசேந்திரன், சண்முகம், எல். இராமதாஸ், நீ. தில்லைநாதன், சி.ஜே. மார்த்தாண்டன், தன. நடராசன், கோ. வெற்றிவீரன், அன்பு, ராஜாமணி, கலவை பா. வரதன் ஆகியோர் பணியாற்றியிருக்கிறார்கள். நண்பர் கவிக்கொண்டல் மா. செங்குட்டுவன் அவர்கள் சென்னையில் 'திராவிட சினிமா' என்னும் இதழில் பணியாற்றியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

திராவிட இயக்க வரலாற்றில், தினத்தந்தி அளவில் வெளிவந்த ஒரு முழுமையான நாளிதழாக தனி அரசு வெளிவந்தது. நன்கொடை எதுவும் வசூலிக்காமல், திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்கள், சொந்தச் செலவில் இந்த இதழை நடத்தி வந்தது, அக்காலச் சூழ்நிலையில் ஒரு பெரும் சாதனையாகவே கருதப்பட்டு வந்தது. அந்தக் காலத்தில் ஒரு நாளிதழ் 35 ஆயிரம் பிரதிகள் விற்பனையானது என்பது விந்தைக்குரிய செய்தியாகும்.

நாள்தோறும் கேலிச் சித்திரமும் இதில் இடம் பெற்று வந்தது. ஓவியர் கணேஷ் என்பவர் இதனை வரைந்து வந்தார்.

மாதமிருமுறை, நாளிதழ் முதலான எல்லா இதழ்களிலுமே புதிய எழுத்தாளர்களை அறிமுகப்படுத்திய பெருமை திரு. ஏ.வி.பி. ஆசைத்தம்பி அவர்களையே சாரும். எல்லாவற்றுக்கும் மேலாக, சமுதாய விழிப் புணர்வை ஏற்படுத்தியதில் 'தனி அரசு'க்குப் பெரும் பங்குண்டு.

தனி அரசு இதழியல் உலகில் தனித்துவம் பெற்ற ஓர் இதழாக மலர்ந்து மணம் வீசியது என்றால், அது உண்மை; வெறும் புகழ்ச்சி யில்லை!

# நம்நாடு

**ப. புகழேந்தி**

காரிருள் அகத்தில் நல்ல
　　கதிரொளி நீதான் இந்தப்
பாரிடைத் துயில்வோர் கண்ணிற்
　　பாய்ந்திடும் எழுச்சி நீதான்
ஊரினை நாட்டை இந்த
　　உலகினை ஒன்று சேர்க்கப்
பேரறி வாளர் நெஞ்சிற்
　　பிறந்த பத்திரிகைப் பெண்ணே!

என்று பாடினார் புரட்சிக் கவிஞர்.

ஜனநாயக மாளிகையின் தூண்கள் என்று குறிப்பிடப்படுபவை நான்கு. அவை நீதித்துறை, நிர்வாகத்துறை, பாராளுமன்றம் மற்றும் பத்திரிகைகள். அதிலும் முதல் மூன்றிலும் நடைபெறும் நிகழ்வுகளை வெளிக்கொணர்ந்து, அவற்றுக்கு மக்களிடையே காணப்படும் வரவேற்பினை, எதிர்ப்பினை எடுத்துக் காட்டும் கண்ணாடியாக விளங்குபவை பத்திரிகைகளே!

ஒரு மாபெரும் தலைவனின், இயக்கத்தின், நாட்டின் வெற்றி தோல்வியை, ஏற்ற இறக்கத்தைக் தொடர்ந்து காணுகிற பத்திரிகைச் செய்திகள் மூலம் கணக்கிட்டுவிடலாம். அவை அவற்றின் வரலாறு ஆகவே கூட வரலாறாகவே உருப்பெற்றுவிடலாம். அதனாலேயே 'இன்றைய செய்தி - நாளைய வரலாறு' என்றனர். (முரசொலி)

உலகில், இந்தியத் துணைக்கண்டத்தில் வளர்ச்சியடைந்ததைப் போலவே தமிழகத்திலும் இதழியல்துறை மெல்ல மெல்ல, ஆனால் அழுத்தமாக வளர்ச்சி அடைந்துள்ளது.

**தமிழில் முதல் இதழ்**

முதலாவதாகத் தமிழில் வந்த இதழ் 'சிலோன் கெஜட்' (Ceylon Gazette) என்பதாகும். 1802இல் இலங்கையிலிருந்து வெளிவந்த இந்த இதழில் தமிழோடு சிங்களம் மற்றும் ஆங்கில மொழிகள் இடம் பெற்றிருந்தன.

சென்னையிலிருந்து கிருஸ்தவ சமயப் பிரச்சாரக் கழகம் 1831இல் 'தமிழ்ப் பத்திரிகை' (Tamil Magazine) என்ற செய்தி இதழை முழுதும் தமிழிலேயே வெளியிட்டுப் பெருமை அடைந்துள்ளது. இதுதான் தமிழில் வெளிவந்த முதல் செய்தி இதழாகும்.

இதற்குப் பின்னர் 1833இல் 'விருத்தாந்தி' எனும் இதழும், 1835இல் 'மெட்ராஸ் கிரானிக்கல்' (Madras Cronical) எனும் இதழும் (இதில் தமிழோடு தெலுங்கும் இடம் பெற்றிருந்தது. இதனை அடுத்து 1855இல் 'இராஜ வர்த்தினி' எனும் மாதம் மும்முறை இதழும் (ஆங்கில இதழ்ச் செய்திகளின் தமிழ் மொழிபெயர்ப்பு மட்டுமே இதில் இடம் பெற்றிருந்தது) வெளிவந்தது.

1856இல் 'தினவர்த்தமானி' எனும் தமிழ்க்கிழமை இதழ் பெர்சிவல் எனும் பாதிரியாரால் தொடங்கப்பட்டது.[1]

பெயரில் 'தின' என்று இருந்தாலும் இது தினப்பத்திரிகை அல்ல. இவற்றைத் தொடர்ந்து தமிழில் பல இதழ்கள் வெளிவந்தன. எனினும் 1889இல் தான் முதலாவது தமிழ்த் தினசரி தோன்றியது என்பர்.

**முதல் தமிழ் நாளிதழ்கள்**

தமிழில் வந்த முதல் மூன்று தினசரிகளாகச் 'சுதேசமித்திரன்' - (1889) (ஆசிரியர்: ஜி. சுப்பிரமணிய ஐயர்) 'திராவிடன்' - 1916 (ஆசிரியர்: பக்தவத்சலம், 'தேசபக்தன்' - 1917 (ஆசிரியர்: திரு.வி.க.) இவற்றைச் சொல்லலாம் என்கிறார் திரு.மா.ரா. இளங்கோவன்.[2]

'சுதேசமித்திர'னுக்கும் முன்னால் 'லலித பிரசனோதயா' (1887), 'மாசத் தின சரிதை' (1812) ஆகிய நாளிதழ்கள் வெளிவந்துள்ளதாகக் கூறுகிறார் திரு. அ.மா.சாமி[3] தமது 'தமிழ் இதழ்கள்; தோற்றம் – வளர்ச்சி' என்ற நூலில்)

நாட்டு நடப்புகளை வெளியிடத் தொடங்கிய நாளிதழ்கள் விடுதலைப் போராட்டக் காலத்தில் தாங்கள் சார்ந்த இயக்கக் கொள்கைகளின் ஆதரவு இதழ்களாக அவற்றை விளம்பரப்படுத்தும் கருவிகளாக - வெளிவரத் தொடங்கின.

தென்னாட்டில் காங்கிரசுக்கு ஈடாக - சரியாகச் சொல்வதானால் எதிர்மறையாகத் தோன்றிய நீதிக் கட்சியாளர்களும் தம் சார்புக்கென நாளிதழ்களை வெளிக்கொணர முயன்றனர்.

அவ்வாறு வந்த நீதிக் கட்சியின் முதல் நாளிதழ்தான், 'திராவிடன்' என்பது. பார்ப்பனரல்லாதார் கட்சியாகிய நீதிக்கட்சி சுயமரியாதை இயக்க மாக, திராவிடர் கழகமாக உருப்பெற்றபோது அதன் கொள்கைகளை நாளும் வெளியிட்டு வந்த மகத்தான தினசரியாகத் திகழ்ந்தது.

**நம்நாடு பிறப்பு**

திராவிடர் கழகத்தின் பொதுச்செயலாளராக இருந்த பேரறிஞர் அண்ணாவும், பிற தோழர்களும் பெரியார் ஈ.வெ.ரா. அவர்களிடம் கருத்து வேறுபாடு கொண்டு 1949 செப்டம்பர் 17ஆம் நாள் 'திராவிட முன்னேற்றக் கழகம்' எனும் அமைப்பை நிறுவினர்.

அதன் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்யத் தமிழ்நாட்டின் மிகச் சிறந்த பேச்சாளர்களான அண்ணா, இரா. நெடுஞ்செழியன், க. அன்பழகன், மு. கருணாநிதி, ஈ.வெ.கி. சம்பத், டி.கே.சீனிவாசன், சி.பி. சிற்றரசு, என்.வி. நடராசன், கே.ஏ. மதியழகன் என எண்ணற்றோர் இருந்தனர். பட்டிதொட்டிகளிலிருந்து பெருநகரங்கள் வரை நாள்தோறும் அவர்கள் முழங்கினர். அந்தக் கூட்டங்களுக்கு வந்திருந்தவர்கள் தவிர மற்றை யோருக்கு அவர்கள் பேசியவற்றை எடுத்துச் சொல்ல உரிய நாளிதழ் எதுவும் இல்லை. தமிழ்நாட்டில் வெளிவந்து கொண்டிருந்த மற்ற எந்த நாளிதழ்களிலும் அவை வெளியிடப்படுவதும் இல்லை.

ஒருபக்கம் தமது புதிய கட்சியின் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்யவும், தொடர்ந்து தொல்லை தந்து கொண்டிருந்த 'விடுதலை'க்கு மாற்றாகக் கழகத் தோழர்களை உற்சாகப்படுத்தவும் நாளித்ழ் ஒன்று அவசியத் தேவையாக இருந்தது. உயர்ந்த சிந்தனையாளரும், மகத்தான பேச்சாளருமான அண்ணாவின் பேச்சுக்கள்கூட எந்தப் பத்திரிகையிலும் இடம்பெறாத காலம் அது. அதை அண்ணாவே இந்து பத்திரிகை விழாக் கூட்டத்தில் வேடிக்கையாகச் சொன்னார்.

"பத்திரிகைகள் நான் பேசியதைப் போடும். எப்படித் தெரியுமா? 'Annadurai also spoke' இப்படித்தான் போடுவார்கள். அதுவும் எப்போதாவது" என்று.

அந்தக் காலகட்டத்தின் - அவசியத்தின் காரணமாக வெளிவந்த அன்றைய தினசரிதான் 'மாலை மணி' திரு.டி.எம். பார்த்தசாரதி அவர் களின் சொந்த இதழ். அதன் ஆசிரியராக அண்ணாவே இருந்தார். அது 10.8.1949இல் தொடங்கி 1950 ஜூலை வரை வந்தது. சிறிது காலத்துக்குப் பிறகு (1951இல்) மீண்டும் வந்த 'மாலை மணி'க்கு கலைஞர் மு.கருணாநிதி அவர்கள் இரண்டு ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றினார். பிறகு அந்த இதழ் சில காரணங்களால் நின்று விட்டது.

திராவிட முன்னேற்றக் கழகம் மகத்தானதொரு மக்கள் இயக்கமாக வளர்ந்தது. வளர்ந்த அந்த இயக்கம் சாதாரண மனிதனையும் படிக்கத் தூண்டியது. நாட்டில் பல தினசரிகள் இருந்தும் 'அண்ணா என்ன சொல் கிறார்? கழகம் நாட்டுநடப்புகள் பற்றி என்ன கருத்துக் கொண்டிருக்கிறது?' என்பனவற்றை அறியும் ஆவல் நாட்டு மக்களுக்கு ஏற்பட்டது. எனவே தினமும் அதன் நடைமுறைகளை வெளிப்படுத்த ஒரு நாளிதழ் தேவைப் பட்டது.

1952இல் கோவையில் கூடிய தி.மு.கழகப் பொதுக்குழுவில் கழகத் திற்கென நாளிதழ் ஒன்று தேவை என்பதைப் பலரும் வற்புறுத்தினர். அதன் விளைவாகத் தொடங்கப்பட்ட நாள் இதழ்தான் 'நம்நாடு!'

'நம்நாடு' வெறும் செய்திகளை வெளியிடும் ஏடல்ல; செய்திகளோடு அவை பற்றிய தன் கருத்துக்களையும் வெளியிடும் இலட்சிய ஏடு, கருத்திதழ். ஆங்கிலத்தில் சொல்வதானால் கழகத்தின் news and views-ஐ சொல்ல உருவாக்கிய ஒரு ஏற்பாடு அது.

**நம்நாடு செய்தி வெளியிடும் முறை**

ஒரு செய்தியைச் சாதாரண தினசரி வெளியிடுகிற முறைக்கும், 'நம் நாடு' வெளியிடுகிற முறைக்கும் நிறைய வேறுபாடுகளைக் காணமுடியும்.

மாதிரிக்கு ஒன்று:

இந்தியப் பேரரசின் பிரதமர். பண்டித நேரு தமிழகம் வருகிறார். அவருக்குக் கருப்புக் கொடி காட்டுகிறார்கள் தி.மு.கழகத் தொண்டர்கள். அதைப் பின்வரும் செய்தியாக வெளியிடுகிறது 'நம்நாடு'.

> நேருவின் சுந்தரமுகம் கருப்புக் கொடி கண்டு சோகச் சித்திரமாயிற்று.
>
> தண்ணெனும் சாந்தத் தோற்றம் கடுகடுப்பான கோரக் காட்சி!
>
> என்றும் கண்டிராத கருப்புக் கொடிகளை நோக்கி வடநாட்டு அடிமை வியாபாரி (மாநில முதலமைச்சர் இராசகோபாலாச்சாரியார்) தலை கவிழ்ந்தார்.
>
> நாவடக்கம் தெரியாத 'நான்சென்ஸ்' மூலவருக்கு தி.மு. கழகம் கற்றுக்கொடுத்த நல்ல பாடம்!

– செய்திக்கு முதல் பக்கம் தரப்பட்டுள்ள தலைப்புகள் இந்த வரிகள்.

2.10.1953 'நம்நாடு' இதழில் இது காணப்படுகிறது.

அடுத்த நாள் செய்தித்தலைப்பு இவ்வாறு தொடர்கிறது:

> காலையில் கூலிகளின் தடியடி தர்பார்! மாலையில் 'மனித குல மாணிக்கத்'தின் சொல்லம்பு வீச்சு! திராவிட இன எழுச்சியைக் கோமாளிக் கூத்தெனக் கிண்டல்! தனக்கே உரித்தான 'நான்சென்ஸ்' பண்பை நேரு உலகப் பதிப்புரிமையாக்குகிறார்.

'நம் நாடு' வருவது குறித்து அண்ணா இப்படி எழுதினார்:

> 'நம் நாடு'
>
> "தினசரி இதழ் எப்பொழுது ஆரம்பிக்கப் போகிறீர்கள்?" என்று ஆர்வத்தோடு அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தீர் கள்.
>
> தினசரி இதழ் நடத்துவதென்பது எளிதான வேலையல்ல. அதுவும் நம்மைப் போன்றோர் ஆரம்பிப்பதென்பது மிகக் கடினம். காரணம் நாம் பணபலமற்றோர். அது மட்டு மல்ல, நாம் முற்போக்குக் கருத்துக்களை நாட்டிலே பரப்ப முற்பட்டிருப்போர். நமக்கு ஆதரவாளர்களை விட எதிர்ப்பாளர்கள் அதிகம். எல்லாத் திக்குகளிலிருந் தும் எதிர்ப்பு. சமயவாதிகள், சாத்திரவாதிகள், பழமைப் பித்துக்காரர்கள், குருட்டு நம்பிக்கை கொண்டோர், புராணப் பிரசங்கிகள், ஆஸ்திக ஆஷாட பூதிகள், ஆதீன கர்த்தர்கள், ஆட்சிப்பீடத்தில் அமர்ந்திருக்கும் அதிகார அம்புகள் ஆகியோரை எதிர்த்து முன்னேற வேண்டிய வர்கள். இப்படிப்பட்ட நிலையிலுள்ள நாம் தினசரி நடத்த வேண்டும். இது எளிதான காரியமா? அல்ல. ஆனாலும் நம்முடைய கொள்கைகள் நாட்டிலே பரவ வேண்டுமானால் ஒரு தினசரியாவது கட்டாயம் தேவை யல்லவா!
>
> இந்தத் தேவையைப் பூர்த்தி செய்யும் நிலைமை இப் பொழுதுதான் நமக்கு ஏற்பட்டிருக்கிறது.
>
> மாநில மாநாட்டில் எஞ்சியுள்ள தொகையைக் கொண்டே இதைத் துவக்கியுள்ளோம்.
>
> ஜூன் 15 முதல் ஆரம்பமாகிறது தினசரி இதழ், 'நம் நாடு' என்ற பெயருடன்.

ஆரம்பித்துவிட்டால் போதாது; அதை ஆதரிக்கும் ஆதரவாளர்களின் தொகை பெருக வேண்டும்.

உங்களின் அன்பும் ஆதரவும் பெருகினால் தினசரி மேன்மேலும் பெருகி, தன் கொள்கைகளை நாட்டில் பரப்ப முடியும்.

இதனை நம் தி.மு.கழகத் தோழர்கள் அனைவரும் கருத்திலிருத்தி ஆதரவை அதிகமான அளவில் தர வேண்டும்.

'நம் நாடு' - உங்கள் ஏடு.

'நம் நாடு' - உங்கள் எழுச்சி முரசு.

'நம் நாடு' - உங்கள் எண்ணத்தின் எதிரொலி.

'நம் நாடு' - உங்கள் செல்வக் குழந்தை.

அதை வளர்க்கும் பொறுப்பு உங்களுடையது.

உங்களுடைய பேராதரவையும் அன்பையும் துணைக் கொண்டு 'நம் நாடு' உங்களை நாடி வருகிறது ஜூன் 15இல்.

கழகத் தோழர்கள் ஒவ்வொருவரும் சந்தாதாரராகச் சேருங்கள்.

ஒவ்வொரு ஊரிலும் விற்பனையாளர்களை ஏற்படுத்துங்கள்.

உங்கள் கருத்தை - உங்கள் பணியினை - உங்கள் முரசை - நம் ஏட்டின் மூலம் பரப்ப என்றும் உறுதுணை புரியுங்கள்.

'நம் நாடு' நம் ஒவ்வொருவரின் சொந்த ஏடு.

அதைச் சீரும் சிறப்புமுற வளரும் வகையில் ஆதரவு தாருங்கள் என்ற அன்புக் குரலோடு 'நம் நாடு' ஜூன் 15இல் உங்களை நாடி வருகிறது. தருக ஆதரவு![4]

நாடு முழுதும் கழகக் கிளைகள்தோறும் அச்சிடப்பட்ட சுவரொட்டிகள் ஒட்டப்பட்டன.

மகிழ்வூட்டும் செய்தி.

தி.மு.க. தின இதழ் ஜூன் 15இல் வெளிவருகிறது.

கழகத்தின் சொந்த இதழ் 'நம்நாடு'

கழத்தின் செல்லக் குழந்தை

பாலூட்டிச் சீராட்ட வாரீர் விரைந்து.

கழக நிகழ்ச்சிகளை, கருத்துரைகளை 'நம் நாடு' உங்கள் இல்லம் கொண்டுவந்து, உங்கள் இதயத்தில் பதியச் செய்யும்.

இருட்டடிப்பு நீங்கிற்று - ஒளிதர வருகிறது.

திராவிடத்தின் உரிமை முரசு.

தி.மு.க. வளர்ச்சியில் புதிய கட்டம் 'நம் நாடு'

தி.மு.க. தோழர்கள் ஆதரவு தாரீர்.

'நம் நாடு' டெம்மி சைஸ் 4 பக்கம்

தனி இதழ் 1 அணா.

ஆசிரியர்: அண்ணாதுரை

நம் நாடு - அறிவகம் - ராயபுரம் - சென்னை - 13.

எனத் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடப்பட்டன.

1953 ஜூன் 15ஆம் நாள் சென்னை, இராயபுரம் 24, சூரியநாராயண செட்டித் தெருவிலிருந்து - 'அறிவகம்' என்ற தி.மு.க.வின் தலைமை நிலையத்திலிருந்து முதல் இதழ் 'நம் நாடு' வெளியாயிற்று.

இதழின் அளவு டெம்மி சைஸ் 4 பக்கங்கள். விலை ஓர் அணா. அதாவது இன்றைய கணக்கில் 7/100 ரூபாய். ஒரு ரூபாயில் நூற்றில் ஏழு விழுக்காடு.

முதல் இதழில் அண்ணா எழுதினார்;

> காடு கடந்தோம்; நல்ல நாடு அடைந்தோம்;
> பாலை கடந்தோம்; சோலை வந்துற்றோம்.

என்று திராவிட முன்னேற்றக் கழகத்தின் அதிகாரபூர்வமான அந்த ஏட்டின் ஆசிரியராக, கழகத்தின் அன்றைய பொதுச் செயலாளரான அண்ணாவே பொறுப்பேற்றார். இதழின் வெளியீட்டாளர் இரா. நெடுஞ்செழியன்.

இதழின் முதற்பக்கத் தலைப்பின் மத்தியில் 'நம் நாடு' என்ற பெயரும் இடப்புறப் பெட்டிச் செய்தியாக

ரிஜிஸ்டர் நம்பர் 6311.

தனி இதழ் ஒரு அணா.

இலங்கையில் 10 சதம்.

என்றும், வலப்புறப் பெட்டிச் செய்தியாக 'சந்தா விகிதம் 1 வருடம் 24.0.0, 6 மாதம் 12.0.0; 3 மாதம் 6.0.0.0' என்றும் வெளியிடப்பட்டது.

நம் நாடு

தி.மு.க. தின இதழ்

ஆசிரியர்

அண்ணாதுரை

என்பதற்குக் கீழே இரண்டு கோடுகளுக்கு நடுவே 'the nam nadu a tamil daily: the official organ of the DPF என்று போடப்பட்டது. DPF என்றால் Dravidain Progressive Fedaration. திராவிட முன்னேற்றக் கழகம் அப்பொழுதெல்லாம் DMK என்று ஆங்கிலத்தில் அழைக்கப் படுவதில்லை; அதிகாரப்பூர்வமான இடங்களில் (DPF) என்றே கழகம் குறிப்பிடப்பட்டது.

நம் நாடு இதழ் அளவில் சிறியதாக இருந்தாலும் அது வெளியிட்ட செய்திகள் அவை மூலம் பெற்ற உணர்வுகள் மாபெரும் சக்தியாக மக்கள் மத்தியில் உருவாயின. அந்தக் கையளவு ஏட்டிலே தங்கள் பெயர் வரவேண்டுமென்று தலைவர்களிலிருந்து சாதாரண தொண்டர்கள் வரை தவித்தனர். தம் பெயர் வந்துவிட்டால் அதை ஊரெங்கும் காட்டி மகிழ்ந்த வர்கள் பலர். அதிகார வட்டாரத்தின் மொழியில் சொல்வதானால் தி.மு.க. வின் gazette ஆக இருந்தது. 'நம் நாடு'

அதற்காகவே இதழை வாங்கியவர்கள் பலர்.

**பொறுப்பாசிரியரும் துணையாசிரியர்களும்**

அண்ணா ஆசிரியப் பொறுப்பேற்றாரேயொழிய அதன் முழுப் பொறுப்புகளையும் ஏற்றுப் பணிபுரிந்தவர்கள் துணை ஆசிரியர்களே.

'தொழிலாளர்மித்திரன்' 'போர்வாள்' போன்ற இதழ்களின் ஆசிரியராக, இணையாசிரியராகப் பணியாற்றிய திரு. காஞ்சி கல்யாண சுந்தரம் அவர் களே அதன் பொறுப்பாசிரியராகப் பணியாற்றினார். அவர் ஒரு சிறந்த அரசியல் எழுத்தாளர். அவருக்குத் துணையாக அவ்வப்போது ஒருவர் அல்லது இருவர் துணை ஆசிரியர்களாகப் பணியாற்றினார்கள். அவ்வாறு பணியாற்றியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் திரு. எ.எஸ். வேணு,

எஸ்.எஸ். தென்னரசு, திரு. மா. செங்குட்டுவன் (கவிக் கொண்டல்), முகவை ஆர்.எஸ். பாண்டியன், கோ. இறைமுடிமணி, வி. சிவப்பிரகாசம், கோ. வெற்றிவீரன், ப. புகழேந்தி, மா. பாண்டியன் ஆகியோர். பின்னாளில் (1967இல்) கவிஞர் நா. காமராசன், மாமூலன் ஆகியோரும், சில காலம் நிருபர் சீனிவாசன் என்பவரும் இந்தப் பட்டியலில் அடங்குவர். இவர்களில் திரு. மா. செங்குட்டுவனே நீண்டகாலம் பணியாற்றியவர் என்பது குறிப் பிடத்தக்கது.

'நம் நாடு' இதழில் பணியாற்றியவர்கள் யாரும் வெறும் கூலிக்காக மாரடித்தவர்கள் அல்லர். அனைவருமே கழகத்தில் தங்களை இணைத்துக் கொண்டவர்கள், மிகக் குறைந்த சம்பளத்தைப் பெற்றுக்கொண்டு திறமை யாக உழைத்தவர்கள். பிழை திருத்துவோர், துணையாசிரியர்,செய்தி நிருபர், ஆசிரியர் என்று தனிப் பிரிவினர் அவர்களில் இல்லை, எல்லாரும் எல்லாப் பணியையும் செய்தவர்களே. இதிலே ஒரு வேடிக்கை என்னவென் றால் இவர்களில் யாரும் சுருக்கெழுத்துப் படித்தவர்கள் இல்லை; ஆனால், சொற்பொழிவாளர்களின் பேச்சைக் கேட்ட மாத்திரத்தில் எந்த வார்த்தை யையும் விடாமல் முழுப் பேச்சையும் எழுதுவதில் வல்லவர்கள் (சில சமயங் களில் பேசியவர்களே தம் பேச்சை எழுதி அனுப்பிவிடுவதும் உண்டு)

நம்நாடு இதழைப் பொறுத்த அளவில் அண்ணா அவர்களே நிருபர் பணியைச் செய்திருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்க சேதியாகும்.

தமது சில கருத்துகளைப் பதிவுசெய்ய வேண்டுமென்பதற்காகத் தமது பேச்சைத் தாமே எழுதியனுப்பியிருக்கிறார்.

'நம் நாடு' இதழை வாங்குபவர்கள் அதிலே வருகிற எந்தப் பரபரப் பான உலகச் செய்திகளுக்காகவும் அதனை வாங்குவதில்லை. கழகத்தின் அன்றாட நடவடிக்கைகளை, கழகத் தலைவர்களின் அறிக்கைகளைப் பார்ப்பதற்காகவும், கழகத் தலைவர்களின் சொற்பொழிவுகளைப் படிப் பதற்காகவுமே வாங்கினார்கள்.

'திராவிட நாடு' இதழை வாங்கியவர்கள் அதில் அண்ணாவின் 'தம்பிக்கு' கடிதம் இருக்கிறதா என்று பார்த்து வாங்கியது போல, 'முரசொலி' இதழை வாங்குபவர்கள் கலைஞர் அவர்களின் 'உடன் பிறப்பு'க்கான கடிதம் வந்திருக்கிறதா என்று பார்த்து வாங்குவது போல'. அண்ணா, கலைஞர், நாவலர், பேராசிரியர், சம்பத் போன்ற முன்னணித் தலைவர் களின் பேச்சைப் படிப்பதற்காகவே நம்நாடு இதழ் விற்பனையாயிற்று.

இதழின் விற்பனை கருதி சில வேளைகளில் அண்ணாவின் பேச்சு இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து வெளியிடப்படுவதும் உண்டு.

## மும்முனைப் போராட்டம்

நம்நாடு இதழ் வெளிவந்த ஒரே மாதத்தில் திராவிட முன்னேற்றக் கழகம் மிகப் பெரிய போராட்டங்களைச் சந்திக்க நேர்ந்தது.

1953 ஜூலையில் நடைபெற்ற மும்முனைப் போராட்டங்கள் அவை.

சென்னையில் (அப்போது முதலமைச்சராக இருந்த இராசகோபா லாச்சாரியார் கொண்டுவந்த குலக்கல்வித்திட்டத்துக்கு எதிரான) மறியல் போராட்டம்.

திருச்சி மாவட்டம், லால்குடியை அடுத்துள்ள டால்மியாபுரம் என்ற பெயரைக் கல்லக்குடி (என்ற அதன் முன்னைய பெயராக) ஆக்க நடைபெற்ற போராட்டம்.

'நான்சென்ஸ்' எனத் தமிழர்களை அவமதித்த நேருவுக்கு எதிராக நாடெங்கும் நடைபெற்ற இரயில் நிறுத்தப் போராட்டம் ஆகிய மூன்று முனைகளில் கழகம் களம் அமைத்தது. அதன் காரணமாக ஆயிரக் கணக்கானோர் சிறை சென்றனர்.

அவற்றில் சென்னைப் போராட்டத்தில் அண்ணா, இரா. நெடுஞ் செழியன், ஈ.வெ.கி. சம்பத், என்.வி. நடராசன், கே.ஏ. மதியழகன் ஆகி யோர் கைது செய்யப்பட்டு அவர்கள்மீது நீதிமன்ற வழக்குப் போடப் பட்டது. கழக வரலாற்றில் இது 'ஐவர் வழக்கு' எனக் குறிக்கப்படுகிறது.

கல்லக்குடியில் ரயில் தண்டவாளத்தில் தலைவைத்துப்படுத்து மறியல் செய்த கலைஞர் கருணாநிதி மற்றும் முன்னணியினர் கைது செய்யப்பட்டு வழக்குப் போடப்பட்டது.

நாடெங்கும் இரயில்கள் நிறுத்தப்பட்டதால், ஆயிரக்கணக்கானவர் கள் கைது செய்யப்பட்டுத் தனித்தனி வழக்குகள் போடப்பட்டன.

இதிலே இரயில் நிறுத்தக் கிளர்ச்சியினைத் தொடர்ந்து தூத்துக்குடி யைச் சேர்ந்த 96 தோழர்கள்மீது பல்வேறு செக்ஷன்களில் வழக்குத் தொடரப்பட்டது.

ஆக, நம்நாடு பிறந்த ஒரே மாதத்தில் தன்னை ஊட்டி வளர்க்க வேண் டியவர்களுக்காகத், தானே வாதாடியாக வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்தது.

எனினும் எவ்வித அச்சமோ, தயக்கமோ இன்றி ஒரு போர் வீரனுக்கே உரித்தான வீரத்துடன் நம்நாடு களம் புகுந்தது.

நம்நாடு கல்லக்குடி வழக்குக்கெனவும், தூத்துக்குடி வழக்குக்கென வும் நிதிதிரட்டும் பணியை மேற்கொண்டு அதிலே மகத்தான வெற்றியும் பெற்றது.

**காலம்**

நம்நாடு பிறந்தது 1953 ஜூன் 15ஆம் தேதி. முதலிலிருந்தே ஞாயிற்றுக் கிழமை நம்நாடு அலுவலகத்துக்கு விடுமுறை. அன்று இதழ் வருவதில்லை. அதைத்தவிர ஆசிரியர் பெயர் மாற்றம் சம்பந்தமான அலுவல் காரணமாக இரண்டொரு நாட்கள் தவிர, தொடர்ந்து 1972 டிசம்பர் 2ஆம் தேதி வரை நாள்தோறும் வந்து கொண்டிருந்தது நம்நாடு.

**ஆசிரியர்கள்**

1953 ஜூன் 15 முதல் அறிஞர் அண்ணாவும்

1955 ஏப்ரல் 25 முதல் இரா. நெடுஞ்செழியனும்

1960 அக்டோபர் 18 முதல் சி.பி. சிற்றரசும்

1964 நவம்பர் 30 முதல் மீண்டும் இரா. நெடுஞ்செழியனும்

1967 மார்ச் 6 முதல் இரா. செழியனும் ஆசிரியப் பொறுப்பேற்றுள்ளனர்.

**அண்ணாவின் ஈடுபாடு**

‘நம்நாடு’ அண்ணாவின் உயிர்மூச்சு. அதன் வாழ்விலும் தாழ்விலும் எவருக்கும் இல்லாத அக்கறை அவருக்கு உண்டு. தாம் கலந்து கொள்ளும் கூட்டங்களிலெல்லாம் தோழர்கள் ‘நம்நாடு’ இதழை வாங்கியாக வேண்டிய அவசியத்தை வற்புறுத்தத் தவறுவதில்லை அண்ணா.

அவர் பேசுகிறார்;

> ‘நம்நாடு’ - நமது போர்வாள்.
>
> பலன் தருகிறதோ இல்லையோ, சைவர்கள் விபூதிப் பட்டை அணிந்து கொள்கிறார்கள். வைணவர்கள் பட்டை நாமம் தீட்டிக் கொள்கிறார்கள். கிருத்தவர்கள் ஜெபமாலை வைத்துக் கொள்கிறார்கள். மதப்பற்றுடையவர்கள் கட்டுப்பாடாக இந்தக் காரியத்தைச் செய்வதைப் போலக் கழகத்தோழர்களும் கட்டுப்பாடாக ஒவ்வொருவரும் ‘நம்நாடு’ இதழை வைத்துக் கொள்ள வேண்டும். மதப்பற்றுள்ளவர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டியது வேறெதுவும் இல்லாவிட்டாலும் இந்தக் கட்டுப்பாட்டுணர்ச்சியைக் கற்றுக் கொள்ள வேண்டும்.[5]

29.4.54இல் சென்னை 16ஆவது வட்டப் பொதுக்கூட்டத்தில் அண்ணா பேசியதன் பகுதி இது.

பொதுக்கூட்டங்களில் மட்டுமல்லாது தனது திராவிட நாடு மற்றும் நம்நாடு இதழ்களிலும், தோழர்கள் இதழை ஆதரிக்க வேண்டிய அவசி யத்தைத் துண்டு விளம்பரங்களாக வெளியிட்டார் அண்ணா. ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் சென்னையில் நம்நாடு அலுவல கத்தையே தமது தங்குமிடமாக மேற்கொண்டார் அவர்.

## இதழ் விலையும் அமைப்பும்

தொடங்கிய ஆண்டான 1953லிருந்து ஒரு அணா என்று போடப் பட்ட இதழ், இந்திய நாட்டின் அணா நாணயம் மாறிப் பைசா (சதம்) என மாறிவிட்டதன் காரணமாக 3.4.1957 முதல் தனிஇதழ் 7 காசுகள் எனப் போடப்பட்டு அடைப்புக்குறிக்குள் 0-1-0 என்று போடப்பட்டது. சிறிது நாட்களில் 5.1.1960இல் 0-1-0 என்பது நீக்கப்பட்டு 7 காசுகள் என்பதே தொடர்ந்தது, கடைசி வரை.

முதலில் நம்நாடு என்ற தலைப்பு (Block) முதல் பக்க நடுவில் போடப் பட்டது. பிறகு ஆசிரியர் மாற்றம் ஏற்படும்போது மேற்படி தலைப்பு இடது பக்கமும், அடுத்த ஆசிரியர் மாற்றத்தின்போது திரும்பவும் நடுவிலும் ஆக மாறி மாறிப்போடப்பட்டது. 17.10.1960 முதல் Official organ of DPF என்பதற்குப் பதில் Official organ of DMK என்று போடப்பட்டது.

தொடக்க காலத்திலிருந்து டெம்மி அளவில் வெளிவந்து கொண் டிருந்த 'நம்நாடு' பொதுத்தேர்தலை முன்னிட்டு 1.1.1967 முதல் 31.5.1967 வரை மட்டும் 5 மாதங்கள் பெரிய அளவில் வந்திருக்கிறது. 1.6.67 முதல் மீண்டும் தன் இயல்பான அளவுக்கே திரும்பிவிடுகிறது.

## விளம்பரம்

பெரும்பாலும் விளம்பரங்கள் கிடையாது என்றே சொல்ல வேண்டும். சினிமாக்காரர்களின் கட்சி என்று சொல்லப்படும் கட்சியின் அதிகார பூர்வமான நாளிதழில் 53 முதல் 67 வரை (சுமார் பதினான்கு ஆண்டுகளில்) சற்றேறக் குறைய 50 திரைப்பட விளம்பரங்களே வந்துள்ளன. அதுவும் மற்றப் பத்திரிகைகளில் வருகிற விளம்பரங்களை விடவும் சிறிய அளவில்.

## திருமண அழைப்புகள்

அண்ணா உட்பட முக்கியமான கழகத் தலைவர்கள் இல்லத் திரு மணங்கள், அவர்கள் கலந்து கொள்ளும் திருமணங்கள் இவை முக்கிய மான இடங்களில் கட்டம் கட்டி வெளியிடப்பட்டன.

## கழகக் கூட்டங்கள்

நடக்க இருக்கும் தினசரிக் கூட்டங்கள் ஊர், தேதி இவற்றுடன் கூட்டத்தலைவர் மற்றும் முக்கியப் பேச்சாளர் பெயருடன் தினசரியும்

கழகக்கூட்டங்கள் என்ற தலைப்பில் வெளியிடப்பட்டன. பின்னர் 1959 மத்தியிலிருந்து அது நடக்க இருப்பவை என்ற தலைப்புக்கு மாற்றப்பட்டது.

### *மாநாடுகள்*

கழகம் நடத்தும் மாவட்ட மாநாடுகள், மாநில மாநாடுகள் மற்றும் சிறப்பு மாநாடுகள் அனைத்தும் மிகச்சிறப்பான முறையில் வெளியிடப் பட்டன.

### *பத்திரிகைகள்*

கழகத்தில் எந்த ஒரு நபர் புதிய பத்திரிகைகள் தொடங்கினாலும் அவை நம்நாடு இதழில் சிறப்பாக விளம்பரப்படுத்தப்பட்டன. (அவற்றுக் காகக் கட்டணம் எதுவும் வசூலிக்கப்படுவதில்லை.)

'தனி அரசு' (15.3.59) 'முரசொலி' 31.8.60 ஆகியவை தினசரியாக மாறியதும் 'நம்நாடு' இதழில் விளம்பரமாக வந்துள்ளன.

விளம்பரப்படுத்தப்பட்டுள்ள பத்திரிகைகளில் கலைஞரின் 'முரசொலி', நெடுஞ்செழியனின் 'மன்றம்', கண்ணதாசனின் 'தென்றல்', மதியழகனின் 'தென்னகம்', என்.வி. நடராசனின் 'திராவிடன்', நாஞ்சில் கி. மனோகரனின் 'இலட்சியவாதி', சி.பி. சிற்றரசின் 'இன முழக்கம்', ஏ.வி.பி. ஆசைத்தம்பியின் 'தனியரசு', ப. புகழேந்தியின் 'கதிர்' முதலிய எல்லா ஏடுகளும் அடங்கும்.

### *நிதி திரட்டலுக்கு உதவி*

நம்நாடு வெளிவந்ததும் கழகம் சந்திக்க வேண்டிய களங்கள் மற்றும் வழக்குகள் அதிகம் இருந்ததால் 'நிதி திரட்டுதல்' எனும் பணியில் அது தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டியது அவசியமாயிற்று. அப்படி வசூலிக்கப்பட்ட தொகைகள் பெயருடன் வெளியிடப்பட்டு பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டது. அவ்வாறு திரட்டப்பட்ட பட்டியல்:

தூத்துக்குடி வழக்கு நிதி<br>
கல்லக்குடி வழக்கு நிதி<br>
மாநில மாநாட்டு நிதி<br>
57 தேர்தல் நிதி<br>
(கோடம்பாக்கம்) இந்தி எதிர்ப்பு மாநாட்டு நிதி<br>
62 தேர்தல் நிதி<br>
நாட்டுப் பாதுகாப்பு நிதி<br>
'நம்நாடு' வளர்ச்சி நிதி

67 தேர்தல் நிதி

ஒரே நாளில் உண்டியலில் 1½ லட்சம் கிடைத்தது.

### கேலிச் சித்திரங்கள் (கார்ட்டூன்கள்)

நாளிதழ்களில் கேலிச்சித்திரங்கள் வெளியிடப்படுவது தவிர்க்க முடியாதது மட்டுமல்ல அவசியமானதும்கூட. நம்நாடு இதழைப் பொறுத்து அதற்கெனத் தனிப்பட்ட ஓவியர்கள் (கார்ட்டூனிஸ்ட்) எவரும் இல்லை. எனினும் நம்நாடு இதழில் அடிக்கடி கேலிச்சித்திரங்கள் வராமல் இல்லை. 'சுதேசமித்திரன்', 'சங்கர்ஸ் வீக்லி', 'பிரிபிரஸ் ஜர்னல்', 'சரசன்', 'ஆனந்த விகடன்', 'டைம்ஸ் ஆப் இந்தியா', 'தினமலர்' முதலிய இதழ்களில் வந்த கழகக் கருத்துகளுக்கு ஆதரவான கேலிச்சித்திரங்கள் எடுத்தாளப்பட்டு தொடர்ந்து வந்து கொண்டிருந்தன. 67க்குப் பிறகு தனக்கெனச் சொந்தமாகக் கேலிச்சித்திரங்களை வாங்கி வெளியிட்டது.

### சிறப்பிதழ்கள்– சிறப்புக் கட்டுரைகள்

4 பக்கங்கள் மட்டுமே கொண்டிருந்த நம்நாடு சிறப்பு இதழ்கள் எதையும் வெளியிட்டதில்லை. அதனுடைய நான்காவது ஆண்டு துவக்க இதழ் வெளியிட்டது தவிர. அந்த இதழும் கூட 8 பக்கங்கள் கொண்டதாக மட்டுமே இருந்தது. அதில் திரு. இரா. நெடுஞ்செழியன், கலைஞர் கருணாநிதி, நாஞ்சில் கி. மனோகரன், கவிஞர் கண்ணதாசன், அரங்கண்ணல், தில்லை வில்லாளன், சி.பி. சிற்றரசு, டி.கே. சீனிவாசன், ப.வாணன், எஸ்.எஸ். தென்னரசு, முகவை ஆர்.எஸ். பாண்டியன், மு. சண் முகம் முதலியோரின் சிறந்த அரசியல் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

சிறிய நாளிதழாக இருப்பினும் நம்நாடு இதழில் சிறந்த கட்டுரைகள், கவிதைகள் வரத்தவறுவதில்லை.

அதிலும் அறிஞர் அண்ணா முதலிய முன்னணித் தலைவர்களின் அரசியல் கட்டுரைகள், தொடர்ந்து வந்த வண்ணமிருந்துள்ளன.

பின்னால் 1968ஆம் ஆண்டு உலகத்தமிழ் மாநாட்டின் போதும், சிகிச்சைக்காக அண்ணா அமெரிக்கா சென்றபோதும் சிறப்பிதழ்களை வெளியிட்டது 'நம்நாடு'.

1965ஆம் ஆண்டு சில காரணங்களால் நம்நாடு விற்பனையில் சிறிது மந்தம் ஏற்பட்ட செய்தி அண்ணாவின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. அதைப் பழைய நிலைக்குக் கொண்டு வரும் பணியில் ஈடு பட்ட அண்ணா தமது இடைவிடாத அரசியல் பணிகளுக்கு மத்தியிலும் அவ்வப்போது நம்நாடு இதழுக்கு எழுதுவதை வழக்கமாகக் கொண்டார்.

தம்மைப்போலவே திரு. இரா. நெடுஞ்செழியன், ப. வாணன், தில்லை வில்லாளன், எஸ்.எஸ். தென்னரசு போன்றவர்களையும் சில பகுதிகளைத் (Columns) தொடர்ந்து எழுதப் பணித்தார்.

விலைவாசி உயர்வு எதிர்ப்புப் போராட்டம், அரசியல் சட்ட நகல் எரிப்புப் போராட்டம் போன்றவற்றிற்காகச் சிறையிலிருந்த காலத்திலும் அண்ணா நம்நாடுக்கு எழுதினார் (அந்த நேரத்தில் அவர் எழுதியவற்றில் சில கவிதை முயற்சிகளும் உண்டு).

அண்ணாவின் கட்டளையை மேற்கொண்டு நம்நாடு இதழில் சில பகுதிகளைத் தொடர்ந்து எழுதிவந்தவர்கள் 'முத்து' என்ற இரா. முத்துக் கிருஷ்ணனும், 'எஸ்.ஆர்' என்ற எஸ். இராமசாமியும் ஆவார்கள்.

சிறந்த அரசியல் கட்டுரைகள் எழுதும் திறமையாளர்களான அவர் களோடு, 1967இல் ஆசிரியப் பொறுப்பேற்ற இரா. செழியனும் பல சிறந்த கட்டுரைகளை எழுதி நம்நாடு இதழுக்கு வளம் சேர்த்தார்கள்.

நம்நாடு இதழின் வளர்ச்சி, கழகத்தின் வளர்ச்சி எனக் கருதினார் அண்ணா. சிலவேளைகளில் தமது சொந்த இதழான திராவிட நாடு இதழை விடவும் நம்நாடு இதழின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை காட்டினார்.

1967இல் தி.மு.கழகம் ஆட்சிப்பொறுப்பு ஏற்ற பிறகு, கழகச் செய்தி களைத், தலைவர்களின் சொற்பொழிவுகளை எல்லாச் செய்திப் பத்திரிகை களும் விபரமாக வெளியிடத் தொடங்கிவிட்டன. இதனால் நம்நாடு இதழில் மட்டுமே படிக்க முடிந்த செய்திகள் அதனை முந்திக்கொண்டு பிற தினசரி களில் - அவர்களுக்கு இருக்கும் வசதிகள் காரணமாக - வந்து விடுவதால் நம்நாடுவின் விற்பனை குறையத் தொடங்கியது. இதனால் பாதிக்கப்பட்ட இதழ் 1972 வாக்கில் தொடர்ந்து வெளிவர இயலாது போயிற்று.

1953 ஜூன் 15இல் தனது முதல் இதழை வெளியிட்ட நம்நாடு நாளிதழ், 1972 டிசம்பர் 2ஆம் நாள் தனது இறுதி இதழை வெளியிட்டு தனது செயற்பாட்டை நிறுத்திக் கொண்டது.

அதன்பிறகு 1977 செப்டம்பரில் வார இதழாகத் தலைவர் கலைஞர் கருணாநிதி அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த நம்நாடு 1979 ஜூன் திங்களுடன் தன்பணியை முடித்துக்கொண்டது.

(நம்நாடு வார இதழ் பற்றிய ஆய்வை இங்கு மேற்கொள்ளவில்லை.)

**தலையங்கம்**

நாளிதழ்களின் சிறப்பம்சமே தலையங்கம்தான். தலையங்கம் இல்லாத இதழ் நெற்றிப் பொட்டில்லாத பெண்ணைப் போல (இன்றைய பல ஏடுகள் தலையங்கமே எழுதுவதில்லை என்பது வேறு விஷயம்).

நம்நாடு இதழில் தொடக்கம் முதல் அதனுடைய பயணம் நிற்கும் வரை (சில இதழ்கள் தவிர) தவறாது தலையங்கங்கள் வந்துள்ளன. 'விடுதலை' இதழில் 'கல்கத்தா காய்ச்சல்', 'ரிப்பன் மாளிகை மர்மம்' முதலிய தலையங்கங்கள் மூலம் புகழ் பெற்றார் அண்ணா. அவரை ஆசிரியராகக் கொண்டிருந்த நம்நாடு இதழிலும் அதைப்போலவே வித்தியாசமான தலைப்புகளில் தலையங்கங்கள் வந்துள்ளன. அவற்றைப் பட்டியலிட்டால் அவை பல பக்கங்களை நிரப்பிவிடும். உதாரணத்துக்குச் சிலவற்றைச் சொல்லலாம். அவை வருமாறு:

'தொட்டுக் கொண்டு தின்பேன்!' (22.10.53)
'குழப்பத்திற்கு மேல் குழப்பம்!' (28.10.53)
'பகலை இரவெனும் பாதகர்' (14.11.53)
'மட்டைக்கு இரண்டு கீற்று' (30.11.53)
கண்ணனும் இல்லை; குசேலர்களும் இல்லை (17.3.54)
ஆடு உறவு; குட்டி பகை! (19.11.54)
மீசையில் மண் ஒட்டவில்லை (10.4.54)
உப்புமா! சி.ஆர். கிண்டியது (15.2.54)
சொன்னதும் சொல்ல மறந்ததும் (21.7.55)
முக்காடிட்டு அழுதால் மட்டும் போகாது! (23.4.55)
அமுல் செய்வானேன்! அவதிப்படுவானேன்! (28.7.55)
பரதேசியாரும் உபதேசியாரும் (28.1.56)
அதை மட்டும் தானே செய்ய முடியும்? (12.1.56)
வாதிக்கும் பிரதிவாதிக்கும் வழக்காடும் வழக்கறிஞர் (3.4.56)
பாவசங்கீர்த்தனம்! (30.8.56)
சர்க்கரை இனிக்கவில்லை (10.4.57)
எருதின் புண் காக்கை அறியுமோ? (23.5.57)
அறிகுறி மறைகிறது! மூலநோய் நிலைத்திருக்கிறது! (10.9.57)
கழுதை தேய்ந்து கட்டெறும்பாயிற்று (19.11.57)
படிப்பது இராமாயணம்; இடிப்பது பெருமாள் கோயில் (17.12.58)
நாணயமுமில்லை! நேர்மையுமில்லை! (19.7.59)
இனிப்பான பொருள்தரும் கசப்பான அனுபவம் (21.9.59)
வெண்ணெய் இருக்க நெய்க்கு அலையும் விந்தை! (30.6.60)
அண்டை வீட்டு நெய்யே என் பொண்டாட்டி கையே! (22.7.60)
ஆடு நனைகிறது என்று ஓநாய் அழுகிறது! (19.1.62)
அத்திப்பழத்தைப் பிளந்தால் அத்தனையும் சொத்தை (9.4.63)
நீராகாரத்துக்குப் பதிலாகப் பாதாம்கீர் (7.12.65)

சில தலையங்கங்கள் 1, 2, 3, 4, 5 எனப் பல நாட்கள் எழுதப்பட்டுள்ளன. அத்தனையும் சிறப்பான தலையங்கங்கள். நறுக்குத் தெரித்தாற் போன்று, எவருக்கும் புரியும் கருத்துக்கள்.

இந்தத் தலையங்கங்கள் அனைத்தையும் எழுதியவர் பொறுப் பாசிரியராக முதலிலிருந்து கடைசிவரை பணியாற்றிய திரு. காஞ்சி கல்யாண சுந்தரம் அவர்களே. (பின்னாளில் இவர் தி.மு.கழக சார்பில் (டெல்லி) மாநிலங்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.)

பல ஆண்டுகள் அவர் எழுதினாலும் என்ன காரணத்தாலோ 1965 வாக்கில்தான் தலையங்கங்களுக்குக் கீழே 'கா.க' என்று அவரது பெயர் குறிக்கப்பட்டது.

'நம்நாடு' இதழின் தலையங்கங்கள் தனி ஆய்வாக எடுத்துக் கொள்ளப்படுவது சிறப்புடையதாக இருக்கும் என்பது எனது கருத்து.

***பதிவுகள்***

அளவில் சிறியதாக இருப்பினும் நாட்டின் மிக முக்கியமான நிகழ்ச்சிகளை நம்நாடு பதிவு செய்ய மறக்கவில்லை.

1953க்குப் பின் சென்னை மாநகரில், மாநிலத்தில், நாட்டில், உலகில் ஏற்பட்ட நிகழ்வுகள் அனைத்தும் விபரமாகத் தக்க குறிப்புகளுடன் வெளி யிடப்பட்டுள்ளன.

தி.மு.கழகம் நடத்திய பொதுக்குழு, செயற்குழுக் கூட்டங்கள், மாநாடுகள், அவற்றில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள், கழகம் நடத்திய போராட்டங்கள், மறியல் மற்றும் கருப்புக்கொடி ஆர்ப்பாட்டங்கள், தலைவர்கள் கைது மற்றும் விடுதலைச் செய்திகள், கழகத்தின் உட்கட்சித் தேர்தல்கள் முதலிய அனைத்தும் சிறப்பாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன.

அனைத்திந்திய அளவில் முக்கியத்துவம் பெற்ற எல்லாச் செய்தி களும், இந்திய சீனா போர், பிரிவினைத் தடைச்சட்டம் போன்ற செய்திகள் உட்பட விரிவாக வெளியிடப்பட்டுள்ளன.

பண்டித ஜவஹர்லால் நேரு, பேராசிரியர் எம்.என்.ராய், ப. ஜீவா னந்தம், கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன், எம்.கே. தியாகராச பாகவதர் போன்ற பெருமக்களின் மறைவுச் செய்திகள், அவை குறித்து அண்ணா மற்றும் தலைவர்களின் இரங்கற் செய்திகள் தவறாமல் பதிவு செய்யப் பட்டுள்ளன.

அறிஞர் அண்ணாவின் அரசியல், ஆட்சி, மொழி, சமுதாயக் கருத்துக்கள், சிந்தனைகளின் வெளிப்பாடாக நம்நாடு திகழ்ந்துள்ளதை அதன் பல இதழ்களில் நாம் அறிந்து கொள்ள முடியும்.

## முடிவுரை

நம்நாடு ஓர் உயிர்த்துடிப்புள்ள நாளிதழ் என்பதும் கருத்துமிக்க தலையங்கங்கள் எழுதப்பட்ட ஏடு என்பதும் திராவிட முன்னேற்றக் கழகம் என்ற மாபெரும் அரசியல் கட்சியின் முக்கிய காலகட்டங்களில் அதன் வளர்ச்சிக்கும் வெற்றிகளுக்கும் மிகச்சிறந்ததொரு காரணி என்பதும் போராட்டக்காலத்துப் படைக்கலன் என்பதும் அதன் ஒவ்வொரு பக்கங் களிலும் வெளிப்படுவதை யாரும் மறுக்கவோ, மறைக்கவோ முடியாது என்பது நிச்சயம்.

## குறிப்புகள்

1. மா.சு. சம்பந்தன் 'தமிழ்ப் பத்திரிகைகள்' (கட்டுரை) சோம லெவின் 'தமிழ் இதழ்கள்' (1975) பக். xxxvii - கல்கி நினைவுச் சொற்பொழிவுகள்: சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு.
2. மா.ரா. இளங்கோவன் முதல் தமிழ் இதழ்கள் மூன்று (18), சேகர் பதிப்பகம். சென்னை,
3. அ.மா. சாமி, தமிழ் இதழ்கள் தோற்றம் - வளர்ச்சி (1978) பக்: 147 - 150, நவமணி பதிப்பகம், சென்னை.
4. திராவிட நாடு வார இதழ், 7.6.1953 தலையங்கம்
5. 'நம்நாடு' 30.4.1954

# கலைமன்றம்

## பூவண்ணன்

நாற்பது ஐம்பதுகளில் இதழ்களையும் ஏடுகளையும் மற்றக் கட்சியினரைவிட மிக அதிக அளவு வாங்கிப் படித்தவர்கள் - விலை கொடுத்து வாங்கிப் படித்தவர்கள் திராவிட இயக்கத்தினர். இதைப் போலவே மற்றவர்களுக்குத் தம் கருத்துக்களை விளக்கிச் சொல்வதற்காக அவர்களுக்குத் தம் இயக்க இதழ்களையும் ஏடுகளையும் அன்பளிப்பாக அதிக அளவில் அளித்தவர்களும் திராவிட இயக்கத்தினரே. அதனால் மேற்குறிப்பிட்ட காலகட்டத்தில் திராவிட இதழ்கள் பல்கிப் பெருகின. அவை வணிக நோக்கிலும் ஓரளவு வளம் சேர்க்கும் நிலை பெற்றன.

இந்தக் காலக்கட்டத்தில் தோன்றிய புதிய திராவிட இயக்க இதழ்களில் ஒன்று கலை மன்றம். அவ்வாறு தோன்றிய புதிய இதழ்களில் மிகக் குறுகிய காலத்தில் பெரும் புகழ் பெற்றதும் கலைமன்றமே!

இந்தக் கலைமன்றத்தின் ஆசிரியர் பால்வண்ணன் பிற்காலத்தில் பாவலர் பால்வண்ணனார் என்று பாசத்தோடு வழங்கப்பட்டவர். இவர் என் தமையனார். எங்கள் குடும்பத்து மூத்த மகன்.

இதழ் வரலாற்றைக் கூறும் முன், இதழாசிரியர் வரலாற்றைச் சுருக்கமாக அறிந்து கொள்வது முறை.

சென்னையில் பிறந்து வளர்ந்து, படித்துப் பள்ளியிறுதிக்குச் சென்ற பால்வண்ணன், அதை முடிக்க முடியாமல் குடும்பச் சிக்கல் ஏற்பட்டது. தந்தை தாமோதரம் நோயுற்றமையால் அவர் பார்த்த தொழிலைப் போதிய அனுபவம் இல்லாமலே ஏற்க நேர்ந்தது.

ஒரு மாணவன் நிலையிலிருந்த அவரை அலுவலத்தில் பணியாற்றியோரும் வாடிக்கையாளரும் ஏமாற்ற ஓராண்டுக்குள்ளே பேரளவு இழப்பும் கடனும் ஏற்பட்டன. படிப்புப் போனது! தொழிலும் தொலைந்தது. குடும்பத்துக்காக வேலைக்குச் செல்ல வேண்டிய கட்டாயம்.

சென்னை பி அண்ட் சி ஆலையில் பணியில் சேர்ந்தார். தமது அடக்கத்தாலும் அறிவாலும் அனைவரையும் கவர்ந்தார். நல்லோர் நட்பும் ஏற்பட வடலூர் வள்ளல் பெருமானை வழிபடத் தொடங்கினார்.

வள்ளல் பெருமான் காட்டிய வழியில் நிற்பவர்கள் அன்று நாட்டி லிருந்த அரசியல் அமைப்புகளில் திராவிட இயக்கத்தில் அக்கறை காட்டுவது இயல்பு. அதன்படி பால்வண்ணன் பாதை மாறியது; ஈரோட்டுப் பாதையில் நாட்டம் ஏற்பட்டது. மிக விரைவில் சன்மார்க்கியான அவர் சமுதாய சீர்திருத்தவாதியாகத், திராவிட இயக்கத் தொண்டரானார்.

அத்தொண்டின் வெளிப்பாடாகக் கட்டுரைகளும் நூல்களும் எழுதத் தொடங்கினார். அதனால் தமது ஆலைப்பணியைத் துறந்துவிட்டார். நூலை ஆளும் பணிக்கு மாறினார். இரண்டே ஆண்டில் வள்ளுவர் பண்ணை என்னும் பதிப்பகம் தொடங்கினார். தாமே சில நூல்களை எழுதி வெளி யிட்டார். அப்போது முத்தமிழ் நிலையம் ‘அண்ணாவின் பொன் மொழிகள்’ என்னும் சிறுநூலை வெளியிட்டு பெரும் வெற்றி பெற்றது. பால் வண்ணனும் அதே பாணியில் சில நூல்கள் தொகுத்து வெற்றி பெற்றார். அவர் தொகுத்து வெளியிட்ட நூல்களில் மாபெரும் வெற்றி கண்ட நூல் ‘அண்ணாவின் அடுக்குத் தொடர்’

இந்த நூலுக்கு இலங்கையில் மிகுந்த வரவேற்பு கிடைத்தது. இலங்கைக்கு அதிக அளவு நூல்களை ஏற்றுமதி செய்த நிறுவனமான ஸ்ரீ மகள் கம்பெனியார் இந்நூலை வாங்குவதற்காகப் பால்வண்ணனுடன் தொடர்பு கொண்டனர். அதற்காக ஸ்ரீமகள் கம்பெனிக்குச் சென்று வந்த போது அதன் உரிமையாளர்களில் ஒருவரான திரு. இராஜேந்திரன் அவர் களுடைய நட்புக் கிடைத்தது.

அதுவரை சிறிய நூல்களை வெளியிட்டு வந்த பால்வண்ணன் ஓரளவு பெரிய நூல்களை வெளியிட விரும்பினார். பெரிய நூல்களை ஒரு புதுப் பதிப்பகத்தின் மூலம் வெளியிட விரும்பினார். அப்படி ஏற்படுத்தப்பட்ட புதிய பதிப்பகத்துக்குத்தான் ‘கலை மன்றம்’ என்னும் பெயரிட்டார். அதன் முதல் நூலாக ‘உலகைத் திருத்திய உத்தமர்கள்’ என்னும் நூலை “ஊடுருவி” என்னும் பெயரில் வெளியிட்டார்.

வழக்கம் போல் நூறு படிகள் வாங்கிய ஸ்ரீமகள் கம்பெனி அடுத்த வாரமே மேலும் ஐந்நூறு படிகள் வாங்கியது. பின்னர் ஆயிரம் படிகள் கேட்டது. பால்வண்ணனார் ஒரு புதுப் பதிப்பை வெளியிட்டுக் கொடுத் தார். அடுத்து வெளியிட்ட எமிலிஜோலாவின் ‘நா நா’ முதலிய நூல்களை யும் முழுமையுமாக வாங்கியது ஸ்ரீமகள் கம்பெனி.

இந்த நிலையில் இலங்கைக் குடியுரிமை பெற்று இலங்கையிலிருந்த இராஜேந்திரன் சென்னைக்கு வந்து பால்வண்ணனை அழைத்துப் பேசினார். ஸ்ரீமகள் கம்பெனியே அவர் நூல்களை வெளியிடும் என்றும் அதற்காகக் கணிசமான தொகை வழங்கும் என்றும் கூறி, அவ்வரை வற்புறுத்தினார்.

இராஜேந்திரன் பண்பாளர், பழக்கத்துக்கு இனியவர். சொன்ன சொல் மாறாத நேர்மைமிக்கவர். அதனால் அவர் வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட பால்வண்ணன், ஒரு நிபந்தனை விதித்தார். தம் நூல்களை ஸ்ரீமகள் கம்பெனி பெயரில் வெளியிடாமல் வேறு பெயரில் வெளியிட வேண்டும் என்பதே நிபந்தனை. இராஜேந்திரன் அதை ஏற்றுக்கொண்டு, 'கலைமன்றம் போல ஒரு நல்ல பெயரைக் கூறுங்கள் என்று கேட்டார். பால்வண்ணன் கூறிய பெயர்கள் இராஜேந்திரனுக்குப் பிடிக்கவில்லை. கலைமன்றம் போலச் சிறப்பாக இல்லையே' என்று அவர் கூறியபோது, பால்வண்ணன் 'கலை மன்றம்' என்னும் பெயரை வைத்துக் கொள்ள அனுமதித்தார். பெயரை விற்கவில்லை. அதை ஒருவகைக் கொடையாகக் கொடுத்துவிட்டார்.

கலைமன்றம் என்னும் பதிப்பகத்தின் பெயர் இவ்வாறு கைமாறியது.

புதிய 'கலைமன்றம்' பால்வண்ணன் தன் சொந்தப் பெயரிலும், ஊடுருவி, கலைச்செல்வன் முதலிய வேறுபெயர்களிலும் எழுதிய நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டது. பொன்மொழிகள் வரிசை, தலைவர்களின் வரலாற்று வரிசை, மொழிபெயர்ப்பு வரிசை என்று பலவகைகளில் பால்வண்ணன் எழுதிய நூறு நூல்களுக்கு மேல் வெளியிட்டது, விற்பனையும் எதிர்பார்த்தவாறு இருந்தது.

இலங்கையிலிருந்து ஸ்ரீமகள் கம்பெனியின் கிளை, தமிழ் நாட்டிலிருந்து இதழ்களையும் வரவழைத்து விற்றுவந்தது. இதழ்களின் விற்பனையும் வளர்ந்து வருவதைக் கண்டபோது இராஜேந்திரன் சொந்தமாக இதழ் நடத்த விரும்பினார், சென்னைக்கு வந்தார். பால்வண்ணனிடம் பேசி, அவரையே ஆசிரியர் பொறுப்பேற்கச் சொன்னார். இதற்குப் பெயர் தேடிய போது 'கலைமன்றம்' என்னும் பதிப்பகத்தின் பெயரையே பத்திரிகைக்கு வைக்கலாம் என்று ஆசிரியர் கூறியதை ஏற்றார், இராஜேந்திரன்.

'கலைமன்றம்' இதழ் பிறந்த கதை இது.

ஸ்ரீமகள் கம்பெனிக்கு உரிமையாளர் இருவர். ஒருவர் இராஜேந்திரன். இலங்கையில் இருந்தார். மற்றவர் எஸ். பிரான்சிஸ். சென்னை அலுவலகத்தைப் பார்த்துக் கொண்டார். (இவர்தான் பின்பு இந்துமதம் தழுவி, தம் பெயரைச் சங்கு கணேசன் என்று மாற்றிக்கொண்டவர். இலக்கியச் செல்வர் குமரி அனந்தனின் மாமனார்). இந்த இருவரும் இசைந்தே

பால்வண்ணனை ஆசிரியராக ஏற்றுக்கொண்டனர். (இனி, பால்வண்ணன் என்னும் பெயர், இக்கட்டுரையில் அதே பெயராலும் ஆசிரியர் என்னும் சொல்லாலும் குறிக்கப் பெறும்.)

'கலை மன்றம்' வார இதழாகத் தொடங்கியது. 1954ஆம் ஆண்டு சனவரி முதல் வெளியானது.

இவ்வாறு, பஞ்சாங்கமும் சினிமாப் பாட்டுப் புத்தகமும் வெளியிட்டுக் கொண்டிருந்த ஒரு நிறுவனம் பால்வண்ணன் தொடர்பால் பகுத்தறிவு நூல்களை வெளியிட்டுப் பின் அதே விளக்கம் கொண்ட ஒரு வார இதழும் நடத்தும் நிலைக்கு உயர்ந்தது.

'கலைமன்றம்' முதலில் டெம்மி 3¼ அளவில் (இன்றைய தினமணிக் கதிர் அளவில்) வெளியானது. 32 பக்கங்கள். விலை நான்கணா – கால் ரூபாய்.

அந்தக் காலத்து அரசியல் இதழ்களின் அமைப்புக்கேற்ப, தனியே ஓர் அட்டையில்லாமல், முதல்பக்கத்திலிருந்தே கட்டுரை – கவிதையுடன் 32 பக்கங்களில் முதல் இதழ் தயாரானது. 'பின்' அடிக்க வேண்டியதுதான் பாக்கி. அந்த நிலையில் இலங்கையிலிருந்து சென்னை அலுவலகத்துக்கு வந்து சேர்ந்தார் இராஜேந்திரன். அவரிடம் 32 பக்கங்களை மடித்துப் பின்னடித்துக் காட்டினர்.

இராஜேந்திரன் அந்த அமைப்பை விரும்பவில்லை. 'தனி அட்டையில்லாத இதழ், முகம் இல்லாத மனிதன் போல இருக்கிறது' என்று கூறினார். 'புல்வண்ண அட்டை அவசியம் தேவை, அதுவும் ஆர்ட் தாளில்!' என்று கூறினார். அப்படி ஓர் அட்டை போட்டால், அது மட்டுமே இதழ் தயாரிக்கும் செலவின் அளவு இருக்கும் என்று ஆசிரியர் உட்படப் பலரும் கூறி, அவரது யோசனையை மறுத்தனர்.

இராஜேந்திரன் கொஞ்ச நேரம் அமைதியாக இருந்தார். பிறகு, 'முதல் இதழை மட்டும் நான் கூறியபடி வெளியிடுங்கள். அடுத்த இதழிலிருந்து அட்டை இல்லாமல் வெளியிடுங்கள்' என்றார்.

ஸ்ரீமகள் கம்பெனி, பல்வண்ண ஆர்ட் தாளில் தலைவர்கள் படங்கள் வெளியிடும் நிறுவனம், அதனால் அறிஞர் அண்ணாவின் திரு வுருவப்படத்துடன் புல்வண்ண அட்டை மறுநாளே தயாராகி, முதல் இதழ் பொலிவோடு வெளிவந்தது.

முதல் இதழ் வெளியான வேகத்தில் விற்றுத் தீர்ந்ததுடன், பல்வேறு ஊர்களிலிருந்து மேலும் படிகள் தேவை என்று தந்தி வந்தது. தொடர்ந்து பாராட்டுக் கடிதங்கள் குவிந்தன! அட்டைப்பட அழகையும், அட்டைப் படத்து டன் நாலணா என்னும் குறைந்த விலையையும் பாராட்டாதவர்களே இல்லை.

இக்கடிதங்களைக் கண்டு ஆசிரியரும் வெளியீட்டாளரும் மகிழ வில்லை; மாறாக மருண்டனர்.

'அடுத்த இதழ் அட்டையில்லாமல் வெளியானால் என்ன ஆகும்?' என்று எண்ணியே மருண்டனர்.

இப்போதும் இராஜேந்திரன் அட்டைக்கு ஆதரவாகவே நின்றார்.

'இனி வரும் இதழ்களையும் இதைப் போலவே வெளியிடுங்கள். லாப நஷ்டம் பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்றார்.

எனவே 'கலைமன்றம்' தன் வெற்றிப் பயணத்தைத் தொடர்ந்தது. படிகளின் எண்ணிக்கை கூடக்கூடச் செலவும் கூடியது. ஆனாலும் வெற்றிப் பயணம் தொடர்ந்தது. மற்ற நாலணா இதழ்களைக் கலைமன்றத் தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இதுவே மிக மலிவாகப்பட்டது.

விலை மலிவுதான். ஆனால், வெளிவந்த விஷயங்கள் சிறப் பானவையாக அமைந்தன.

ஒவ்வோர் இதழிலும் அட்டைப் படத்தில் இடம் பெறும் அண்ணா முதலிய தலைவர்களைப் பற்றி உள்ளே ஒரு கட்டுரையையும் தலையங் கத்தையும் ஆசிரியர் எழுதினார். கௌதமன், த. சோழவேந்தன், கவிஞர். சுப்பு ஆறுமுகம், வே. தில்லைநாயகம், பா. கலைச்செழியன், க.த. திரு நாவுக்கரசு, கபிலன், வழிப்போக்கன், விருதை ந. இராமசாமி, கோவி. மணிசேகரன், அன்புமணி முதலானோர் தொடர்ந்து எழுதினார். புதிய எழுத்தாளர்க்கு மிகுதியாக இடம் வழங்கப்பட்டது. கலைமன்றத்தில் சிறுவர் பகுதியில் நான் தொடர்ந்து எழுதினேன். இப்பகுதி, என்னை ஆசிரியராகக் கொண்டு 'கரும்பு' சிறுவர் வார இதழ் தொடங்கும் வரை தொடர்ந்தது. ஓவியர்கள் பாண்டியன், நவீன், எம்.பி.எஸ். முதலியோர் மன்றத்தை அழகுறுத்தினர்.

கலைமன்றம் வெற்றி மேல் வெற்றி பெற்றதால் இயக்கத்தைச் சார்ந்த சிலர் இதழைக் குறை கூறினார்கள்.

என்ன குறை?

இதழில் வெளியான கதை, கவிதை, கட்டுரைகளிலா?

இல்லை.

'கலை மன்றத்தை வெளியிடுவோர் பஞ்சாங்கம் வெளியிடும் ஸ்ரீமகள் கம்பெனியினர். அவர்கள் பழமைவாதிகளே தவிர, பகுத்தறிவினர் அல்லர். எனவே இதை ஆதரிக்கக் கூடாது.'

ஆசிரியர் இதற்கு உடனே பதிலளித்தார்.

'திராவிட இயக்கத் தலைவர் சிலர் திரைப்படத்துறையில் ஈடுபட்டுள்ளனர். அந்தப் படங்களின் தயாரிப்பாளர்கள் பகுத்தறிவாளரா? அவர்கள் பழமைவாதிகளாக இருப்பினும் அவர்கள் தயாரிக்கும் படங்கள் மூலம் பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்ப வாய்ப்புக் கிடைக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள்வதன் மூலம், மக்களும் பயனடைகிறார்கள். அதைப் போலத்தான் கலைமன்றமும். பகுத்தறிவுக் கருத்துகளை எந்த வழியிலும் மக்களிடையே எடுத்துச் செல்வதில் தவறில்லை.'

ஆசிரியரின் இந்த விளக்கம் பலனளித்தது. எதிர்ப்புக்குரல் மெதுவாக அடங்கிப்போனது. அதுமட்டுமா? அக்குரல் எழுப்பியவர்கள், பழிப்பதை ஒழித்துப் பாராட்டுக் குரல் கொடுக்கவும் தொடங்கினர்.

அதற்கு ஒரு காரணம் இருந்தது.

தமிழகத்தில் திராவிட இயக்க ஏடுகள் பல இருந்தன. அவை புகழ் வாய்ந்த மூத்த தலைவர்களுக்கே முதலிடம் வழங்கின. மாநில அளவில் புகழ்பெறாத, மாவட்டத் தலைவர்கள் அந்த இதழ்களின் அட்டையில் இடம் பிடிப்பது அரிது.

கலைமன்றம் அட்டையில் தலைவர்களின் படங்களை வெளியிட்ட பால்வண்ணன் ஒரு புதுமை செய்தார். திராவிட முன்னேற்றக்கழகத்தின் அப்போதைய மாவட்டத் தலைவர்களின் படங்களை அட்டையில் வெளியிட்டு, உள்ளே அவர்களைப் பற்றிய கட்டுரையும் வழங்கினார். இந்தப் புதுமை, விற்பனையை மேலும் உயர்த்தியது. மாவட்டங்களில் கலைமன்றத்தின் புகழோங்கியது.

மாவட்டத் தலைவர்கள் படங்கள் வெளியிடத் தொடங்கும் முன், அட்டைப்படச் செலவைக் குறைக்க வழி செய்தனர். பத்திரிகையின் அளவைப் பாதியாய்க் குறைத்தனர் (குமுதம் – விகடன் அளவு). அதனால் அட்டைச் செலவும் பாதியானது. விற்பனை பாதிக்கப்படாமலும் நிலைத்தது.

கலைமன்றம் வெற்றிகரமாக வலம் வந்ததால் 'கரும்பு' என்னும் சிறுவர் வார இதழையும், 'கலை அரங்கம்' என்னும் சினிமா மாத இதழையும் தொடங்கினர். கரும்புக்கு, கல்லூரி மாணவனாக இருந்த நான் ஆசிரியராகப் பொறுப்பேற்றேன். 'பொன்னி' இதழுக்கு ஒரு 'முத்து' இதழ் போல, கலைமன்றத்துக்குக் கரும்பு அமைந்தது, பகுத்தறிவுப் பணி செய் தது. கலை அரங்கத்துக்கு, பால்வண்ணனே ஆசிரியராக இருந்தார். ஆனால், தன் புனைபெயர்களில் ஒன்றாகக் கலைச்செல்வன் என்னும் பெயரைப் பயன்படுத்தினார்.

கலை அரங்கமும் திராவிட இதழ்கள் பட்டியலில் இணைக்கத் தக்கதே. இயக்கக் கருத்துகள் கொண்ட திரைப்படங்களுக்கு அதிக இடமளித்தது. அறிஞர் அண்ணாவின் சொர்க்கவாசல் திரைப்படம் வெளி வந்தபோது, அதற்கு ஒரு சிறப்பு மலர் வெளியிட்டது. சொர்க்கவாசல் பற்றிய பல்துறை அறிஞர்களின் கருத்துகளைத் திரட்டி எட்டுப் பக்கங்களில் வெளியிட்டது. அந்தப் பக்கங்களைப் பார்த்து மகிழ்ந்த அண்ணா அவர்கள் அவற்றைத் தனியே அச்சிட்டுச் சிற்றூர்களில் வழங்குமாறு தெரிவித்தார் என்று படத்தின் புரொடக்ஷன் மேனேஜர் ஜி.என். வேலுமணி (பின்னர் இவர் தயாரிப்பாளரானார்) அவர்கள் பால்வண்ணனிடம் கூறி, அந்த எட்டுப்பக்கங்கள் பகுதியை, ஐயாயிரம் படிகள் அச்சிட்டுத் தருமாறும் அதற்குரிய பணத்தைத் தந்து விடுவதாகவும் தெரிவித்தார். இதை அறிந்த இராஜேந்திரன், 'அச்சிட்டுத்தாருங்கள். ஆனால் பணம் பெற வேண்டாம்' என்று பெருந்தன்மையோடு கூறிவிட்டார். அவ்வளவு நல்லவர்.

ஸ்ரீமகள் கம்பெனி, இவ்வாறு கலைமன்றம், கரும்பு, கலை அரங்கம் ஆகிய மூன்று இதழ்களை எந்தத் தொல்லையும் இல்லாமல் வெளியிட்டு வந்தது.

வளர்ச்சியும் உயர்ச்சியும் இதழ்களுக்கு இருப்பது போல இதழா சிரியர்களுக்கும் இருக்குமல்லவா? ஆசிரியர் பால்வண்ணனின் புகழ் பரவுவதும், சிறப்புமிக்கோரும் அவரைத் தேடி வருவதும், ஏறத்தாழ எல்லா ஊர் முகவர்களும் அவரைப் பாராட்டுவதும் தொடர்ந்தமை, அந்த நிறுவனத்திலிருந்த சிலருக்குப் பிடிக்கவில்லை. அதைக்காட்டிலும் பால் வண்ணனிடம் இராஜேந்திரன் மிகுந்த மதிப்புக் கொண்டிருப்பது பிடிக்க வில்லை. அண்ணனும் தம்பியுமாக (பால்வண்ணனும் நானும்) ஸ்ரீமகள் கம்பெனியில் ஆதிக்கம் செலுத்துகிறார்கள் என்னும் கருத்தை மெல்லப் பரப்பினார்கள். இவ்வாறு இராஜேந்திரனிடம் சொல்லவும் அச்சம்; அவர் அருகே செல்லவும் அச்சம். அதனால் சென்னையிலிருக்கும் பிரான்சிஸ் அவர்களிடம் மெல்ல இந்தக் கருத்தை வலியுறுத்தினர். பிரான்சிஸ் இயல் பாக நல்லவர். ஆனால் அருகே இருந்த சிலர் கோயபெல்ஸாகி ஓயாமல் 'கோள்' சொல்லினர்.

இப்போது அந்த நிறுவனத்தைப் பற்றி ஒரு செய்தி தெரிவிக்க வேண்டும்.

ஸ்ரீமகள் கம்பெனியில் வேலை பார்த்த அனைவரும், (ஏறத்தாழ ஐம்பது பேர் இருப்பார்கள்) இராஜேந்திரன் - பிரான்சிஸ் ஆகிய இரண்டு முதலாளிகளின் உறவினர் அல்லது ஊர்க்காரர். அவர்கள் வரதா முத்தையப்பன் தெருவில் இருந்த அப்போதைய 122ஆம் எண்ணுள்ள

ஸ்ரீமகள் கம்பெனி கட்டடத்திலே பணி செய்தது மட்டுமின்றி, அங்கேயே தங்கியிருந்தார்கள். இவர்களில் அன்னியராக இருந்தவர் பால்வண்ணன் ஒருவரே. அவர் அழைத்துவந்த வேறு இருவரும் அவருடன் இருந்தனர்.

இந்த அன்னியர்களை அகற்றிவிட வேண்டும் என்னும் விஷ விதையைக் கம்பெனியில் அந்தச் சிலர் விதைத்துவிட்டனர்.

ஆசிரியப் பணியில் யாரும் தலையிட மாட்டார்கள். தலையிடக் கூடாது என்பது இராசேந்திரன் உத்தரவு. 'நம்மவர்களுக்கு அதில் இட மில்லையே' என்று இரகசியமாகக் கூறி ஏங்குவார் போல நடித்தனர்.

இந்நிலையில் இச் சூழ்ச்சிக்காரர்களுக்குச் சாதகமாக இரு நிகழ் வுகள் நடந்தன.

அன்றைய புகழ் பெற்ற திராவிட இயக்க எழுத்தாளர்களில் ஒருவர் வழிப்போக்கன். பொன்னி இதழில் அவருடைய கட்டுரைகள் தொடர்ந்து வந்தன. கிண்டலும் கேலியும் நிறைந்த அக்கட்டுரைகள் தமிழர் அனை வரையும் கவர்ந்தன.

அவர் அரசு ஊழியர். அப்போது சென்னையிலிருந்தார். கலை மன்றத்தில் சில கட்டுரைகள் எழுதிவந்தார்.

அப்போது, (1955இல்) நடிகவேள் எம்.ஆர். ராதா தமது இராமாயணம் நாடகத்தை ஒற்றைவாடைத் தியேட்டரில் நடத்தி, ஆத்திக உலகை ஒரு கலக்குக் கலக்கினார்.

அவ்வளவுதான்!

ஆத்திகச் சான்றோர்கள் நாடகத்தைக் கண்டித்துக் கடிதம் எழுதினார்கள்; அறிக்கை விடுத்தார்கள்; அதைத் தடை செய்யச் சொல்லி அரசை வற்புறுத்தினார்கள்.

நடிகவேளின் நாடகத்தைப் பார்த்த வழிப்போக்கன், இராமாயணத் தைத் தழுவி ஒரு கிண்டல் நாடகம் எழுதினார். அதற்குச் 'சீதாயணம்' என்று பெயரிட்டார். அதை ஆசிரியரிடம் கொடுத்துக் கலைமன்றத்தில் தொடர் நாடகமாக வெளியிட வேண்டினார்.

எள்ளல் சுவை துள்ளி வரும் அந்த நாடகத்தை ஆசிரியர் கலை மன்றத்தில் தொடர் நாடகமாக வெளியிட்டார். இரண்டு பகுதி வெளி வருவதற்குள் நடிகவேளின் நாடகம் போலவே வழிப்போக்கனின் நாடகமும் தமிழகத்தை ஒரு கலக்குக் கலக்கியது. நடிகவேளின் நாடகத்தைத் தடைசெய்யுமாறு கூக்குரலிட்டவர்கள் இப்போது சீதாயணத்தையும் தடை

செய்யவேண்டும் என்று கூறினர். சிலர் இன்னும் கொஞ்சம் மேலே போய் சீதாயணம் வெளிவரும் இதழையே தடை செய்யவேண்டும் என்று முழங்கினர்.

இவர்கள் எதிர்ப்புக்கு அன்றைய தமிழக அரசு தலைவணங்கியது. நடிகவேளின் நாடகம் தடை செய்யப்பட்டது. வழிப்போக்கனின் நாடகத் தையும் தடை செய்தது. உடனே சி.ஐ.டி. போலீசார் கலைமன்ற அலுவலகத் தில் திடீரென்று நுழைந்து சோதனை நடத்தினர். சீதாயணம் நாடகத்தின் கையெழுத்துப்படி முழுவதையும் எடுத்துச் சென்றனர். வழிப்போக்கனின் கையெழுத்துப்போல எது தெரிந்தாலும் அதையும் அள்ளிக் கொண்டனர். கரும்பு சிறுவர் இதழுக்குரிய எழுத்தோவியங்களையும் எடுத்துச்சென்றனர்.

இது ஒரு நிகழ்வு.

சீதாயணம் நாடகம் நிறுத்தப்பட்டது என்பதைத் தவிர வேறு பாதிப்பு இல்லை. என்றாலும் எதிர்ப்பாளர்கள். சி.ஐ.டி. போலீசார் அலுவலகத்துள் நுழைந்ததையே பெரிதுபடுத்தி, 'இன்னும் என்ன நடக்குமோ? ஏது நடக்குமோ?' என்று அச்சமூட்டினர்.

இதைத்தொடர்ந்து மற்றொன்று நடந்தது.

கலைமன்றம் இதழை. அரசியல் காரணங்களுக்காக இலங்கை அரசு தடை செய்வதாக அறிவித்தது. அதனால் இலங்கைக்கு அனுப்பும் இதழ்கள் நின்றுவிட்டன.

இராசேந்திரன் மிகுந்த செல்வாக்கு உள்ளவர். அவர் 'ஏதோ தவறு தலாக எடுக்கப்பட்ட நடவடிக்கை இது. சில வாரங்களில் இதைச் சரி செய்து, முன்போல இலங்கைக்குக் கொண்டு வரலாம்' என்று கூறி விட்டார். இரு நிகழ்வுகளாலும் இராசேந்திரன் நிலை மாறவில்லை.

ஆனால் சென்னையில் வெறும் வாயை மெல்லும் வீணர்கள் இதை யும் பெரிதுபடுத்தி, தொடர்ந்து மற்ற இரு இதழ்களும் தடை செய்யப்படும் என்று பயமுறுத்தினார்கள்.

29.5.55ஆம் நாளிட்ட கலைமன்றம் இதழ் தயாராக இருந்தது. அதே நாளிட்ட கரும்பு தயாராக இருந்தது. இரண்டும் ஞாயிற்றுக்கிழமை வெளி வரும் இதழ்கள். இரண்டின் அட்டைப் படங்களும் அச்சாகவில்லை. 'அன்றிரவு அச்சாகிவிடும்' என்று கூறினர்.

மறுநாள் அலுவலகம் சென்ற ஆசிரியர் பார்வைக்குக் கலைமன்றமும் வரவில்லை. கரும்பும் வரவில்லை. அதற்கு அடுத்தநாள் இதழ்களைப் பார்த்த ஆசிரியர் அதிர்ச்சியடைந்தார்.

காரணம் என்ன?

கலைமன்றம் அட்டைப் படத்திலேயே 'ஆசிரியர்: பால்வண்ணன்' என்பது இடம் பெற்றிருக்கும். அதைப் போலவே கரும்பு அட்டைப் படத்தில், 'ஆசிரியர்: பூவண்ணன்' என்பது இடம்பெற்றிருக்கும். நாங்கள் பார்த்து அனுமதி தந்த அட்டைகளில் ஆசிரியர் பெயர்கள் இருந்தன. ஆனால் அச்சான இதழ்களில் இல்லை. இரவு நேரத்தில் எங்களிடம் தெரிவிக்காமல் எங்கள் பெயரை நீக்கியிருந்தார்கள். ஆனால் கடைசிப் பக்கத்தில் இடம் பெறும் இதழ் பொறுப்பு விவரத்தில் ஆசிரியர் பெயர்கள் இருந்தன. அதனால் ஆசிரியர் பொறுப்பிலிருந்து இருவரும் நீக்கப்பட வில்லை என்பது தெரிந்தது. அட்டைப்படத்தில் இடம் பெறும் சிறப்பு மட்டுமே குறைக்கப்பட்டிருந்தது.

ஆசிரியர் சினங்கொண்டார். நேரே அச்சிடுபவரும் வெளியிடு பவருமான பிரான்சிஸ் அவர்களைத் தேடிப்போனார். 'ஏன் ஆசிரியர் பெயரை நீக்கினீர்கள்?' என்று கேட்டார். பிரான்சிஸ் பதில் சொல்லத் தயங்கினார். ஆனால் அருகேயிருந்த அவர் உறவினர், கம்பெனியில் ஒரு முக்கியப் பொறுப்பில் இருப்பவர், 'அன்னியரை' அகற்றுவதில் அக்கறை கொண்டவர், 'அட்டையில் உங்கள் பெயரை நீக்கிவிட்டால், இலங்கை யில் தடை நீங்கிவிடும். அதனால் நீக்கிவிட்டோம்' என்றார்.

'நீங்கள் சொல்வது கலைமன்றத்துக்குப் பொருந்தும் என்று வாதத் துக்காக வைத்துக் கொள்வோம். கரும்புக்குத் தடையில்லையே. அதிலும் ஆசிரியர் பெயரை என் நீக்கினீர்கள்?'

இந்தக் கேள்விக்குப் பதில் வரவில்லை.

அடுத்து, 'நீங்கள் இப்படிச் செய்வதை இராசேந்திரனுக்குத் தெரி வித்தீர்களா?' என்று கேட்டார்.

'அவர் சிலோனில் இல்லை. அதனால் தெரிவிக்கவில்லை' என்றார் அந்த நபர்.

'அடுத்த இதழில் ஆசிரியர் பெயர் இடம்பெற வேண்டும். இராசேந்திரன் வந்து கூறும் வரை பெயரை நீக்கக் கூடாது' என்று ஆசிரியர் கூறினார்.

'அப்படிச் சொல்ல ஆசிரியர்க்கு உரிமையில்லை' என்பதை அந்த நபர் கூறி, தரக்குறைவாகப் பேசினார். ஆசிரியர் இதை பிரான்சிஸிடம் சுட்டிக்காட்டினார். அவர் மௌனமாக இருக்கவே ஆசிரியர் வெளியேறினார்.

கல்லூரியில் இருந்த எனக்கு ஒரு நண்பர் மூலம் தகவல் தெரிவித்து, அலுவலகம் செல்லாமல் வீட்டுக்கு வரச் சொன்னார், ஆசிரியர்.

அதன் பின்னர் இருவருமே அந்த அலுவலகத்தில் காலடி எடுத்து வைக்கவில்லை.

அவர்களுக்கு நல்ல காலம். இராசேந்திரன் ஒரு வாரம் ஊர் திரும்ப வில்லை.

ஆசிரியரும் நானும் முன்னரே தயாரித்திருந்த அடுத்த இதழ் - 5.6.55 நாளிட்ட கலை மன்றம் - கரும்பு இதழ்கள் அட்டையில் ஆசிரியர் கள் பெயரில்லாமல் வெளிவந்தன. அத்தோடு எங்கள் பணி முடிந்தது.

ஆசிரியர் கருணைகாட்டித் தம்முடன் பணியில் சேர்த்துக்கொண்ட ஒரு நபர், 'அன்னியர்' கோஷம் போட்டவரின் சூழ்ச்சியில் சிக்கிக் கொண்டார், என்று பின்பு ஆசிரியர் அறிந்தார்.

இராசேந்திரன் செய்தியறிந்து சென்னைக்கு வருவதற்குள் மேலும் சில இதழ்கள் வந்துவிட்டன. ஆனால் அவற்றில் கலைமன்றத்தின் பழைய கொள்கை இல்லை. சென்னை வந்த இராசேந்திரன் ஆசிரியரைச் சந்தித்து, மீண்டும் வருமாறு அழைத்தார். ஆசிரியர் நன்றிகூறி மறுத்துவிட்டார்.

ஸ்ரீமகள் கம்பெனி மூன்று இதழ்களையும் வேறு மூன்று ஆசிரியர் களைக்கொண்டு தொடர்ந்தது. கலைமன்றத்தில் நிலை மாறிவிட்டது. அதன் பாதை மாறிவிட்டது. என்றாலும் மூன்றும் தாக்குப்பிடிக்க முடியாமல் ஒன்றின்பின் ஒன்றாய் நின்றுவிட்டன.

ஆசிரியர் பால்வண்ணனைச் சும்மாயிருக்க விடாமல் பத்திரிகை நடத்துமாறு அவர் நண்பர்கள் சிலர் வற்புறுத்த, அவரும் கையிலிருந்த பணத்தைப் போட்டு, 'அறிவொளி' என்னும் இதழைத் தொடங்கினார். அதுவும் சொந்த அச்சகத்தில்; உடன் மக்கள் மன்றம் என்னும் பதிப்பகம் வேறு. 'அறிவொளி' கிரௌன் ¼ அளவில், 32 பக்கத்துடன் தனி அட்டை யில்லாமல் மாதமிருமுறையாக வெளிவந்தது. இதுவும் திராவிட இதழ்கள் பட்டியலில் இடம் பெறும் ஏடே.

முதல் இதழில் ஆசிரியர் அற்புதமான தலையங்கம் எழுதினார். தாம் ஏன் கலைமன்றத்திலிருந்து விலகி வந்தார் என்பதையும் மீண்டும் அழைப்பு வந்தும் ஏன் ஏற்கவில்லை என்பதையும் விளக்கியிருந்தார். கலைமன்றம் திராவிட இயக்க ஏடு என்னும் நிலைமாறி வேறு பாதையில் சென்றுவிட்டதைக் குறிப்பிட்டுவிட்டு,

'ஒரு தாய் தன் மகள் விதவையாவதைப் பொறுத்துக்கொள்வாள்; ஆனால் விபசாரியாவதைப் பொறுத்துக்கொள்ளமாட்டாள்'

என்று எழுதினார். உண்மையும் அதுதான்.

அறிவொளி ஆறுமாதங்கள் வாழ்ந்து கடன் சுமை ஏற்றிவிட்டு மறைந்தது.

மனக்கவலையுடன் தவித்த ஆசிரியர் பால்வண்ணன் முதலில் தொடங்கிய இடத்துக்கே சென்றார். வள்ளல் பெருமானின் சன்மார்க்க அரங்கில் நுழைந்தார். மலேசியா முதலிய நாடுகளுக்கு அந்தத் தகுதி யோடு பலமுறை சென்று வந்தார். அக்காலத்தில் 'சுத்த சன்மார்க்கம்' என்னும் மாத இதழைப் பல வருடங்கள் தொடர்ந்து நடத்தினார்.

இறுதிவரை சன்மார்க்க நெறியிலேயே உறுதியாய் நின்றார்.

என்றாலும் ஆசிரியர் பால்வண்ணன் பெயரை நினைக்கிறவர் களுக்கு உடனே நினைவுக்கு வரும் பெயர் கலைமன்றம். அந்த வகையில் அது நிலைமன்றமே!

# கதிர்

## க. சந்திரசேகரன்

சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகமாக உருப்பெற்று அதிலிருந்து பிரிந்த திராவிட முன்னேற்றக் கழகம் அரசியலில் வளர்ந்து கனிந்து கொண்டிருந்த காலம் 1965. அப்பொழுது வெளிவந்தது 'கதிர்'.

கடமை, கட்டுப்பாடு, கண்ணியம், கதிரவன், கலைக்கோயில், கலைப் பொன்னி, கலைப்பூங்கா, கலைமன்றம், கவிக்கொண்டல், களஞ்சியம், கழகக்குரல், கனவு, கன்னி என 'க' வரிசை திராவிட இயக்க இதழ்களில் குறிப்பிடத்தக்கது கதிர்.

தமிழுக்குத் தனிமைப்பட்டுப்போயிருந்த தமிழர்களுக்குப் பண்டிதத் தமிழையும் பாமரத் தமிழையும் குழைத்து, அதில் எளிமையும் இனிமையும் கலந்து, பேச்சாய், எழுத்தாய், பாட்டாய், கதையாய், நாடகமாய், திரைப் படமாய்ப் பட்டிதொட்டியெங்கும் விதைத்த இயக்கம் திராவிட இயக்கம்.

1967இல் ஆட்சிப் பொறுப்பேற்ற அண்ணா அவர்கள்,

> நா, பேனா இவ்விரண்டையும் தவிர வேறு என்ன உண்டு நம்மிடம்? இவ்விரண்டையும் வைத்தே நாம் ஆட்சியைப் பிடித்துள்ளோம்![1]

என்று கூறியது, மேடையும் பத்திரிகையுமே திராவிட இயக்கத்தின் பிரச்சார சாதனம் என்பதைத்தான். பத்திரிகைத்தமிழின் வளர்ச்சியிலும் மேடைத் தமிழின் வளர்ச்சியிலும் திராவிட இயக்கத்தின் பங்கு மகத்தானது என்று சொல்லலாம்.

சுயமரியாதை இயக்கம் தோற்றம்பெற்ற காலத்திலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சியைப் பிடிக்கின்ற காலம்வரை திராவிட இயக்கத்தின் முன்னணித் தலைவர்கள் பலர் ஆளுக்கொரு ஏடு நடத்தி வரலாற்றை உருவாக்கி இருக்கிறார்கள். அவற்றில் வார ஏடுகள், திங்கள் ஏடுகள், திங்களிருமுறை ஏடுகள், நாளேடுகள் உண்டு.[2]

தந்தை பெரியார் ஈ.வெ.ரா., அறிஞர் அண்ணா, கலைஞர் மு. கருணாநிதி, நாவலர் இரா. நெடுஞ்செழியன், கவிஞர் கண்ணதாசன், என்.வி. நடராசன், கே.ஏ. மதியழகன், ஏ.வி.பி. ஆசைத்தம்பி, சி.பி. சிற்றரசு, இப்படிப் பல முன்னணித் தலைவர்கள் பத்திரிகையைச் சொந்தத்தில் தொடங்கி நடத்தி ஆசிரியப் பொறுப்பையும் ஏற்றிருந்தார்கள். என்னை வெளி மாநில நிருபர்கள் அல்லது வெளிநாட்டு நிருபர்கள் சந்தித்து 'நீ என்ன தொழில் செய்கிறாய்?' என்று கேட்கும்போது, நான் ஒரு பத்திரிகை யாளன் (journalist) என்று சொல்வது வழக்கம்[3] என அறிஞர் அண்ணா கூறியுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது.

தி.மு.க. வின் இரண்டாம் நிலைத் தலைவர்கள், தொண்டர்கள், இயக்க ஆதரவாளர்கள் எனப் பலர் அவரவர் சக்திக்கும் திறமைக்கும் ஏற்ற வகையில் ஏடுகளை நடத்தி, இலக்கிய வளர்ச்சிக்கும் - அரசியல் மாற்றத் துக்கும் ஆட்சி மாற்றத்துக்கும் அடித்தளம் அமைத்தனர்.

இயக்கத் தலைவர்களின் இதய ஒலியை மக்கள் நெஞ்சத்திற்கு அனுப்பும் கம்பியில்லாத் தந்திகளாய் இதழ்கள் விளங்கின.[4] இதழ்கள் பார்த்தவுடனே படிக்கத் தூண்டின; படித்தவுடனே பாதுகாக்கத் தூண்டின; பாதுகாத்ததைத் தம் நண்பர்க்கு வழங்கி மகிழச் செய்தன.[5] அவற்றுள் 'கதிர்' திராவிட வளர்ச்சிக்கென்றே வெளிவந்த மாத இதழ்.

1965ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் 'கதிர்' வெளிவந்தது. கடைசிக் கதிர் 1966 நவம்பர் மாதம் வெளிவந்துள்ளது. 1965ஆம் ஆண்டில் அக்டோபர், நவம்பர், டிசம்பர் என மூன்று இதழ்களும் 1966ஆம் ஆண்டில் ஜனவரி, பிப்ரவரி, ஏப்ரல் (ஏப்ரல் இதழ் 6 & 7 என்று குறிப்பிடப்பட்டுள்ளது) நவம்பர் என நான்கு இதழ்களும் ஆக மொத்தம் ஏழு இதழ்களே வெளிவந்திருக்கின்றன.

### இதழ் அமைப்பு

கதிரின் அளவு 20 x 13 செ.மீ., அட்டைப்படம் நீங்கலாக 64 பக்கங்கள் கொண்டது. முதல் இதழின் அட்டையில் தவில் வாசிக்கும் ஒரு பெண்ணின் சிலை வடிவமும் சூரியக் கதிர்களின் பின்னணியில் 'கதிர்' தலைப்பும் அட்டையின் கீழே '40 காசு' என இதழின் விலையும் அச்சிடப் பட்டுள்ளன. கடைசி அட்டையில் விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. இதழின் உள்ளே முதல் பக்கத்தில் இடதுபுறத்தில் ஆசிரியர்: ப. புகழேந்தி, ஆசிரியர் குழு: தில்லை மறைமுதல்வன், இரா. இளஞ்சேரன், ஆ. மாதவன் என்றும் தனி இதழ் 40 காசு; ஆண்டுக் கட்டணம் 5 ரூபாய் என்றும் அலு வலகம்:16, அஜீஸ் முல்க் 4வது தெரு, சென்னை - 6 என்றும் அச்சிடப் பட்டுள்ளது. வலதுபுறத்தில் சூரியக்கதிரின் பின்னணியில் 'கதிர்' என்று

எழுதப்பட்டு அதில் 'ர்' என்ற எழுத்தைச் சுற்றிவளைத்தாற்போல நெற்கதிர் வரையப்பட்டுள்ளது. அதற்குக் கீழே 'இலக்கியத் திங்கள் இதழ்' என்ற வாசகமும் அதற்கும் கீழே ஒரு கவிதை.

தெளிவளிக்க இருட்கதவை
உடைத் தெறிந்தான் பரிதி
திசை மகனை அறிவுலகில்
தழுவுகின்றார் மக்கள் பாரதிதாசன்

என்றும் பொறிக்கப்பட்டுள்ளது. இந்தக் கவிதை வரிகள் இதழ்தோறும் முதல் பக்கத்தில் இடம் பெற்றுள்ளன. 1966 ஜனவரி இதழில் மட்டும் இக்கவிதை இடம்பெறவில்லை. இடப்பற்றாக்குறை காரணமாக விடுபட்டிருக்கிறது எனக் கொள்ளலாம்.

1965 டிசம்பர், 1966 ஜனவரி, பிப்ரவரி ஆகிய மூன்று மாத இதழ்களில் மட்டும் ஆங்கில மாதத்துக்கு இணையான தமிழ் மாதங்களின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. இதழ்கள் மலர், இதழ் என்று பகுக்கப்பட்டுள்ளன. ஆனால், இரண்டாம் ஆண்டின் முதல் இதழான நவம்பர் 1966 இதழ், ஆண்டு:2, இதழ் 1 எனக் குறிக்கப்பட்டுள்ளது. 1966 ஜனவரி இதழ் ¼, கோபாலபுரம் 2வது தெரு, சென்னை - 6 என்ற முகவரியிலிருந்து 'கதிர்' வெளியிடப்பட்டுள்ளது. 1966 நவம்பர் இதழில் ஆசிரியர் குழுவின் பெயர்கள் இடம் பெறவில்லை. ஆசிரியர் பெயர் மட்டுமே அச்சிடப் பட்டுள்ளது.

### இதழின் உள்ளடக்கம்

பொதுவாக இதழின் உள்ளடக்கமாக வெளிவந்த செய்திகளுக்குத் தனித்தனியாகத் தலைப்பிடப்பட்டுள்ளன. அவை: வணக்கம், பொன்னேடுகள், பூக்கூடை என்ற தலைப்பிலும் தமிழ்ச் சிறுகதை நீங்கலாக மற்ற திராவிடமொழிக் கதைகள், தெலுங்குக் கதை, கன்னடக் கதை, மலையாளக் கதை என்ற தலைப்பிலும், உருவகம், ஒரு காதல் கதை, கலை, உலகம் என்ற தலைப்பிலும் அமைந்துள்ளன. கவிதை, இலக்கியத் திறனாய்வு, அண்டை இலக்கிய அறிஞர்கள் அறிமுகம், நூல் அறிமுகம், நூல் விமர்சனம், மருத்துவ விஞ்ஞானம் போன்ற பல செய்திகளும், குட்டிக்கதைகளும் துணுக்குகளும் அவ்வப்போது பல்வேறு தலைப்புகளில் வெளியிடப் பட்டுள்ளன.

### வணக்கம்

'வணக்கம்' பகுதி ஆசிரியர் பக்கமாகவும் இதழின் அறிமுகப் பக்க மாகவும் எல்லா இதழ்களிலும் அமைந்துள்ளது. முதல் இதழின் 'வணக்கம்'

பகுதியில் ஆசிரியர் எழுதியுள்ள விளக்கம், இதழ் தொடங்குவதன் நோக்கத்தை வெளிப்படுத்துகின்றது:

> முழுக்க முழுக்க இலக்கிய முயற்சி இது.
>
> படிப்பவர்களின் ஆதரவை மட்டுமே நம்பி நிற்கும் இதழ் இது.
>
> "அண்டை மாநிலங்களான - தென்னாட்டின் பிற பகுதிகளான ஆந்திரத்திலும், கர்னாடகத்திலும் கேரளத்திலும் வளர்ந்துவரும் இலக்கிய உணர்வுகள் பற்றித் தமிழில் முறையாகச் சொல்லப்படவில்லை. அந்தக் குறையைப் போக்கும் பெருமுயற்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளவருகிறது 'கதிர்'.
>
> இலக்கிய வளர்ச்சிக்குத் திறனாய்வு விருந்துணவு போல, தமிழில் அது மருந்தாக இருக்கிறது. திறனாய்வுக்குக் கதிரில் சிறப்பான இடம் உண்டு.
>
> கோபுரத்திற்குக் கலசம்போல மொழியில் கவிதை.
>
> 'கதிர்' புதிய கவிஞர்களை அறிமுகப்படுத்தும்.
>
> மற்றும் வாசகர்களின் ரசனைக்குப் பலவும் தர 'கதிர்' காத்திருக்கிறது"[6]

எனவும் இதழுக்கு வாழ்த்தாக அண்ணா கூறியுள்ளதை மேற்கோள் காட்டி,

> அறிஞர் அண்ணா அவர்கள் குறிப்பிட்டிருப்பதுபோல, இது பத்தோடு பதினொன்றல்ல; 'புது முயற்சி - தேவையான இதழ்' நண்பர்கள் உணர்ந்து ஆதரித்தால் 'கதிர்' வாழும்; வளரும்[7]

என்றும் விளக்கம் எழுதியிருப்பது இதழ் வெளிக்கொணரும் நோக்கத்தைக் கோடிட்டுக் காட்டியுள்ளது.

### பொன்னேடுகள்

புகழ்பெற்ற தலைவர்களின் ஆற்றல்களையும் அவர்தம் திறமைகளையும் மக்கள் மன்றத்தில் அவர்களுக்குள்ள இடத்தையும் வெளிப்படுத்தும் பகுதியாகப் 'பொன்னேடுகள்' இடம் பெற்றுள்ளது. மொத்தம் வெளிவந்த ஏழு இதழ்களில் மூன்று இதழ்களில் மட்டுமே 'பொன்னேடு

கள்' இடம்பெற்றுள்ளது. அதில் இடம் பெற்றுள்ள தலைவர்கள் அறிஞர் அண்ணா, ஆர்.கே. சண்முகம், லால்பகதூர் சாஸ்திரி ஆகியோர்.

அறிஞர் அண்ணாவைப் பற்றிய பொன்னேடுகளில்,[8]

> 'உலகில் தமிழர் உள்ளமெல்லாம் வீற்றிருக்கும் தலைவர்; தமிழர்தம் முடிசூடா மன்னர்' என்று Illustrated Weekly எழுதியது;
>
> 'அண்ணாவின் நெஞ்சம் சுத்தமான நெஞ்சம்; சுத்தமான உள்ளமே நாட்டுக்குத் தேவை' என்று அண்ணாவின் தலைமையை வரவேற்று ராஜாஜி பாராட்டியது;
>
> 'அதிசயிக்கத்தக்க ஆற்றல் மிகப் பெற்ற அரசியல் தலைவர்' என கம்யூனிஸ்ட் கட்சியின் அப்போதைய நாடாளுமன்றத் தலைவர் பேராசிரியர் ஹிரேன் முகர்ஜி பாராட்டியது;
>
> 'தமிழகத்தின் சிறுமனிதனை, ஏழைப் பாட்டாளியை உணர்ச்சிமிக்க நம்பிக்கையுடைய மனிதனாக ஆக்கிய பெருமை அண்ணாவுக்கே உண்டு' என டாக்டர் ராம் மனோகர் லோகியா கூறியது.
>
> 'அவருடைய எளிமையும் நேர்மையும் தமிழகத்திற்குப் பணிபுரியக் கனன்று எரியும் தேசபக்தியும் கண்டு நான் மிகவும் கவரப்பட்டேன்' எனச் சிறந்த பேச்சாளரும் இன்றைய தலைமையமைச்சரும் அன்றைய ஜனசங்கத் தலைவருமான அடல்பிகாரி வாஜ்பாய் கூறியது போன்ற பல செய்திகள் இடம்பெற்றுள்ளன.

அதைப்போல, சுதந்திர இந்தியாவின் முதல் நிதி அமைச்சர் திரு.ஆர்.கே. சண்முகம் அவர்களைப்பற்றி செய்தி வருமாறு:[9]

> "சண்முகம் நிதியமைச்சராக இருந்தபோது, ஒருநாள் காந்தியடிகளைப் பார்க்கச் சென்றிருந்தார். அப்போது காந்தி, "இப்போது நீங்கள் சுதந்திர இந்தியாவின் நிதி மந்திரி. ஒன்று நீங்கள் இங்கே உள்ள சகாக்களுக்குத் தமிழ் கற்பிக்க வேண்டும் அல்லது நீங்கள் ஹிந்துஸ்தானி பேசக் கற்றுக்கொள்ள வேண்டும்" என்றார். தம்மால் சுலபமாக ஹிந்துஸ்தானி கற்றுக் கொள்ள இயலும் என்று தாம் நம்பவில்லை என்று சண்முகம் பதிலளித்தார். அத்துடன் முப்பது ஆண்டு காலமாகக் காந்தியடிகளுடன்

மிகவும் நெருக்கமாக இருந்துவரும் ராஜகோபாலாச் சாரியாரே இன்னும் ஹிந்துஸ்தானி கற்றுக்கொள்ள வில்லையே என்பதையும் சுட்டிக் காட்டினார்."

"கடவுளை மனிதன் உணர்வதற்குப் பெரும் முட்டுக் கட்டையாக இருப்பது, கடவுளுக்கும் மனிதனுக்கு மிடையே நிற்கும் பூசாரிதான். பூசாரியின் பேராசையும் ஒழுக்கக் குறைவும்தான் இன்று ஆலயங்களை மாசு படுத்திவிட்டன.

"நமது அண்டை அயலாருடன் சுமுகமாக வாழ்வதற்கு, நமது மதம் குறுக்கே நின்றால் அத்தகைய மதத்தைத் திருத்தவேண்டும் அல்லது அதற்கு முடிவு கட்ட வேண்டும்."

என்று தமிழ்வளர்ச்சிக் கழகம் புதிதாக அமைக்கப்படவிருந்தபோது ஆர்.கே. சண்முகம் சொன்னார்:

"ஜெர்மனியிலோ, ஜப்பானிலோ, பிரிட்டனிலோ தமிழை வளர்க்க ஸ்தாபனம் அமைத்தால் அர்த்தம் இருக்கிறது. தமிழ்நாட்டில் இப்படி ஒன்று தோன்றுவது அதிசயமாக இருக்கிறது."

"நான் உதவிக்கும் ஆலோசனைக்கும் நாடுகிறவர்களில் அவர் ஒருவர்" என்று இராஜகோபாலாச்சாரியாராலும் "பெரிய ராஜதந்திரி; நிதி, பொருளாதார நிபுணர், தமிழ்க் கலாசாரத்தின் காவலர் என்று சர்.சி.பி.ராமசாமி அய்யராலும் பாராட்டப்பட்டவர் ஆர்.கே. சண்முகம்"

என்பன போன்ற பல செய்திகள் பொன்னேடுகளில் பொறிக்கப் பட்டுள்ளன.

முன்னாள் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரியைப் பற்றிய செய்திகள் வருமாறு:[10]

"புவனேசுவரத்தில் நோய்வாய்ப்பட்டு டில்லி திரும்பிய நேரு, லால்பகதூரை இலாகா இல்லாத அமைச்சராக நியமித்தார்.

"என்னை என்ன வேலை செய்யச்சொல்கிறீர்கள்" என்று கேட்டார் லால்பகதூர்.

"என் வேலையைச் செய்யுங்கள்" என்றார் பிரதமர் நேரு.

"தாஷ்கண்டு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதும் நிருபர் கள் கூட்டத்தில் உரையாடிக் கொண்டிருந்த பாகிஸ்தான் அதிபர் அயூப்கானை ஒரு நிருபர் கேட்டார்:

"இந்த மகத்தான நிகழ்ச்சியின் நினைவாக விடுமுறை விடுவீர்களா?" புன்னகை பூத்தவாறு அயூப் பதிலளித்தார். 'எனக்குத் தெரியாது. லால்பகதூர் ஒருவேளை விடலாம்!'

(மறுநாள் தாஷ்கண்டுக்கு லால்பகதூர் மரணம் காரண மாக விடுமுறை விடப்பட்டது)

தாஷ்கண்டிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பும்போது சாஸ்திரி சுற்றி வளைத்துக்கொண்டு போவதற்குப் பதில், பாகிஸ்தான்மீது பறந்து செல்லும்படி அதிபர் அயூப்கான் இந்தியப் பிரதமரைக் கேட்டுக்கொண்டார். அத்துடன் பாகிஸ்தான் தலைநகரான ராவல்பிண்டியில் சிறிது நேரம் தங்கித் தம்முடன் தேநீர் அருந்தும்படி வேண்டினார்.

"அந்த வழியே திரும்புகிறேன். ஆனால் தேநீர் அருந்து வதற்கில்லை" என்றார் லால்பகதூர். மறுநாள் சாஸ்திரி அந்த வழியேதான் திரும்பினார் -ஆனால் சவமாக."

இப்படி அரிய பல வரலாற்றுக்குறிப்புகளைப் பதிவு செய்திருக்கிறது 'பொன்னேடுகள்.'

**பூக்கூடை**

பல்வேறு பூக்களைச் சுமந்திருக்கும் கூடை பல்வேறு மணங்களை வீசச் செய்வதுபோலப் படித்து ரசிக்கக் கூடிய செய்திகளைப் பூச்சரமாய் அள்ளித்தரும் பகுதியாகப் பூக்கூடை அமைந்துள்ளது.

'ஜம்மு -சியால் கோட் போர்முனையில் செப்டம்பர் 12ஆம் தேதி நடைபெற்ற கடுமையான போரில், நமது டாங்கிப் படை வீரர்கள் பாகிஸ்தான் டாங்கியைத் தூள்தூளாக நொறுக்கினர்.

எதிரியின் டாங்கியை ஒழித்த நம் வீரர்களில் ஒருவரின் பெயர் அயூப்கான். ராஜஸ்தானைச் சேர்ந்த முஸ்லிம் வீரரான இந்த அயூப்கான், (பாக்.) ராவல் பிண்டி அயூப்கானின் டாங்கியைத் தகர்த்தது பொருத்தமான காரியம் அல்லவா?'[11]

"நாட்டைக் காக்க வீட்டுக்கொருவர் தேவை" என்ற சொல்வழக்கைச் செயலாக்கிவிட்டது. தமிழகத்தின் சேலம் மாவட்ட கிருஷ்ணகிரி வட்டம். இங்கு சுமார் 1000 பேர் இராணுவத்தில் சேர்ந்துள்ளனர். இங்குள்ள சில

குடும்பங்களில் ஆண்மக்கள் அனைவருமே போர்முனை சென்றுள் ளனர்.ஒரு கிராமத்தைச் சார்ந்த தகப்பனும், மகனும் ஒரே போர்முனையில் பணியாற்றிக் கொண்டிருக்கின்றனர். "சின்னதலைப் பள்ளி கிராமத்தில் ஒருதாய், மிக உற்சாகமாக எனது எட்டு மகன்களையும் போர்க்களத்திற்கு அனுப்பிவிட்டேன்" என்று கூறினாள்.

இன்னொரு கிராமத்திலுள்ள 100 குடும்பங்களில் 80 ஆண்கள் போர்முனை சென்றுள்ளனர்.

மற்றொரு கிராமத்தில் 45 மணி நேரத்தில் 43 வாலிபர்கள் படையில் சேர்ந்திருக்கின்றனர்.[12]

இந்தியப் பாகிஸ்தான் போரின்போது 'டில்லி சலோ' (டில்லி செல் வோம்) என்ற அயூப்கானின் கூற்றுக்குப் பாதுகாப்பு அமைச்சர் சவான் மிக அழகாகப் பதில் சொன்னார்:"நீங்கள் டில்லிக்குத் தாராளமாக வரமுடியும் – கைதிகளாக"[13]

"தமிழ் இலக்கியம் என்றால் தமிழில் எழுதப்பட்டவை எல்லாம் இலக்கியம் என்று கூறவில்லை. பெரிய அளவில் விற்பனையாகும் ரயில்வே கைடு கூடத் தமிழில்தான் அச்சடிக்கப்படுகிறது. பஞ்சாங்கம் கூடத் தமிழில் தான் இருக்கிறது. அல்லி அரசாணி மாலையும் தமிழில்தான் இருக்கிறது. அலாவுதீன் கதையும், அலிபாபா கதையும் கூடத் தமிழில் வெளிவந்திருக் கின்றன. ஆனால், இவையெல்லாம் தமிழ் இலக்கியங்கள் என்று கூறிவிட முடியாது. தமிழர்கள் நெடுங்காலமாக நம்பி வந்த, கடைப்பிடித்துவந்த, வாழ்க்கை நெறிகளை, முறைகளை எடுத்துரைக்கவும் அவற்றுக்கு மேலும் வலுச்சேர்ப்பதுமான நூல்களே தமிழ் இலக்கியங்களாகும். தமிழ் நெறியை அறியாதவர்கள் அதற்கு வலுவூட்டும் எண்ணமில்லாதவர்கள் எழுதுவ தெல்லாம் தமிழ் இலக்கியம் ஆகிவிடாது."[14]

"பல்கேரியாவில் மறதிக்குப் புகழ்பெற்ற பேராசிரியர் அலெக் ஸாண்டர் பாலபனோவ் ஒரு நாள் போபியா நகரத் தெருவின் வழியே நடந்துகொண்டிருந்தார். திடீரென வீசிய காற்று அவரது தொப்பியைத் தலையிலிருந்து அகற்றிப் பறக்க வைத்துவிட்டது. பேராசிரியர் தொப்பி யைத் துரத்திக் கொண்டு ஓடினார். நீண்டதூரம் ஓடித் தொப்பியை மீட்டார். மீட்ட தொப்பியை ஒரு காகிதத்தில் சுற்றி, பத்திரிகை அலுவலகம் ஒன்றினுள் சென்று அங்குத் தொப்பியையும் கொடுத்துக் கீழ்வரும் விளம் பரத்தையும் கொடுத்தார்:

'தெருவில் சென்று கொண்டிருந்தபோது, பேராசிரியர் பாலபனோவ் ஒரு தொப்பியைக் கண்டெடுத்தார். அதை எங்கள் அலுவலகத்திலிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

விளம்பரத்திற்குப் பணம் கொடுத்துவிட்டு, தொப்பியையும் அங்கு விட்டுவிட்டுப் போன அவர் சில நாட்கள் கழித்து விளம்பரம் வெளியான செய்தித்தாளுடன் வந்து தனது தொப்பியைத் தருமாறு பத்திரிகை அலுவலகத்தில் கேட்டார்.[15]

இப்படி ரசித்து, நுகர்ந்து மகிழத்தக்க பல்வேறு மலர்கள் பூக் கூடையில் இருக்கின்றன.

### *சிறுகதைகள்*

திராவிட மொழிகளான கன்னடம், மலையாளம், தெலுங்கு ஆகிய மொழிகளில் வெளிவரும் சிறுகதைகளுக்குத் தமிழ் வடிவம் கொடுத்து வெளியிடுவது என்ற அடிப்படையில், இதழ்தோறும் மொழிக்கு ஒரு கதையாகத் தமிழ்ச் சிறுகதையையும் சேர்த்து நான்கு கதைகள் வெளி யிடப்பட்டுள்ளன. நவம்பர் 1966 இதழில் தமிழ், தெலுங்கு, மலையாளக் கதைகள் இடம்பெற்றுள்ளன. ஆனால் கன்னடக் கதை இடம் பெறவில்லை.

தெலுங்கு, கன்னடம், மலையாளம் மொழிக் கதைகளை வெளி யிடுவதில் மற்றைய இதழ்களில் இல்லாத புத்தம்புது அம்சம், கதாசிரியரைப் பற்றிய அறிமுகம் புகைப்படத்துடன் வெளியிட்டிருப்பது குறிப்பிட்டுப் பாராட்டத்தக்கது. இது கதைப்பொருளோடு கதாசிரியரின் முகத்தையும் மனதில் பதியச் செய்து விடுகின்றது. மேலும் இதழ்தோறும் வெளியிட் டுள்ள கதைகள் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என வரிசை மாறாமல் வெளியிடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

### *தமிழ்க்கதை*

அகிலனின் ‘மத யானை’[16] ஆர்.சூடாமணியின் ‘வாழ்வெனும் மர்மம்’[17] கோவி. மணிசேகரனின் ‘தொட்டில்’[18] அறிஞர் அண்ணாவின் ‘தவளையும் மனிதனும்’[19] கலைஞர் கருணாநிதியின் ‘நண்பனா?’[20] ஹெப்சிபா ஜேசுதாசனின் ‘ஊடல்’[21] ஆ. மாதவனின் ‘மோக பல்லவி’[22] அ. வேதாசலத்தின் ‘கொம்புத் தேன்’[23] சுந்தர ராமசாமியின் ‘தற்கொலை’[24] எம்.வி. வெங்கட்ராமின் ‘யுகதர்மம்’[25] கி. ராஜநாராயணனின் ‘ஒரு காதல் கதை’[26] ஆகிய சிறு கதை கள் ‘கதிரி’ல் வெளிவந்துள்ளன.

“இப்பொழுது இதழுக்கு ஒரு தமிழ்ச் சிறுகதை வந்து கொண்டிருக் கிறது. அடுத்த இதழ் முதல் இரண்டு சிறுகதைகள் வரும். வழக்கம்போல் தெலுங்கு கன்னட மலையாளச் சிறுகதைகளுடன்” என்ற அறிவிப்பு ஏப்ரல் 1966 இதழில் ‘வணக்கம்’ பகுதியில் வெளியானது. அதன்படி ஏப்ரலுக்கு அடுத்து வெளிவந்த கடைசிக் கதிரான நவம்பர் இதழில் இரண்டு தமிழ்ச்சிறுகதைகள் வெளிவந்துள்ளன.

**தெலுங்குக் கதை**

தெலுங்குச் சிறுகதை உலகின் முன்னணி எழுத்தாளர் பத்மராஜுவின் 'கர்ணம் கனகய்யாவின் உயில்'[27] தெலுங்கு முற்போக்கு எழுத்தாளர்களில் ஒருவரான கொ. குடும்பராவின் 'புதுவாழ்வு'[28] தெலுங்குச் சமுதாய சீர்திருத்தவாதி குருஜாடா அப்பாராவின் 'சீர்திருத்தம்'[29] பீனாதேவியின் 'ராதையின் திருமணம்'[30] ஜனமஞ்சி ராமகிருஷ்ணாவின் 'ஆர்காஸ்'[31] அவசரால ராமகிருஷ்ணராவின் 'சுபத்ரா'[32] முப்பது வயதுக்குள் முப்பது நாவல்களை எழுதிப் புகழ்பெற்ற லதாவின் 'வம்சீ குஞ்சம்'[33] ஆகிய தெலுங்குச் சிறுகதைகள் சிறப்பாகத் தமிழில் பெயர்க்கப்பட்டுக் கதிரில் வெளிவந்துள்ளன. இவற்றில் பத்ம ராஜுவின் 'கர்ணம் கனகய்யாவின் உயில்' என்ற சிறுகதை உயில் எழுதுவது போன்றே எழுதி முடிக்கப்பட்டுள்ளது - எழுத்தில் ஒரு புதிய முறையை அறிமுகப்படுத்தியிருப்பதாகக் கூறலாம்.

குடும்பராவின் 'புதுவாழ்வு' என்ற கதையை மட்டும் சௌரி என்பவர் மொழிபெயர்த்துள்ளார். இதழில் வெளிவந்த எஞ்சிய தெலுங்குக் கதைகள் அனைத்தையும் எம்.எஸ். கமலா என்பவரே மொழி பெயர்த்துள்ளார்.

**கன்னடக் கதை**

கல்கியின் 'பார்திபன் கன'வைச் சாகித்திய அகாதமிக்காகக் கன்னடத்தில் மொழிபெயர்த்துத் தந்த தமிழறிந்த கன்னட எழுத்தாளர் சேஷ நாராயணாவின் 'வசந்தனின் கோபம்'[34], புகழ்பெற்ற கன்னட எழுத்தாளர் நிரஞ்சனாவின் மனைவியும் சிறந்த கன்னட எழுத்தாளர்களில் ஒருவருமான அனுபமாவின் 'ஜானகிக்கு வந்த மயக்கம்'[35], புகழ்பெற்ற ரஷ்ய இலக்கியாசிரியர்களான ஆண்டன் செகாவ், மாக்ஸிம் கார்க்கி ஆகியோரின் எழுத்துகளைக் கன்னடத்துக்குத் தந்த நிரஞ்சனாவின் 'டிலக்ஸ்'[36], 'கன்னட இலக்கியத்தின் சிறுகதைத் தந்தை' 'மாஸ்தி கன்னடத்தின் ஆஸ்தி' ஆகிய அடைமொழிகளைப் பெற்ற மாஸ்திவெங்கடேச அய்யங்காரின் 'நளினியின் தந்தை'[37], முற்போக்கு எழுத்தாளர் உமாசங்கரின் 'ஹனுமி'[38] ரா. வெம். ஸ்ரீனிவாசாவின் 'பாலம்'[39] ஆகிய கதைகள் கதிரில் வெளிவந்துள்ளன.

மேற்கண்ட கன்னடக் கதைகள் அனைத்தையும் தமிழில் தந்துள்ளவர் தமிழறிந்த கன்னட எழுத்தாளர் சேஷநாராயணா அவர்களாவார்.

**மலையாளக் கதை**

வக்கீல் தொழிலை விட்டுவிட்டு இலக்கியப் பணிக்கு வந்த மலையாள இலக்கியத்தின் முதல் மகன் என்று போற்றப்படுகிற தகழியின் 'பெண் எனும் புதிர்'[40] புரட்சி எழுத்தாளர் பி. கேசவதேவின் 'ஒளிமயமான எதிர்காலம்'[41] மலையாள எழுத்தாளர்களில் கவிதை நயத்துடன் கதை சொல்ல வல்லவர்

எனப் பாராட்டப்படும் எஸ்.கே. பொற்றைக் காட்டின் 'தாய் உள்ளம்'[42] வேடிக்கையாகக் கதை சொல்வதில் நிகரற்றவர் எனப் புகழப்படும் வைக்கம் முகம்மது பஷீரின் 'நமது இதயங்கள்'[43] எம்.பி. நாராயணபிள்ளை யின் 'கலைந்த நிலா'[44] 1939 இல் 'திருமுல் காட்ச்' என்னும் நூலுக்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் பரிசுபெற்ற பொன்குன்னம் வர்க்கியின் 'ஏரின் ஓசை'[45] காரூர் நீலகண்ட பிள்ளையின் 'மரப்பாவைகள்'[46] ஆகிய கதைகள் கதிரில் வெளிவந்துள்ளன.

'பெண் எனும் புதிர்' கதையை ஆ. மாதவனும், 'ஒளிமயமான எதிர்காலம்' கதையை நாறும்பூ நாதனும் 'தாய் உள்ளம்' கதையைக் கோ. முருகேசனும் 'நமது இதயங்கள்' கதையைத் தி.வே. திருமாறனும், 'கலைந்த நிலா' கதையைச் சேரன் தம்பியும், 'ஏரின் ஓசை' கதையை நீல பத்மநாபனும் 'மரப்பாவைகள்' கதையை நகுலனும் தமிழில் தந்துள்ளனர்.

**உருவகம்**

'உருவகம்' தலைப்பில் வெளிவந்துள்ள 'காதலும் முடிவும்'[47] 'உழைப்பின் விலை'[48] 'மூன்று மேகங்கள்'[49] ஆகியவை நீதியைப் போதிக்கும் உருவகக் கதைகளாக இதழாசிரியர் ப. புகழேந்தியால் எழுதப்பட்டுள்ளன.

ஒரு ரோஜா மொட்டை வண்டு காதலிப்பதையும் அது மலர்ந்த பிறகு தேன்பருக வண்டு வந்தபோது அது ஒரு பெண்ணின் கூந்தலுக்குச் சொந்தமாகிப் போனதையும் விளக்குகிறது 'காதலும் முடிவும்'.

ஒரு காகமும் கோழியும் நட்பாய் இருப்பதையும் ஊரே அலைந்து இரை தேடிவரும் காகத்தைப் பார்த்து வீட்டிலிருந்தபடியே உண்டு கொழுத்த கோழி கேலி பேசுவதையும் பிறகு, கேலிபேசிய கோழியே ஒருநாள் வளர்த்தவனுக்கு உணவாகிப் போனதை எண்ணிக் காகம் கண்ணீர் வடித்ததையும் விளக்குகிறது 'உழைப்பின் விலை'.

தாகம் தீர்க்கும் தண்ணீருக்காகத் தவித்துக் கொண்டிருந்த மக்கள் மீது கருணை காட்டிய ஒரு மேகத்தையும் வாடிய பயிரைக் கண்டு வாடு கின்ற உழவனுக்காக இரங்கிய ஒரு மேகத்தையும் பிறந்த வீடான கடலின் மீதே கருணைகொண்ட இன்னொரு மேகத்தையும் உருவகப் படுத்தி இருக்கிறது 'மூன்று மேகங்கள்'.

**ஒரு காதல் கதை**

'ஒரு காதல் கதை' என்ற தலைப்பில் இதழுக்கு ஒன்றாக ஐந்து இதழ்களில் கதைகள் வெளிவந்துள்ளன. கன்னி மடத்திலே இருந்த பெண், கூரைவேலை செய்ய வந்த இளைஞன்மீது காதல் கொண்ட கதை[50] முடவனாகிப் போன காதலனை மாறா அன்புடன் மணம் செய்துகொண்ட

ஒரு காதலியின் கதை[51] வீட்டு வேலைக்காரன் தன்மீது விருப்பம் கொண்டுள்ளான் என்பதை வழக்கறிஞரிடம் விளக்கும் ஒரு இளம் பெண்ணின் கதை[52] முட்டையில் இருந்த முகவரியைப் பார்த்தே முட்டைக் கடைக்காரனைக் கைபிடித்த ஒரு மங்கையின் கதை[53] காதலித்து மீறிக் கைபிடித்தவர்கள் பின்னாளில் பிரிந்துவாழும் சோகக் கதை[54] எனக் கதைகள் அமைந்துள்ளன. ஐந்து கதைகளில் ஒன்றை ராஜநாராயணன் எழுதி இருக்கிறார். ஒன்றைத் தில்லை வில்லாளன் எழுதி இருக்கிறார். அரைப்பக்கக் கதையாகத் தொடங்கி முழுநீளச் சிறுகதையாக மாறிவந்துள்ள இப்பகுதியில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு காதலைச் சொல்லியிருக்கின்றன.

**கலை உலகம்**

கலை உலகம் பகுதி முழுவதிலும் திரைப்படம் தொடர்பான செய்திகள் இடம்பெற்றுள்ளன. இதழ் வெளிவந்த காலத்தில் தயாராகிக் கொண்டிருந்த - திரைக்கு வந்த திரைப்படங்கள், படப்பிடிப்பு நடக்குமிடம், நடிக - நடிகையர் - பாடலாசிரியர் - ஒளிப்பதிவாளர் - இயக்குநர் - தயாரிப்பாளர் போன்றோரின் விவரங்கள் பட்டியிலிடப்பட்டுள்ளன. மேலும், பிரிட்டிஷ் ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டின் சர்வதேசத் திரைப்பட விழா, நான்காவது சர்வதேச விவசாயத் திரைப்பட விழா மற்றும் இந்தியத் திரைப்பட விழா பற்றிய செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

“அன்பே வா, குழந்தையும் தெய்வமும், பூமாலை; நீலவானம், நீர்க்குமிழி, தாழாம்பூ, கலங்கரை விளக்கம், எங்க வீட்டுப் பெண், நான் ஆணையிட்டால், நொடி மலர், தேடிவந்த திருமகள், சித்தி, யார் நீ? மகாகவி காளிதாஸ்,[55] ஆனந்தி, நடு இரவில், தட்டுங்கள் திறக்கப்படும், நெஞ்சிருக்கும் வரை, பக்த பிரஹலாதா, அவன் பித்தனா? நாணல், ஞாயிறும் திங்களும்,[56] மோட்டார் சுந்தரம் பிள்ளை, செம்புலி வாண்டயான், கற்பகம், மணிமகுடம், எங்க வீட்டு மாப்பிளே, ஆசைமுகம், அண்ணாவின் ஆசை, மலையாளத்திலிருந்து தமிழுக்கு வந்த சகுந்தலா, சிலம்பொலி”[57] முகராசி, இரு வல்லவர்கள், இன்ப நிலா[58] ஆகிய படங்கள் பற்றிய செய்திகள் துணுக்குகளாக வெளிவந்துள்ளன.

**கவிதை**

திராவிட இயக்க இதழ் என்றாலே கவிதை இல்லாத இதழாக அது இருக்காது. அதற்குக் கதிரும் விதிவிலக்கல்ல. அந்தக் காலத்தில் வளரும் கவிஞர்களாக இருந்த சுரதா, வல்லம் வேங்கடபதி, குயிலன், மணிமொழி, ஆனந்தம் போன்றோரின் கவிதைகள் கதிரில் இடம்பெற்றுள்ளன.

> “உணர்ச்சிக் கவிதை என்று, எழுதுபவர்களாலே மட்டுமே சொல்லப்படுகிற - எந்த உருப்படியான உருவமும்

இல்லாத - பேத்தல்கள் எல்லாம் கவிதையல்ல. இன்னும் அவ்வளவு தூரத்துக்குத் தமிழ்மொழி வறண்டுவிட வில்லை" என்றும்

"கவிதைகள் என்ற பெயரில் பத்திரிகை அலுவலகத்தை முற்றுகையிடும் பலவற்றையும் பார்த்துவிட்டே இவ்வாறு எழுதவேண்டியிருக்கிறது. மன்னிக்க"[59]

என்றும் இதழாசிரியரே எழுதி இருப்பதால் அப்போது அரும்பத் தொடங்கியிருந்த புதுக்கவிதைமீது ஆசிரியருக்கிருந்த கோபமும் மரபுக் கவிதைமீது அவருக்கிருந்த மதிப்பும் வெளிப்படுகிறது. இருந்தாலும் கூடக் கவிதைக்கு இதழில் முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை.

### இலக்கியத் திறனாய்வு

'நாவல் கலையில் ஓர் அம்சம்'[60] என்ற தலைப்பில் க.நா.சு. எழுதிய கட்டுரையில், 'வேதநாயகம்பிள்ளை, ராஜமையர், மாதவையா, சி. சுப்பிர மணிய பாரதி, சங்கரராம், எஸ்.வி.வி.ஆர். ஷண்முகசுந்தரம், ந. சிதம்பர சுப்பிரமணியன், தி. ஜானகிராமன், ஹெப்ஸிபா ஜேசுதாசன் முதலியவர் களை இலக்கியக்கலை மரபைச் சேர்ந்தவர்களாகவும் பண்டித நடேச சாஸ்திரி, ஜே. ஆர். ரங்கராஜு, வடுவூர் துரைசாமி அய்யங்கார், கல்கி, லக்ஷ்மி, அகிலன், ஜெகசிற்பியன், சாண்டில்யன், முதலியவர்களைப் பொழுதுபோக்கு எழுத்தாளர்களாகவும் நான் கருதுவேன்' என்ற கருத்துக்கு 'எது இலக்கியம்?'[61] என்ற தலைப்பில் மறுப்பு எழுதியுள்ள சு.கோபாலகிருட்டிணன் 'பொழுதுபோக்கு' என்று ஆசிரியர் குறிப்பிடுவது கதையினைப் படிப்பவருக்கா அல்லது அதனை எழுதிய ஆசிரியருக்கா? கதையினைப் படிப்பவருக்கு, 'பொழுதுபோக்கு' என்று அமைந்தால் ஒருவகையில் அஃது நன்றே. மனித உள்ளம் பொழுது போக்கினைத் தான் நாடுகிறது. ஒருவர் எழுதிடும் கருத்துக்கள் அவரே படித்து மகிழ்ந்திட அல்ல என்பதனை உணர்தல் வேண்டும். எழுதப்படும் எழுத்தோவியங்கள் யாவும் மக்கள் அனைவரையும் மகிழ்விப்பதாயும் அதேநேரத்தில் நற்கருத்து கொண்டனவாயும் அமைதல் வேண்டும். மனித வாழ்வினைப் பயன்படுத்த அத்தகு எழுத்தாளன்தான் தேவை" என்ற செய்திகளும் கதிரில் வெளிவந்துள்ளன. இதைத் தவிர வேறு திறனாய்வுக் கட்டுரை எதுவும் கதிரில் இடம் பெறவில்லை.

### அன்டை இலக்கிய அறிஞர்கள் அறிமுகம்

'சமத்துவம்' என்ற உலகப்புகழ் பெற்ற உருவகக் கதைக்காக நோபல் பரிசு பெற்ற சோவியத் ரஷ்யாவின் மிகச்சிறந்த இலக்கிய ஆசிரியர் மிகாயில் ஷோலகாவ்,[62] இளவயது மணம், பொருந்தா மணம்,

தேவதாசிகள் நடனம் போன்ற சமூகக் கொடுமைகளை எதிர்த்துவந்த ஆந்திரத்தின் புகழ்பெற்ற சீர்திருத்தவாதி கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு[63] சாமான்யனின் உள்ள உணர்வுகளைப் படம்பிடிக்கும் மலையாளக் கவிஞர் குஞ்சன் நம்பியார்[64] தெலுங்கு இலக்கிய உலகின் புகழ்பெற்ற எழுத்தாளர் பாலகும்மி பத்மராஜு[65] ஆகியோரைப் பற்றிய அறிமுகங்கள் கதிரில் இடம் பெற்றுள்ளன.

## நூல் அறிமுகம்

1965 செப்டம்பர் 19ஆம் நாள் திருவனந்தபுரம் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற மலையாள இலக்கியக் கூடத்தில் மலையாள எழுத்தாளர் காரூரின் படைப்புகள் பற்றிய விமர்சனக் கூட்டம் நடைபெற்றதாகவும் அதில் காரூர் எழுதிப் படித்த 'மரப்பாவைகள்' சிறுகதையைப் பற்றி மலையாள இலக்கிய விமர்சகர்கள் தெரிவித்ததாகவும் பல கருத்துக்களை நகுலன் எழுதி இருக்கிறார்[66]

## நூல் விமர்சனம்

கதிரின் கடைசி இதழான நவம்பர் 1966 இதழில் கன்னட எழுத்தாளர் மாஸ்தியின் 'சுப்பண்ணா' என்ற குறுநாவலைக் க.நா.சு. விமர்சனம் செய்துள்ளார். 'தமிழில் வெளிவந்துள்ள பிற தென்னிந்திய மொழிப் புத்தக விமர்சனம் பகுதி இது' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டுள்ளது.[67]

## பொது

'தோட்டத்து மலர்கள்'[68] என்ற தலைப்பில் குழந்தைகள் பற்றிய தில்லை மறைமுதல்வனின் தொகுப்பு, மணிப்பிரவாள நடையிலமைந்த 'கன்னடியன் சண்டை'[69] கதை பற்றிய அறிமுகம், பெண்ணைப் பற்றி[70] மு.பாண்டியனின் தொகுப்பு, தாய்மொழியாம் தமிழ்மொழி, பயிற்சிமொழியாக 'என்ன செய்யலாம்?'[71] என்ற தலைப்பில் கி.ஆ.பெ. விசுவநாதம் எழுதியுள்ள கட்டுரை, குடும்பக்கட்டுப்பாட்டுப் பிரசாரம் உச்சநிலையில் இருந்த அந்தக் காலத்தில் 'ஆண்குழந்தை வேண்டுமா?[72] என்ற தலைப்பில் எஸ்.சி. இராமசாமி எழுதியுள்ள மருத்துவ விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட கட்டுரை, நகுலனின் புதிய கதை பாணியிலான 'அகம்',[73] நாவலர் நெடுஞ்செழியனின் 'நங்கையிடம் சிக்குண்ட நெஞ்சம்'[74] என்ற தலைப்பிலான நற்றிணைப் பாடல் காட்சி வாழ்க்கையைப் பற்றிய பலரின் கருத்துத் தொகுப்பாக முல்லை வழுதி எழுதியுள்ள 'எது வாழ்வு?'[75] மாஸேதுங்கிற்குப் பிறகு சீனாவின் அடுத்த பிரதமர் யாராக இருக்கக்கூடும்? என்பது பற்றிய ஓர் அரசியல் அலசல்[76] 'மனிதர்கள்'[77] என்ற தலைப்பில் செயற்கரிய செயல் செய்து குடியரசுத் தலைவரின் விருதைப் பெற்ற சிலரின் விவரம் இப்படிப் பல செய்திகள் வெளிவந்துள்ளன.

இவைபோக, சிந்திக்கத் தூண்டும் சின்னச் சின்னச் செய்திகளையும் துணுக்குகளையும் குட்டிக்கதைகளையும் 'கதிர்' வெளியிட்டுள்ளது.

'இலண்டனுக்குப் போயிருந்தாயே, அங்கே என்ன விசேஷம்' என்று கேட்டார் நண்பர்

குப்பைக்காரிகூட இங்கிலீஸ் பேசுகிறாள் என்று அதிசயித்தார் போய் வந்தவர்'[79]

ooo

'ஒரு பெண்ணை ஒட்டகம் என்று சொன்ன ஒரு வனுக்கு ஐந்து பவுன் அபராதம் விதித்தார் நீதிபதி'.

அபராதத்தைச் செலுத்திவிட்ட அவன், 'அதுசரி. ஒட்ட கத்தைப் பெண்ணே என்று அழைக்கலாமா?' என்று கேட்டான்.

'தாராளமாக' என்றார் நீதிபதி.

நீதிபதியை வணங்கிவிட்டுப் புறப்பட்ட அவன்,

அவளைப் பார்த்துச் சொன்னான்:

'போய் வருகிறேன் பெண்ணே!'[78]

ooo

மதுக்கடையிலிருந்து வெளியில் வந்த ஒருவன், எதிரில் கடிகாரம் கட்டிக்கொண்டு வந்த ஒருவனைப் பார்த்து 'மணி என்ன?' என்று கேட்டான்.

'ஐந்து' என்றான் கடிகாரம் கட்டியிருந்தவன்.

'அதுதானே கேட்டேன்' என்ற குடிகாரன் தொடர்ந்து சொன்னான்: 'ஒரு மணி நேரத்துக்கு முன்னால் ஒரு வனை மணி கேட்டேன் . அந்த முட்டாள் 'நான்கு மணி' என்றான்!'[80]

இப்படிச் சுவைத்து மகிழத்தக்க எராளமான துணுக்குகள் இடம் பெற்றுள்ளன.

### அட்டைப்படம்

உயர்ந்த அச்சுத்தரத்தில் வெளிவந்த கதிரிலும் பெண்ணின் படமே அட்டைப்படமாக வெளியிடப்பட்டுள்ளது. முதல் இதழ் நீங்கலாக மற்ற

இதழின் அட்டைப் படங்கள் நடிகைகளின் படங்களாக இருந்தாலும் புகைப்பட நுட்பமும் அழகும் பொலிவும் நிறைந்த படங்களாக அமைந் திருப்பது அட்டை வடிவுக்குத் தனி அழகு சேர்க்கிறது. 1966 ஜனவரி பொங்கல் இதழில் ஓவியமன்னர் எனப் புகழப்பட்ட கே. மாதவனின் முகப்போவியம் மனத்தைச் சுண்டி இழுக்கும் வண்ண ஓவியமாய் அமைந் திருப்பது பார்த்துப் பார்த்து ரசித்து மகிழத்தக்கது. இதழின் பின்னட்டை யில் எல்லா இதழ்களிலும் விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. உள்ளட் டைகளில் ஒரு சில இதழ்களில் விளம்பரமும் ஒரு சில இதழ்கள் விளம் பரம் இன்றியும் அச்சிடப்பட்டுள்ளன.

மிகச்சாதாரண அச்சாக்கமுறை நடைமுறையில் இருந்த அந்தக் காலத்தில், உள்ளடக்க வடிவமைப்புக்கு அதிக முக்கியத்துவம் கொடுத் திருப்பது பார்த்து வியக்கத்தக்க வகையிலும் படிக்கத்தூண்டும் வகையிலும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இதழின் உள்ளே இடம் பெற்றிருக்கும் படங்கள் எல்லாம் வெளிச்சப்பொலிவோடு அமைந்திருப்பது அச்சின் தரத்தையும் தொழிலின் மேன்மையையும் வெளிப்படுத்துகிறது.

### வெளிவராதவை

இலக்கியத் திறனாய்வாக வெளிவந்த 'திரு.க.நா.சு.வின் கருத்துக் களுக்கு மறுப்பாகப் பல கட்டுரைகள் வந்துள்ளன. அவற்றில் ஒன்று இந்த இதழில் வருகிறது' என்று டிசம்பர் 1965 இதழில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதன்பிறகு வந்த எந்த இதழிலும் வேறெந்த மறுப்புக் கட்டுரையும் வெளி யாகவில்லை. மேலும் அதன்பிறகு கதிரில் திறனாய்வுக் கட்டுரைகளே வரவில்லை.

அதைப்போலவே, 'இடமின்மையால் கப்பலோட்டிய தமிழன் வ.உ.சி. பற்றிய 'பொன்னேடுகள்' வரவில்லை. பின்னர் வரும்' என 1965 டிசம்பர் இதழில் ஆசிரியர் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ளது. அதன் பிறகு நான்கு இதழ்கள் வெளிவந்தும் அவை வெளியிடப்படவில்லை.

'விரைவில் கதிரில் கவியரங்கப் பகுதியொன்றைத் துவங்கவிருக் கிறோம்'.

'இந்தப் பகுதியில் கூடுமானவரை புதிதாகக் கவிதை எழுதுபவர் களை மட்டுமே அறிமுகப்படுத்துவது என்றிருக்கிறோம்' என 1966 ஏப்ரல் இதழில் அறிவிக்கப்பட்டுள்ளது. ஆனால் ஏப்ரல் இதழையடுத்து நவம்பர் மாதம்தான் இதழ் வெளிவருகிறது. அதில் 'கவியரங்கம்' இடம்பெற வில்லை. இதழும் அதோடு நின்றுவிட்டது.

## தொடர் போராட்டம்

1965 டிசம்பர் இதழில், 'இந்த இதழ் மிகவும் தாமதமாக வருகிறது. பத்திரிகைக் காகிதம் கிடைப்பதில் ஏற்பட்டுள்ள சிக்கல்களும் அச்சக மின்விசைக்கு ஏற்பட்டுவிட்ட கட்டுப்பாடும் வேறு சில காரணங்களும் இதழைத் தாமதப்படுத்திவிட்டன.

சிறிது நேரங் கடந்தது என்பது தவிர விருந்தில் குறையில்லையாத லால் நண்பர்கள் அவ்வளவாகப் பொருட்படுத்த மாட்டார்கள் என்று நம்பு கிறேன். அடுத்த இதழ் பொங்கலன்று சிறப்பிதழாக வெளிவரும்' எனவும்,

அதைத் தொடர்ந்து, 'பிப்ரவரி முதல் ஒவ்வொரு 'கதிர்' இதழும் மாதத்தின் தொடக்க நாட்களில் நிச்சயமாக வரும் என்பதை நண்பர்கள் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்' எனவும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

1966 பிப்ரவரி இதழில், 'கதிர்' ஐந்தாவது இதழ் இது.

> 'காலம் தவறி வருகிறது என்ற குறைபாட்டைத் தவிர்க்க எவ்வளவோ சிரமங்களுக்கு மத்தியிலும் முயன்று வரு கிறோம்.
>
> எப்படியும் ஒன்றிரண்டு இதழ்களில் 'கதிர்' இந்தக் குறையை நிவர்த்தி செய்துவிடும்' எனவும் கூறப்பட் டுள்ளது.
>
> மேலும், 'கதிர் இரண்டாம் ஆண்டின் முதல் இதழ் இது. 'முறையாக வருவதில்லை என்ற குறை தவிர, தரத் திலும் அழகிலும் குறைசொல்ல முடியாத வழக்கமான கதிராகவே இதுவும் திகழ்கிறது.'

இப்போதுள்ள விலைவாசி காரணமாகவும் மேலும் தரவேண்டும் என்ற ஆசையுடனும் பக்கங்களைக் கூட்டி அடுத்த இதழ் முதல் 50 காசாக உயர்த்தத் தீர்மானித்துள்ளோம் என 1966 நவம்பர் இதழில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

கடைசிவரை இத்ழை நிறுத்தாமல் தொடர்ந்து வெளிக்கொணர் வதிலேயே ஆசிரியர் ஆர்வம் காட்டியிருக்கிறார் என்பதை அவருடைய எழுத்தின் மூலமே அறிய முடிகிறது.

எனினும், கதிருக்கு இலக்கிய நண்பர்களிடையே வரவேற்பு இருந்த அளவுக்கு, ஆதரவு இல்லாமல் போனதால் அதன்பிறகு 'கதிர்' வரவே இல்லை என்று கருத இடமுண்டு.

3000 பிரதிகள் அச்சிட்டு வெளிவந்த கதிர் கடைசியில் 1000 பிரதிகளோடு நின்று போனது. திராவிட இலக்கிய வளர்ச்சிக்கு முனைப்பாகவும் தொலைநோக்குடனும் பாடுபட்ட இவ்விதழ் தொடர்ந்து வெளிவர இயலாமல் போனது திராவிட இலக்கிய வளர்ச்சிக்குப் பேரிழப்பு என்றே சொல்லலாம்.

'ஐந்து கார்கள் அல்ல; பத்துக் கார்கள் அல்ல இருபது கார்கள், ஒரு கிலோ தங்கம் ஒரு லட்சம் பேருக்குப் பரிசுகள்' என்று தமிழ்ப் பத்திரிகைகளெல்லாம் பரிசுச் சீட்டுகளாக மாறிப்போய்விட்ட விளம்பர இரைச்சல்களுக்கிடையே திராவிட இயக்க இதழ்களைத் திருப்பிப் பார்த்துக் கொண்டிருப்பது மனங்கொளத் தக்கது.

## குறிப்புகள்

1. திராவிட இயக்க இதழ்கள், முனைவர் ச. மெய்யப்பன், புலவர் தமிழ்ப்பித்தன், ப. 10
2. மேலது பக். 10 - 11
3. மேலது ப. 10
4. மேலது 14
5. மேலது 15
6. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 2
7. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 2
8. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 6
9. கதிர் மலர் 1 இதழ் 2 பக். 10 - 11
10. கதிர் மலர் 1 இதழ் 5 ப. 5
11. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 33
12. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 37
13. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 58
14. கதிர் மலர் 1 இதழ் 2 பக். 59 - 60
15. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 31
16. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 10
17. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 12
18. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 5
19. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 6
20. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 15
21. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 17
22. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 61

23. கதிர் மலர் 1 இதழ் 5 ப. 13
24. கதிர் மலர் 1 இதழ் 6¬7, ப. 5
25. கதிர் ஆண்டு2 இதழ்1 ப. 4
26. கதிர் ஆண்டு2 இதழ் 1 ப. 49
27. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 23
28. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 23
29. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 19
30. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 23
31. கதிர் மலர் 1 இதழ் 5 ப. 23
32. கதிர் மலர் 1 இதழ் 6¬7,ப. 17
33. கதிர் ஆண்டு2 இதழ் 1 ப. 27
34. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 38
35. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 36
36. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 33
37. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 49
38. கதிர் மலர் 1 இதழ் 5 ப. 33
39. கதிர் மலர் 1 இதழ் 6¬7 ப. 41
40. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 49
41. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 49
42. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 49
43. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 71
44. கதிர் மலர் 1 இதழ் 5 ப. 49
45. கதிர் மலர் 1 இதழ் 6¬7 ப. 51
46. கதிர் ஆண்டு 2 இதழ் 1 ப. 37
47. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 20
48. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 44
49. கதிர் மலர் 1 இதழ் 6¬7 ப. 35
50. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 45
51. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 40
52. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 67
53. கதிர் மலர் 1 இதழ் 5 ப. 12
54. கதிர் ஆண்டு 2 இதழ் 1 ப. 49
55. கதிர் மலர் 1 இதழ் 1 ப. 60 - 63
56. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 61 - 63

57. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 63 - 64
58. கதிர் மலர் 1 இதழ் 5 ப. 62 - 64
59. கதிர் மலர் 1 இதழ் 6 -7 ப. 3
60. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 33
61. கதிர் மலர் 1 இதழ் 3 ப. 47
62. கதிர் மலர் 1 இதழ் 2 பக். 46 - 48
63. கதிர் மலர் 1 இதழ் 3 பக். 58 - 60
64. கதிர் மலர் 1 இதழ் 5 பக். 54 - 60
65. கதிர் ஆண்டு 2 இதழ்1 பக். 15 - 26
66. கதிர் மலர் 1 இதழ் 6-7 பக். 49 - 60
67. கதிர் ஆண்டு 2 இதழ் 1 பக். 33 - 36
68. கதிர் மலர் 1 இதழ் 1 பக். 15 - 22
69. கதிர் மலர் 1 இதழ் 1 பக். 45 - 48
70. கதிர் மலர் 1 இதழ் 3 பக். 41 - 43
71. கதிர் மலர் 1 இதழ் 4 பக். 79 - 80
72. கதிர் மலர் 1 இதழ் 5 பக். 41 - 48
73. கதிர் மலர் 1 இதழ் 4 பக். 44 - 48
74. கதிர் மலர் 1 இதழ் 5 பக். 6 - 12
75. கதிர் மலர் 1 இதழ் 6-7பக். 37 - 39
76. கதிர் மலர் 1 இதழ் 6-7பக். 63 - 64
77. கதிர் ஆண்டு 2 இதழ் 1 பக். 47 - 48
78. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 10
79. கதிர் மலர் 1 இதழ் 2 ப. 42
80. கதிர் மலர் 1 இதழ் 4 ப. 56 நம் நாடு

# இதழாளர் பாரதிதாசன்

## பி.எல். இராசேந்திரன்

**வண்ணப் பாடல்**

1891 ஏப்ரல் 29இல், புதுவையில் கனகசபை - இலக்குமி அம்மாள் தம்பதியருக்கு மகனாகப் பிறந்து, தமிழறிவோடு வளர்ந்து, இளமைக் காலத்தில் திரு. வி. க. அவர்களால் 'தமிழ்க்கடவுள்' என்று அடையாளம் காட்டப்பட்ட முருகப்பெருமான்மீது பெரும்பக்தி கொண்டு, அருணகிரி நாதரின் திருப்புகழைச் சுவைத்துப் படித்து,

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபரன்
– என ஓதும்...

என்பன போன்ற பாடல்களையெல்லாம் இதயபூர்வமாக இனிக்க இனிக்கப் பாடி, 'ஏன் நாமும் அப்படியெல்லாம் வண்ணங்கள் எழுதக்கூடாது?' என்கிற வினாவைத் தமக்குத் தாமே எழுப்பிக் கொண்டு

மயிலா சனத்து முருகா எனக்கு
வரமே யளிக்க நினையாயோ!
மயலார் தடக்கண் மடவார் தனத்தில்
மனதே செலுத்தி அழியாமே
வெயிலே துடித்த புழுவாகி நித்தம்
விஷயா திகட்குள் உழலாமே
விரைவே சுழற்று நமனார் கயிற்றை
உடலோடு சுற்றி அழையாமே
மயில்மே லினிக்க வருவாய் சுரர்க்கின்
னமுதே பரைக்கு மகனே நீ?
மலரே நிகர்த்த பதநீ ழலுக்குள்
வகையே சுசிக்க அருள் தாராய்!

வயவே லெடுத்த அறுமா முகத்து
வலனார் புயத்து மகிபாசீர்
வணமார் கொடிக்கன் மகவான் மகட்கண்
விளையாடி யிக்கண் வருவாயே!
– மயிலம் சுப்பிரமணியர் துதியமுது

என்றெல்லாம் ஸ்ரீமயிலம் சுப்பிரமணியர் துதியமுது இயற்றி வெளியிட்டு இன்புற்று வந்தவர்தான் 'கனகசுப்புரத்தினம்' ஆகிய பாவேந்தர் பாரதிதாசன்.

### கவிதா மண்டலம்

'ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதாமண்டலம்' பத்திரிகையைப் பாரதி எண்ணப்படி வெளியிடுவது என்று தொடங்கி நடத்துவதில் முனைந்து நின்றபோது, 'தமிழுக்குத் தொண்டு செய்வதுதான் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம் மேற்போட்டுக்கொண்ட வேலை' என்றெழுதினார் புரட்சிக்கவிஞர்.

1906இல் பாரதியாரின் கனல் தெறிக்கும் படைப்புகளோடு வெளி வந்த 'இந்தியா' ஏட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த பாவேந்தர், 'ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதாமண்டலம்' மாத இதழ் நடத்துவதை மிகவும் பெருமையாகக் கருதினார். தனி இதழ் 4 அணா; ஆண்டுச் சந்தா ரூ.3/-

நல்ல தாளில் வெளியிடப்பட்ட இந்த ஏட்டில் சில விளம்பரங்களும் இடம் பெற்றிருந்தன. ஒரு முழுப்பக்க விளம்பரம் செய்ய ஒரு தடவைக்கு ரூ.20; அரைப்பக்க விளம்பரத்திற்கு ரூ.10; கால் பக்கத்திற்கு ரூ.5 என விளம்பரப்படுத்தப்பட்டிருந்தது.

துணுக்குகள், மதிப்புரை எல்லாம் இருந்த இந்த ஏட்டின் மூலம் பாவேந்தர் தியாகராஜர் கீர்த்தனங்களைத் தமிழாக்கம் செய்து வெளியிட்டுத் தம்மை ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளராகவும் காட்டிக் கொண்டார். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, சுத்தானந்த பாரதி போன்றோரும் இதில் எழுதிவந்தனர்.

இதழ் பற்றிய விவரம் (Imprint) கடைசிப்பக்கத்தில் ஆங்கிலத்தில் - printed and Published by R. Subarayan at Saigon Sinnayah Press, Pondicherry என வெளியிடப்பட்டிருக்கிறது.

1935இல் தொடங்கப்பட்ட இந்த மாத இதழ், ஏழே இதழ்களுடன் (பங்குனி – புரட்டாசி) நிறுத்தப்பட்டது.

காரிருள் அகத்தில் நல்ல
கதிரொளி நீதான்! இந்தப்

பாரிடைத் துயில்வோர் கண்ணில்
பாய்ந்திடும் எழுச்சி நீதான்!
ஊரினை நாட்டை இந்த
உலகினை ஒன்று சேர்க்கப்
பேரறி வாளர் நெஞ்சில்
பிறந்தபத் திரிகைப் பெண்ணே!...

எனப் பத்திரிகையைப் பாவேந்தர் ஒரு பெண்ணாக உருவகப்படுத்திப் போற்றிப் புகழ்ந்து பாடியது இந்த ஏட்டில்தான்.

அறிஞர்தம் இதய ஓடை
ஆழநீர் தன்னைமொண்டு
செறிதரும் மக்கள் எண்ணம்
செழித்திட ஊற்றி ஊற்றிக்
குறுகிய செயல்கள் தீர்த்துக்
குவலயம் ஓங்கச் செய்வாய்
நறுமண இதழ்ப் பெண்ணே! உன்
நலம்காணார் ஞாலம் காணார்!...

என்றெல்லாம் பத்திரிகை படியாதவர்கள், உலக நடப்புகளை அறியாதவர்கள் என்று அவர் ஆணித்தரமாக எழுதிய அறுசீர் விருத்தம் வெளிவந்தது, 'ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதாமண்டலம்' இதழிலேதான்!

தமிழுண்டு தமிழ்மக்கள் உண்டு – இன்பத்
தமிழுக்கு நாளும்செய் வோம்நல்ல தொண்டு
தமிழ்என்று தோள்தட்டி ஆடு – நல்ல
தமிழ்வெல்க வெல்க என் றேதினம் பாடு!

போன்ற அற்புதக் கவிதைகளும் அந்த ஏடு மூலம்தான் நமக்குக் கிடைத்தன.

### *புதுவை முரசு*

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் இளமைக் காலம் தொட்டே எழுத்திலும் பேச்சிலும் வல்லவராகத் திகழ்ந்தார். பிறந்த நாள், மணநாள் விழாக் காணும் தம் நண்பர்களுக்கெல்லாம் வாழ்த்தனுப்பி மகிழுவது அவர் குணம். பிறருக்காக என வந்து கேட்போருக்கும் இனிய தமிழிலே எழுதியுதவுவார்.

அவர் இளைஞராக இருந்தபோது நம் இந்திய நாட்டிலே குறிப்பாகத் தமிழகத்திலே மூண்ட சுதந்திரத்தீயின் அனல், புதுவையிலும் வீசியது. அது குறித்தும் இன்னபிற சமுதாயப் பிரச்சினைகள் குறித்தும் அவ்வப்போது அவர், தம் எழுத்துச் சாட்டையைச் சொடுக்கியது உண்டு.

சுதேசமித்திரன், ஜனவிநோதினி, புதுவை கலைமகள், ஆனந்த போதினி, ஆத்மசக்தி, தாய்நாடு, தேசபக்தன், தேசசேவகன், ஸ்வராஜ்யா, தேசோபகாரி, புதுவை அரசு - போன்ற ஏடுகள் புரட்சிக் கவிஞரின் எழுத்துக்களை அவ்வப்போது வெளியிட்டுப் பெருமை பெற்றன.

தந்தை பெரியாரின் தொடர்பு கிடைத்த பின்னாலேதான் அவருடைய மனத்திலும் தன்மானச் சிறுத்தை தலைதூக்கியது; ‘குடியரசு’ ஏட்டிலும் அது தன் தடம் பதித்தது. பாரதியாரின் ‘இந்தியா’ ஏட்டினைக் கண்ட போதெல்லாம் அவர் நெஞ்சில் விழுந்த தீப்பொறியானது இந்தச் சந்தர்ப் பத்திலேதான் ‘ஏன் நாமே ஓர் ஏடு தொடங்கக்கூடாது?’ என்கிற பெரு நெருப்பாக அவருடைய நெஞ்சில் பற்றி நினைவில் படர்ந்தது. ஆனால் அப்போது அவர் தமிழாசிரியராக அரசுப்பணி புரிந்துவந்த காரணத்தாலே, அந்த எண்ணத்தை நிறைவேற்றுவதிலே நெருடல் ஏற்பட்டது. இதனால் அவர் அமைதி கொண்டுவிட்டாரா என்றால், அதுதான் இல்லை!

**மரமும் வேரும்**

இதற்கிடையில் ‘புதுவை முரசு’ என்ற பெயரில் கையெழுத்து ஏடு ஒன்றினை அவ்வப்போது உருவாக்கித் தனிச்சுற்றுக்கு விட்ட ‘அரிச்சுவடி அனுபவமும்’ அவருக்கிருந்தது என்ன நடந்தாலும் சரி என்ற துணிவில் தம்போலும் தன்மான இயக்கத்தோழர்களான ம. நோயேல், லகாஷ் ஆகிய இருவரோடும் சேர்ந்து, அதே பெயரில் 1930இல் ஏடொன்றினை வார ஏடாக வெளிக்கொணரப் புதுவையிலிருந்த பிரஞ்சிந்திய அரசிடம் முறைப் படி அனுமதியும் பெற்றார். அதைப் பொறுப்பாசிரியராக இருந்து கவனித்து வெளியிடும் இடத்தில் பாவேந்தரால் நோயேல் அமர்த்தப்பட்டார்.

‘சுயமரியாதைக் கொள்கையை, பிரஞ்சிந்தியாவுக்கு வேண்டிய திருத்தங்களுடன் பிரஞ்சிந்திய மக்களுக்குப் பரப்புவதே இவ்விதழின் நோக்கம்’ என்றும் ‘குறிப்பாகச் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற கொள்கைகளுக்குப் பாடுபடும்’ என்றும் 10. 11. 1930இல் வெளியான முதலாவது புதுவை முரசிலேயே அது தொடங்கப்பட்டதன் குறிக்கோள் தெரிவிக்கப்பட்டிருந்தது. பெயரளவில் க. இராமகிருட்டிணன் என்பவரே அதன் ஆசிரியர் என வெளியுலகிற்குக் காட்டப்பட்டார். ஆனால் புரட்சிக் கவிஞரே அந்த ஏட்டின் மறைமுக ஆசிரியராக இருந்தார். அதாவது மரம் வெளியே தெரியும். ஆணிவேர் தெரியாதல்லவா? அப்படி!

நோயேலுக்குப் பிறகு பாவேந்தராலேயே கவிஞர் புதுவை ச. சிவப் பிரகாசம் அந்த ஏட்டின் பொறுப்பாசிரியர் பதவியில் அமர்த்தப்பட்டார்.

கத்தோலிக்க மதத்தை மாற்றுக்குறைத்தாற்போல் இரண்டு மூன்று கட்டுரைகள் அதில் இடம்பெறப்போய் அரசு பலம் பெற்றிருந்த சில

கத்தோலிக்க மதத்தினர் நோயேல்மேல் வழக்குப்போட்டு ஜெயித்தார்கள். இதன் காரணமாகவே சிவப்பிரகாசம் அந்தப் பொறுப்புக்கு வந்தார்.

புதுவை முரசில் தலையங்கம், கவிதைகள், கட்டுரைகள், துணுக்குச் செய்திகள், உள்நாட்டு விவகாரங்கள் புதுநடைத் தமிழில் பொலிந்திடலாயின. அவை ஒவ்வொன்றிலும் படைப்பாளராகக் கே.எஸ்.ஆர்., கிறுக்கன், கண்டெழுதுவோன், கிண்டல்காரன், கே.எஸ். நாடோடி, அடுத்த வீட்டுக்காரன், சுயமரியாதைக்காரன், வழிப்போக்கன் எனப் பல பெயர்கள் போடப்பட்டிருந்தன. அவர்களெல்லாம் வேறு யார்யாரோ அல்ல; புரட்சிக்கவிஞரே அத்தனை அவதாரங்களையும் எடுத்த மொத்த உருவமாவார்!

### ஆசிரியர் குத்தூசியார்

நாளடைவில் குத்தூசி எஸ். குருசாமியும், இந்தப் புதுவை முரசு ஆசிரியராகப் பெயரளவில் இருந்தார். 'கிண்டல்காரன்' என்ற பெயரில் பாவேந்தர் எழுதிய நூல் ஒன்று 'புதுவை முரசு ஆசிரியர் திரு. எஸ். குருசாமி பி. ஏ. அவர்களுக்கு ஸமர்ப்பணம்' என்ற குறிப்போடு அந்நாளில் வெளியிடப்பட்டது.

ஐந்தாவது மாத காலத்தோடு குத்தூசி குருசாமி பெயரும் அந்த ஏட்டிலிருந்து விடைபெற்றது.

11.5.1931 புதுவை முரசில் - 'எஸ். குருசாமி அவர்களுக்குத் தனிப்பட்ட கடிதங்கள் 7 - 240, நந்தி வடவார் தெரு, ராஜ மகேந்திரபுரம் என்ற முகவரிக்கு அனுப்பவேண்டும். கட்டுரைகள், கவிதைகள் போன்றவைகள் புதுவை முரசு அலுவலகத்திற்கே அனுப்ப வேண்டும்' என்று காணப்படும் விளம்பரமே அதை நமக்குத் தெரிவிக்கிறது.

தமிழ்நாட்டிலே உள்ள குத்தூசி குருசாமி அவர்கள் பிரஞ்சிந்தியாவிலிருந்து வெளியாகும் ஏட்டினுக்கு எப்படி ஆசிரியராக இருக்கமுடியும் என்ற வினா எழக்கூடும் என்பதாலேயே அவர் விடுவிக்கப்பட்டிருப்பார் போலும்!

20 பக்கங்கள் கொண்டதாக 9½ x 7 என்ற அளவில் வெளிவந்தது புதுவை முரசு வார இதழ். ஒரு தனி இதழ் விலை ஓரணா, ஆண்டுச் சந்தா ரூ.3.

அரசுப் பணியிலிருந்த பாவேந்தரால், இந்த ஏட்டின் வளர்ச்சியில் தொடர்ந்து கவனம் செலுத்த முடியாததனாலோ என்னவோ, 10.11.1930இல் தொடங்கப்பட்ட புதுவை முரசின் ஒலி, 14. 3. 1932 உடன் நின்றுவிட்டது!

### முல்லை

சென்னை பிராட்வேயிலிருந்து 1946 ஜனவரி முதல், மாத இதழாக வெளிவந்தது 'முல்லை' இதழ், இதன் விலை நான்கணா.

இலக்கியம் மணக்கும் இந்த இதழில் 'ஆதரவாளர் கவியரசர் பாரதி தாசன்' என்று குறிப்பிடப்பட்டிருந்தது. இதன் பதிப்பாளர் ப. முத்தையா அவர்களாவார்.

பாவேந்தர், தேசிகவிநாயகம் பிள்ளை, நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை, ச. து. சு. யோகியார் ஆகிய நால்வருமே அந்நாளில் நாடறிந்த கவிஞர்களாகத் திகழ்ந்து வந்தனர். இவர்களுள் பாவேந்தர் பாரதிதாச னாரின் தமிழ் மணம், 'முல்லை' இதழின் மணத்தை மேலும் மேம்படுத்து வதாக இருந்தது.

'வடலூர் வள்ளலாருக்கு ஒரு தொழுவூர் வேலாயுத முதலியார் கிடைத்ததைப் போன்று பாவேந்தருக்கு ஒரு முல்லை முத்தையா கிடைத் தார்' என்று அவ்விதழின் பொறுப்பாளரைப் பற்றி உவமைக் கவிஞர் சுரதா வியந்து பாராட்டுவார்.

முல்லைப் பதிப்பகத்தின் முதல் வெளியீடே பாவேந்தர் படைப்பான 'அழகின் சிரிப்பு' தான் என்பது குறிப்பிடத்தக்கது.

'தமிழின்பமே முல்லையின் குறிக்கோள். முல்லையில், சிறப்பாக நம் கவியரசர் அவர்களின் கவிதைகளும் அவர்களைப் பற்றிய கருத்துக் களும் முகிழ்த்து மணம் தரும். தமிழ் ஆக்கம் ஒன்றே முல்லையின் நோக் கம்..' - என்றெல்லாம் அந்த இதழின் குறிக்கோள் தெரிவிக்கப்பட்டிருந்தது.

அதேபோல திரு.வி.க., அறிஞர் அண்ணா, புதுமைப்பித்தன், தண்டபாணி தேசிகர் போன்றோரும் அதில் எழுதி வந்தார்கள். எனினும் ஆறாவது இதழுடன், புரட்சிக்கவிஞருக்கும் இதழ்ப் பொறுப்பாளருக்கும் ஒத்துவராமையால் முல்லையும் நின்றுபோயிற்று.

### கூவத் தொடங்கியது குயில்

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம், புதுவை முரசு, முல்லை ஆகியவற்றுக்குப் பிறகு 1946இல்தான் பாவேந்தரின் 'குயில்' ஏடு சிறகடிக்கத் தொடங்கியது. ஆனால் 'குறுகுறு நடந்து சிறுகை நீட்டி, இட் டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்', தெம்போடு நடக்க அந்த ஏடு பட்ட பாடு 'தாளம் படுமோ, தறிபடுமோ' என்ற நிலைமையில்தான் இருந்தது.

இதனாலேயே அந்தக் குயில் எப்போது தலைதூக்கியது - மண்டி யிட்டது - தெம்போடு நடக்க அல்லது பறக்கத் தொடங்கியது என்பதை யெல்லாம் தெளிவாகத் தெரிவிப்பதில் சில கோளாறுகள்.

குயில் இதழ் எப்போது புரட்சிக் கவிஞரால் தொடங்கப்பட்டது என்கிற கேள்வி எழுவதாக வைத்துக்கொள்ளுங்கள். அதற்கு 1946ஆம்

ஆண்டில் 'குயில்' திங்கள் ஏடாகத் தொடங்கப்பட்டது; பிறகு அது நிறுத்தப் பட்டு 'ஒரு பெயர்ப்பன்னூலானது' 1947இல் வெளிவந்தது; பிறகு 1948இல் சில காலம் நாள் ஏடாக நடத்தப்பட்டது. அதன்பின் 2.6.1958இல் கிழமை ஏடாகி இரண்டாண்டுக் காலத்திற்கு மேல் வெளிவந்தது. அதற்குப் பின்போ, சென்னையிலிருந்து 1962இல் திங்கள் இருமுறை ஏடாகச் சில காலம் வெளியிடப்பட்டது என்று இரத்தினச் சுருக்கமாகப் பதில் சொல்லி விடலாம்.

அந்த நிதியளிப்புக் குழுவின் செயலாளராக இருந்த முல்லை முத்தையா, டி. என். இராமன் ஆகியோர் சம்மதத்தோடு ஒரு திங்கள் இதழ் வெளியிட முடிவெடுக்கப்பட்டது. இதற்கெனச் சென்னை திருவல்லிக் கேணியில் இப்போது பாரதி சாலையாக மாறியுள்ள பைகிராஃப்ட்ஸ் சாலை 58ஆம் எண் கட்டடத்தில் ஓர் அறை வாடகைக்குப் பிடிக்கப்பட்டது.

புதுவைப் புலவர் ப. சுந்தரவேலனாரிடமிருந்து வாங்கப்பட்ட அச்சு இயந்திரம் மூலம் குயில் ஏடு, கரும்புநிகர் கவிதைகளோடு சிங்காரமாகச் சிறகடிக்கலாயிற்று. 52 பக்கங்களோடு வெளிவந்தது இக்குயில்.

குயில் அங்கேதான் அச்சிடப்பட்டது. தனிப் படி விலை 8 அணா; வெளிநாடுகளுக்கு 10 அணா. இவ்விதழின் ஆசிரியர் பாவேந்தர் பாரதி தாசன். டி. என். இராமன் நிர்வாக ஆசிரியர். குயில் நிலையம், திருவல்லிக் கேணி, சென்னை - 14 என்று கடைசிப் பக்க முகவரி இருந்தது.

**செந்தமிழ் நாடு சிறப்புறுதல் வேண்டுமெனில்**
**நந்தமிழ் நாம்மீட்ட வேண்டுமன்றோ – முந்தாத**
**நெஞ்சும் விழியும் நிலைகண் டெழும் வண்ணம்**
**கொஞ்சும் நமது குயில்**

என்கிற வெண்பாவில் தொடங்கி,

**செந்தமிழ்நாட் டாட்சிபெற்றுச் செம்மைத்திராவிடத்தில்**
**முந்தும் குறைகள் முடிக்கோமோ – வந்துநமைச்**
**சீறும் பகைவர்க்குச் செந்தமிழர் கைத்திறத்தைக்**
**கூறும் நமது குயில்!**

என்கிற வெண்பா ஈறாகப் பத்து வெண்பாக்களில் இதழின் நோக்கம் அதில் புரட்சிக் கவிஞரால் தெரிவிக்கப்பட்டிருந்தது.

என்ன இருந்து என்ன? புரட்சிக் கவிஞருக்கும், டி.என்.இராமனுக்கும் ஏற்பட்ட உரிமைப் பிரச்சினை காரணமாக - அதற்கும் தனக்கும் இனிச், சம்பந்தமில்லை என்ற புரட்சிக்கவிஞர் அறிவிப்போடு இந்த முதல் குயில் நின்றுபோய்விட்டது!

## ஒரு பெயர்ப்பன்னூல்

பிறகு, ‘ஒரு பெயர்ப்பன்னூல்’ என்பதாக, 1.6.1947 முதல் திங்கள் இதழாக வந்தது. முதல் இதழ் சென்னையிலிருந்தும் புதுக்கோட்டை, செந்தமிழ் அச்சக முகவரியோடு இரண்டாவது இதழும் அச்சாகி வெளி வந்தன.

ஆசிரியரும் வெளியிடுபவரும் பாரதிதாசன்; பொறுப்பாளர் சு. மன்னர் மன்னன் என்று விவரம் தெரிவிக்கப்பட்டிருந்தது.

டெம்மி அளவிலும் கிரவுன் அளவிலும் மாறி மாறி வெளிவந்த இக்குயில், ஒரு பெயர்ப்பன்னூல், 20 பக்கங்களிலும் 28 பக்கங்களிலும் 48 பக்கங்களிலும் என வெளிவந்தது. இதேபோல்தான் விலையும் முதல் இதழ் ஒரு ரூபாய்; பிறகு ஆறு அணா.

குயில் ஒரு பெயர்ப்பன்னூலின் முதல் இதழின் முகப்போவியத்தில் தக்க பக்கவாத்தியங்களோடு அழகரசியொருத்தி தனக்கேற்ற இளைஞ னோடு நடனமாடுவாள். ‘ஆடவந்தாள்’ என்பது அந்த வண்ண ஓவியத் திற்கான கவிதைத் தலைப்பு.

அவன் :

ஆடற்கலைக்கழகு தேடப்பிறந்தவள்
ஆடாத பொற்பாவை ஆடவந்தாள்
என்னோ டாடவந்தாள்
மகிழ்ந்தாட வந்தாள்!

வாடாத தாமரைக்கை
வானில் ஒளிதெறிக்க
மங்காத செங்காந்தள்
விரல்கள் பொருள்குறிக்க

– ஆடல்....

என்று செல்லும் அந்த இசைப்பாடல், நம்மையும் அவளோடு சேர்ந்து ஆட வைப்பதாக இருந்தது. ஓவியமன்னர் கே. மாதவனால் படைக்கப் பட்டிருந்த அந்த ஓவியப் பாவையும் அத்தனை உயிரோடு சித்திரிக்கப் பட்டிருந்தாள்.

குயில் இதழில் தலையங்கம் எழுதப்படவில்லை.

இதற்கிடையே, மிகச்சரியாக இனம் காணமுடியாத ஏதோ சிக்கல் காரணமாக இந்தக் ‘குயில்’ இதழும் 25.4.1947இல் புதுக்கோட்டை முகவரி யிட்டு வெளிவந்ததோடு சரி.

**குயில் திங்கள் இதழ்**

பிறகு புதுவையிலிருந்தே குயிலை நடத்துவதென முடிவு செய் திருக்கிறார் பாவேந்தர். அதன்படி 1.9.47 முதல் புதுவை பெருமாள் கோயில் தெரு 95ஆம் இலக்கத்தில் உள்ள அவர் வீட்டு முகவரியில் இருந்தே குயில் திங்கள் இதழ் ஏற்கெனவே சென்னைக் குயிலில் ஏற்பட்ட சிக்கல் காரண மாகப் 'பாரதிதாசன் குயில்' என்று எடுப்பாக அமைந்த தலைப்புடன் பழனியம்மாள் அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

அரசுக்கும் இவருக்கும் முரண்பாடு ஏற்படவே, அந்தக் குயிலின் இன்குரலும் 1. 10. 48 உடன் அடங்கிவிட்டது. குயிலின் கடைசி இதழ் ஆண்டு மலராக வெளிவரும் என ஆடம்பர விளம்பரமெல்லாம் வந்தது. ஆனால் ஏனோ அப்படிப்பட்ட மலர் வரவில்லை; இதழ் சாதாரணமாகவே வந்தது.

குயில் திங்கள் இதழில், 'அனைவரும் உறவினர்' என்றோர் தொடர் கதையை 15.6.48, 15.7.48, 15.8.48, 1.10.48 ஆகிய இதழ்களில் பாவேந்தர் எழுதி வந்திருக்கிறார். அக்கதை, ஏடு நின்றதால் பாதியில் நின்றுவிட்டது.

**குயில் நாளிதழ்**

இதற்கிடையே 13.9.48 முதல் 12.10.48 வரை, குயில் நாளேடு பாவேந்தரால் நடத்தப்பட்டுள்ளது. பெரிதும் 'இந்திய யூனியனில் ஏன் சேரவேண்டும்?' போன்ற பிரஞ்சிந்தியச் செய்திகளே நிரம்பியிருந்தன. இதில் கவிதைகளுக்கு முக்கியத்துவம் இல்லை; எல்லாம் உரைநடையே!

இந்திய யூனியனிலிருந்து திராவிடநாடு விடுதலை பெறவேண்டும்; பிரஞ்சிந்தியா இந்திய யூனியனில் சேரக்கூடாது என்பவைகளே இதன் குறிக்கோளாக இருந்தன.

மேலே குயில் என்ற பெரிய எழுத்துக்களுக்கு இடதுபுறம் Kuil Daily என்று ஆங்கிலத்திலும் அதன் கீழே 'தமிழ்த்தினசரி' என்றும் அதன் கீழே ஆசிரியர்: பாரதிதாசன் - புதுக்சேரி, இசை1: குரல்-1 என்றும் விவரக் குறிப்புகள் காணப்படுகின்றன.

6 பக்கங்களில் வெளியிடப்பட்ட இந்த நாளிதழ் ஒன்று காலணா, ஆண்டுக் கட்டணம் 5-8-0. ஆறு மாதச் சந்தா 2-8-0 அஞ்சலகப் பதிப்பு பெறுகின்றவரை, அஞ்சல் மூலம் தனி ஏடு அனுப்பப்படவேண்டுமானால், ஓரிதழ் ஓரணா என்று நிர்ணயிக்கப்பட்டிருந்தது. இவ்வகையில், ஆண்டுக் கட்டணம் ரூ 22-8-0 ஆகும்.

இதழ் விவரம் (Imprint) தமிழிலும் பிரஞ்சிலும் - ஆசிரியர் பாரதி தாசன், இராச. பெரியசாமி, பழநியம்மா அச்சகம், புதுச்சேரி எனக் கடைசிப் பக்கம் வெளியிடப்பட்டிருந்தது.

இதன் 2ஆம் பக்கம் தலையங்கம் எழுதப்பட்டு வந்தது. குப்புசாமி அப்பாசாமி திண்ணைப்பேச்சு, கருத்தோவியம், உலைக்கூடம், ஊர்க் குருவி, ஆசிரியருக்கு அஞ்சல் - எனப் பல பகுதிகள் கொண்டு வெளிவந்த இந்தக் குயில் தினசரி, வெறும் 26 நாட்களே நடத்தப்பட்டு முடிவுக்கு வந்தது.

### குயிலின் தொடக்கம்

இதுவரை நான் தெரிவித்த விவரங்களையெல்லாம் இலக்கியங் களில் தமிழறிஞர்கள் 'என்மனார் புலவர்' என்பார்களே? அப்படித்தான் சொல்லிக் கொள்ள வேண்டியுள்ளது. இவ்வாறு 'குயில்' முதல் இதழின் தொடக்க காலமே இன்னதென்று திட்டவட்டமாகச் சொல்லமுடியாமல் இருப்பது, புரட்சிக் கவிஞர் காலத்திலேயே வாழும் நமக்கெல்லாம் சற்று துன்பமாகத்தான் இருக்கிறது.' அதில் நாள்கூடக் குறிப்பிடப்படாமல் வெளி வந்தால், நாம் என்ன செய்வது?' என்பது சிலர் கேள்வி.

### குயில் கிழமை இதழில் கேட்டலும் கிளத்தலும்

கேள்வி: சர்வகலாசாலை என்பது வடமொழித் தொடர். இதைத் தான் தமிழர்கள் கல்லூரி என்று சொல்லித் திரிகிறார்கள் என்று என் பார்ப்பன நண்பர்கள் சொல்லுகிறார்கள். எப்படி?

விடை: கலாசாலை என்பது கலப்பில்லாத வடமொழிச் சொற்றொடரா என்பது ஆராய்ச்சிக்குரியது. கல்லூரி என்பது பற்றிப் பார்ப்பனர்கள் கருத் துரைத்தார்கள் எனில், அவர்கட்கும் தமிழுக்கும் என்ன தொடர்பிருக்க முடியும்? தமிழாராய்ச்சியேனும் அவர்கட்கு இருக்குமா என்று நாம் கருதிப் பார்த்து, அவர்... என்று தள்ளவேண்டும்.

ஈண்டு நாம் எடுத்துக்காட்டும் செய்யுளைக் காண்க:

தற்காலம் கல்லூ ரிநற் கொட்டிலா
தடத்திடை மொய் எருக் குப்பையா
......... என்னுயிரா எய்து கற்குமால்
.......க்கும் வெஞ்சரம் ஐந்துடையானரோ

சிந்தாமணிச் செய்யுளில், கல்லூரி..... இடம் என்றும் பொருள் தரல் காண்க (குயில் 8.6.58).

கேட்டல்: சகரம் தமிழில் மொழிக்கு முதலில் வராதா?

கிளத்தல்: தொல்காப்பியத்தில் வராது, நன்னூலில் வரும் (குயில் 10.11.59)

கேட்டல்: சீவானந்தம் எப்படி?

கிளத்தல்: சீவானந்தம் தம் கொள்கையைச் சிறிதும் விட்டுக் கொடுக்காதவர். அது பற்றி அவரைப் புகழத்தான் வேண்டும் (குயில் 16.8.60)

புரட்சிக் கவிஞரின் கேட்டலும் கிளத்தலும் பகுதி, இவ்வாறு சின்னஞ் சிறு கேள்வி பதில்களாக மட்டுமல்ல...

கேட்டல்: தென்கடலில் முத்திருக்கும் தென்னாட்டில் தமிழிருக்கும் என்கிறார். மெய்தானே தமிழரே? அங்ஙனம் தேனுமுண்டோ தமிழரே?

கிளத்தல்: தென்கடலில் முத்திருக்கும் தென்குமரி ஆழ்ந்திருக்கும் தென்னாட்டில் எல்லாம் உண்டு தோழரே - அதைத் தெரிந்து கொள்ள ஆசைவேண்டும் தோழரே! .. (குயில் 23.2.60)

இவ்வாறான கவிதை வடிவிலும் அப்படி வெளிவந்தது உண்டு. ஏட்டிலும் எழுத்திலும்தான் பாரதிதாசனாரிடம் இது போன்ற பதில் கிடைக்குமே தவிர, நேரில் அப்படிக் கிடைப்பது கடினமே!

**குயில்**

ஒருமுறை தஞ்சை மாவட்டத்தில் இருந்த முத்துப்பேட்டை நிகழ்ச்சி ஒன்றினுக்குக் கவிஞரோடு சென்றிருந்தேன். நாங்கள் தங்கியிருந்த இடத்தில் பலபேர் வந்து பார்த்து இவரிடம் பேசிக் கொண்டிருந்தனர்.

அங்கு வந்திருந்த ஒரு பெரியவரிடம் பாவேந்தர் கேட்டார் "இந்தப் பக்கமெல்லாம் குயில் கிடைக்குதுங்களா?"..

மிகுந்த கவலையோடு அந்தப் பெரியவர் சொன்னார்; "எங்கேங்க கிடைக்கிது; முன்னெல்லாம் இந்தப் பக்கமெல்லாம் ஒரே காடு. சர்வ சாதாரணமா குயில் எல்லாம் கிடைக்கும். இப்பதான் காட்டையெல்லாம் அழிச்சுட்டானுங்களே!".

அவருடைய இந்தப் பதிலைக் கேட்டுவிட்டுக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்த பாவேந்தர் "அப்ப இனிமே காட்டை உண்டாக்கினாதான் குயில் கிடைக்கும்னு சொல்லுங்க?" என்றாரே பார்க்கலாம். அங்கு வந்திருந்தோரில் குயில் ஏடு பற்றி அறிந்திருந்தவர்களெல்லாம் குபீரென்று சிரித்து விட்டார்கள்.

பதில் சொன்ன பெரியவர் ஏதும் விளங்காமல் விழித்தார்.

***வந்தவர் மொழியா?***

குயில் கிழமை இதழில் வெளிவந்த பகுதிகளில் 'வந்தவர் மொழியா? செந்தமிழ்ச் செல்வமா?' என்கிற பகுதி, கற்றறிவாளர் மெச்சிப் பாராட்டிய ஒன்றாகும். ஒரு சொல்லை, அது வடசொல் என்பாருக்கு முறையான விளக்கங்களோடு அது தமிழ்ச்சொல்லே என்று ஆணித்தரமாகத் தெரிவித்து வந்த பகுதியாகும் அது.

இதோ அப்பகுதி பற்றி உணர்த்த ஒரு எடுத்துக்காட்டு:

**உவமை**

உவமை என்பது உபமானம் என்பதன் சிதைவாம், இவ்வாறு மொட்டைத் தலைக்கும் முழந்தாளுக்கும் முடிபோடுவர் பார்ப்பனரும் அவர் அடியாரும், பொருள் நிலை உணர்வித்து உவப்புறச் செய்வது உவமை, உவத்தல், உவமை ஒரு பொருட்சொற்கள்.

தாமரை மலர்முகம் என்பதில் தாமரை மலர் உவமை, முகம் உவமை ஏற்கும் பொருள்.

இவ்வாறு கூறாமல் முகம் என்று மட்டும் சொன்னால் முகம் என்ற பொருளின் நிலையை நன்கு உணரச் செய்ததாகாது என்பதை நோக்குக. உவப்புறச் செய்வது உவமை எனின் இச்சொல் காரணப் பெயராதலும் அறிக.

எனவே உவமை செந்தமிழ்ச் செல்வமே என்க. (குயில் 8.7.58).

**முகம்**

இது வடசொல் என்று வம்பு புரிந்தார்கள் பல்லாண்டுகளின் முன்! அப்போதே இது தூய தமிழ்ச்சொல்லே என்று பேராசிரியர் கா. சுப்பிரமணியப்பிள்ளை எம்.ஏ.,எம்,எல். முதலியவர்கள் எடுத்துக்காட்டி மறுத்தார்கள். ஆயினும் ஏமாற்றும் பார்ப்பனரும் ஏமாறும் தமிழர்களும் மலிந்து வரும் இந்நாளில் மீண்டும் அது பற்றி ஆராய்வது பொருத்தமேயாகும்.

முன் என்பதன் திரிபே முகம். எனவே, முகம் என்பதற்கு முன் என்பதே பொருள் என்க. முகம் என்ற இச்சொல். நூற்றுக்கணக்கான தமிழ்ச் சொற்களின் உள்ளுறுப்பாகவே அமைந்திருப்பதும் பழங்காலந் தொட்டே அமைந்திருப்பதும் நோக்கற்பாலன.

முகம் முன், சிறப்புக்கூறல், முகப்புஆசை, வீடு இவற்றின் முன்னுறுப்பு, முகசு, முகசம் முன்னே சிறந்து காணப்படும் பல். முகதா முன்னிலை, முகருதல், முன்னாலிருந்து மணத்தை உட்கொள்ளல், முக வாடை. முகவுரை-முன்னால் உரைக்கும் உரை. இதை வடவர் எடுத்தாண்டார்கள், வழியின்மையால் போலும்.

எனவே, முகம் தூய தமிழ்ச்சொல் என்று முடிக்க. (குயில் 2.9.58).

**கோட்டி**

இதைக் கோஷ்டி என்ற வடசொற் சிதைவென்று தமிழர் பலர் எண்ணுவதாய்த் தெரிகிறது. இது நேர்மாறான எண்ணம். கோட்டி என்ற தூய தமிழ்க் காரணப் பெயரை வடசொற்காரர் கோஷ்டி என்று சொல்லி வருகின்றார்கள், வேட்டி, முட்டி என்ற தமிழ்ச் சொற்களை வேஷ்டி, முஷ்டி என்று சொல்லிக் கொள்வது போல.

கொள்-கொள்கை; 'த்' எழுத்துப்பேறும் 'இ' வினை முதற்பொருள் இறுதிநிலையும் பெற்றுக் கோட்டி என முடிந்தது. கொள்கை உடையது என்பதால் காரணப்பெயர். ஒரு கோட்பாட்டைக் கொண்ட கூட்டத்தைக் குறிப்பது. நாளடைவில் பொதுவாகக் கூட்டத்தையும் குறிப்பதாயிற்று. (குயில் 23.12.58)

தன் தமிழன்பர்களையும் ஊக்குவிப்பது பாவேந்தரின் இயல்பு.

**வெண்பா வினா – விடை**

1959இல் 'வெண்பா வினாவிடை' என்றோர் புதுப்பகுதி தொடங்கப்பட்டது.

வெண்பாவின் இலக்கணத்தோடு முதல் இரண்டடிகளில் வாசகர் வினாவைத் தொடுப்பார். புரட்சிக்கவிஞரின் அன்பிற்குரிய கவிஞர்கள் பா.முத்து, சித்தன் இருவரும் அடுத்த இரண்டடிகளில் விடையறுத்து வெண்பாவை முடிப்பர். இதுவே அது.

***இதோ சில உதாரணங்கள்***

வினா: கா. இராமசாமி, பள்ளிப்பட்டி; விடை: பா. முத்து
'காதல் மணம் சிறக்கக் காண்போமோ? பஞ்சாங்கம்
ஓதும் மனம் ஓங்க உய்வோமோ? – தீதிலாக்
காதல் மணமே மணமென்க; மற்றொன்றோ ஏதிலார் தந்த இழுக்கு!.
வினா: கா. குருசாமி, அழகாபுரி; விடை: சித்தன்
'வான்சிறப்பைச் சொன்ன திருவள்ளுவர் தமிழ் மறையில்
ஏன்ஞாயிற் றின்சீர் இயம்பவில்லை – வான்சிறப்பைச்
சொன்னால் அதனுள் சுடர்ப்பரிதி யின்பெருமை
தன்னால் அடங்குமெனத் தான்!

இவ்வாறு ஒரு பகுதி வெளியிடப்பட்டது.

**தலையங்கம்**

குயில் கிழமை இதழ் இரண்டாம் பக்கந்தோறும் தலையங்கம் இடம் பெற்றது: துணைத் தலையங்கமும் உண்டு. மேலே இரு குயில்கள் கூவிடும் ஓவியர் கே. மாதவனின் கோட்டுப்படம் இடம் பெற்றிருக்க, அதன் கீழே – புதுச்சேரி, தி.வ.ஆ. க.கூ.கூ0. (1990) பங்குனி கஅ(18)– என்கிற தமிழாண்டு, தமிழ்த் தேதி குறிப்பிடப் பட்டிருக்கும்.

தலையங்கம் புதுவை, சென்னை மாநிலங்களின் அல்லது டில்லியின் அரசியல் பற்றியதாகவும், இலக்கியத்தொடர்போடும் இருக்கும், 'கவிஞர்

நினைவிற்கு!' எனும் தலைப்பில் 31.3.59 குயிலில் பாவேந்தர் எழுதிய தலையங்கத்தின் தொடக்கம் இது:

'எந்தன், உந்தன் எனத் தமிழில் சொற்களே இல்லை. இதை முன் ஒருமுறை விளக்கியுள்ளோம். இவ்வாறுள்ள பிழைச் சொற்களைப் படித்த வர்களே எழுதுவதென்றால், இராசகோபாலாச்சாரிக்கும் இவர்கட்கும் என்ன வேறுபாடு?

எம் என்பது பன்மைச் சொல். அதனோடு பன்மைக்குரிய தம் என்பது தான் சேரும். எனவே எந்தம் என்று எழுதவேண்டும். உந்தம் என்பதும் அப்படியே.

என் என்பதும் உன் என்பதும் ஒருமைக்குரியவை. இவற்றோடு ஒரு மைக்குரிய தன் சேரவேண்டும். எனவே, உன்றன் என எழுத வேண்டும்...'

இவ்வாறு தொடர்ந்தது அந்தத் தலையங்கம்.

புரட்சிக் கவிஞரே இதழ்தோறும் தலையங்கம் எழுதுவார்.

**பொங்கல் மலர்**

14.1.1959இல் குயில் பொங்கல் மலர் கூடுதல் பக்கங்களுடன் 50 காசு விலையில் வெளியிடப்பட்டது. திருவள்ளுவர் உருவப்படம் தீட்டிய வேணுகோபால் சர்மா அதற்கு வண்ண முகப்போவியம் தீட்டியிருந்தார்.

விலங்குகளால் பிணைக்கப்பட்ட நம் தமிழன்னை சோகமே உருவாகித் துவண்டுபோய் நிற்க. (இயல் இசை நாடகத்தைக் குறிக்கும் வகையில்) கிளி, குயில், மயில் ஆகியவை துயரத்தோடு மேலிருந்து அதைப் பார்ப்பது போன்ற ஓவியம் அது!

'பிசிராந்தையார்' தொடர் நாடகமும் பாவேந்தரால் எழுதப்பட்டது. பாட்டு எழுதுவார்க்குச் சில குறிப்புகள் எனக் கவிதை எழுதும் இலக் கணம் பற்றி எளிமையாகக் கவிஞரால் எழுதப்பட்டது.

'நான் கண்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகம்' என்றோர் கட்டுரை புரட்சிக் கவிஞரால் தொடர்ந்து எழுதப்பட்டது; அதுபற்றி வெண்பாக்களும் எழுதப்பட்டன. 'வள்ளுவர் உள்ளம்' என்ற திருக்குறள் உரையும் கவிஞரால் தொடர்ந்து எழுதப்பட்டது.

குயில் துணையாசிரியனாக இருந்த நான் எழுதும் கவிதைகள், பிறர் எழுதும் கவிதைகள், கட்டுரைகள், மருத்துவக் குறிப்புகள், விழாச் செய்தி கள், புகைப்படங்கள் எல்லாம் 'குயில்' கிழமை இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்பட்டன. பாவேந்தருக்குத் தெரியாமல் நாங்கள் எதையும் வெளி

யிட்டதில்லை. இரண்டங்குலம் இடம் விழுந்தால்கூட எழுதமாட்டோம்; கவிஞரிடம் கேட்டுத்தான் எழுதி வாங்குவோம்.

**உறுப்பினராக**

| கட்டணம் | உள்நாடு | வெளிநாடு |
|---|---|---|
| தனி இதழ் | 13 காசு | 16 காசு |
| ஓராண்டு | ரூ.6.75 | ரூ.8.50 |
| ஆறுமாதம் | ரூ.3.37 | ரூ.4.50 |
| வாழ்நாள் | ரூ.100 | |

தனி இதழ் வேண்டுவோர் 0.15 (பதினைந்து காசு) அஞ்சல் தலைகள் அனுப்புக.

என்று சந்தாதாரர்களுக்கென விளம்பரங்கள் வெளியிடப்படும்.

**குயில் வளர்ச்சிக்கு**

திருச்சித் தோழர்களான பா. தங்கவேல், நா. இராமலிங்கம், கோ. இராமச்சந்திரன் ஆகியோர் ரூபாய் மூன்று அனுப்பி யுள்ளார்கள்; வரப்பெற்றோம். நன்றி

அமைச்சர்

'விற்பனையாளர்கள் தேவை, விளம்பரம் செய்ய, விற்பனையாளர் கட்கு உறுப்பினர்க்கு (பாக்கி வைத்திருப்போரை அனுப்பக் கோருதல்) எழுதுவார்க்குப் போன்ற பெட்டிச் செய்திகளும் எல்லா ஏடுகளிலும் போல குயிலிலும் அவ்வப்போது இடநிரப்புச் செய்திகளாக வெளியிடப்பட்டன. அவையும் கவிஞராலேயே எழுதப்பட்டன. இதழின் முதல் பக்கமும் கடைசிப் பக்கமும் கவிஞரின் கவிதைகள் இடம் பெற்றன.

நினைவுறுத்துகிறோம் எனும் தலைப்பில் குயிலில் பிறரால் எழுதப் படும் பாடலுக்கும் உரைநடைக்கும் அவரின் புனைபெயர் (அ) இயற்பெயர் இடப்பட்டிருக்கும்; ஆசிரியரால் எழுதப்படுவனவற்றிற்குப் புனை பெயரோ இயற்பெயரோ இரா எனும் குறிப்பும் எப்போதேனும் வெளிவரும்.

இவ்வாறான இடைவிடாத இதழ்ப்பணிகளின் இடையே ஓய்வு கிடைக்கும்போதுதான் மண விழா, இலக்கியச் சொற்பொழிவு போன்றவற் றுக்கான வெளியூர் அழைப்பைப் பாவேந்தர் ஏற்பார். நானோ அல்லது சி.வி.மூர்த்தி, உ. வே. பாலு ஆகிய இருவரில் ஒருவரோ உதவியாளராக உடன் செல்வோம்.

குயில் சார்பான பணி என்பதால் அதை நான் இங்கே குறிப்பிட்டேன்.

முழுப்பக்க விளம்பரத்திற்கு ரூ.100, அரைப்பக்கத்திற்கு ரூ.50, கால் பக்கத்திற்கு ரூ.30 என்று நிர்ணயித்தும், அவ்வளவாக விளம்பரங்கள் வரவில்லை.

கடைசிப் பக்கம் இதழ் பற்றிய விவரக்குறிப்பு. ஆசிரியர், வெளியிடு பவர், பொறுப்பாளர்; பாரதிதாசன், புதுச்சேரி, அச்சிடுவோர்; மா.தண்ட பாணி, பழநியம்மா மின்விசை அச்சகம், புதுச்சேரி என இருக்கும்.

இவ்வாறு, புரட்சிக் கவிஞரால் இதற்குமுன் நடத்தப்பட்ட வேறெந்தக் குயிலுக்கும் இல்லாத பல சிறப்புகள், நான் பணியாற்றி வந்த 'குயில்' கிழமை இதழில் தன்னாலேயே அமைந்தது. இதன் காரணமாகக் 'குயில்' விற்பனையும் கூடியது.

### குயிலின் கொள்கைகள்

'பெருக்கத்து வேண்டும் பணிதல்' என்பார்களே? குயிலுக்கு அது கொஞ்சம் கொஞ்சமாக மறந்துபோய்விட்டது என்றுதான் சொல்ல வேண் டும். இதன் காரணமாகத்தான் 1.6.1958இல் தொடங்கி ஓகோ வென்று உயரப்பறந்த குயில் 7.2.1961இல் தாழப்பறந்து தரைதட்டும் நிலைமை யினைச் சந்திக்க நேர்ந்தது.

இரண்டாண்டு ஏழுமாத இளமையிலேயே குயிலுக்கு இவ்விதப் பாதிப்பு ஏற்பட மூலாதாரமான சம்பவம் எது அல்லது யாவை என்று நாம் இங்கே பார்க்கலாம்.

### பெரியார் – அண்ணா

தந்தை பெரியாரைப் பற்றி ஏராளமாக எழுதிக்குவித்தவர் புரட்சிக் கவிஞர். எனினும், 60 வயது முதுமையில் அவர் புரிந்து கொண்ட திரு மணத்திற்கு இவரும் எதிர்ப்புத் தெரிவித்தார்.

தனது நெருக்கமான நண்பராக இருந்த ராஜாஜி சொல்லியே கேளாத பெரியார் - பாவேந்தரும், அண்ணா, கலைஞர் போன்றோரும் காட்டிய எதிர்ப்புக்கா செவி சாய்ப்பார்?

திருமணம் என்பதைவிட, இதை ஒரு மாதிரியான ஏற்பாடு என்றே சொல்லலாம்; அறையில் அரிப்பெடுத்தால் சொறிந்து விடவாவது ஒரு துணை வேண்டுமல்லவா? என்றெல்லாம் விளக்கம் சொல்லப்பட்டது.

மலம் மூடத்தான் மலர்பறித் தேன்எனில்
குளிர்மலர்ச் சோலை கோவென் றழாதோ?

என்றெல்லாம் எழுதிப் பாவேந்தரே அதற்குத் தன் கண்டனத்தைத் தெரி வித்தார்.

என்ன தெரிவித்து என்ன? பெரியார், நினைத்ததை நிறைவேற்றிக் கொண்டார். அதன் விளைவு? திராவிட முன்னேற்றக் கழகம் உதய மாயிற்று. அறிஞர் அண்ணா பொதுச் செயலாளராக இருக்க பாவேந்தரும் தி.மு.க செயற்குழுவில் ஒருவரானார். கூட்டங்கள் அவரை முதன்மையாக வைத்தே நடத்தப்பட்டன.

அறிஞர் அண்ணாவின் மீதும், கலைஞரைப் போன்ற செயல்வீரர்கள் மீதும் அந்நாளில் அலாதி அன்பு கொண்டிருந்தார், பாவேந்தர்.

***திராவிடநாடும் திருத்தமும்***

1942இல், காஞ்சியில் திராவிடநாடு இதழ் தொடங்கியபோது பாவேந் தரின் பாகு நிகர் கவிதைகளைக் கேட்டு வாங்கித் தொடர்ந்து வெளியிட்டு வந்தார் அண்ணா அவர்கள்.

அப்படி வெளியிட்ட 'உணர்வு' என்ற கவிதையில் சில எழுத்துப் பிழைகள் அச்சாகிவிட்டன. இதுபற்றிப் புரட்சிக் கவிஞரே ஒரு கடிதம் எழுதி அதே கவிதையைச் சரியானபடி மீண்டும் எழுதி அண்ணாவுக்கு அனுப்பி வைத்திருக்கிறார் பிழை நேர்ந்தமைக்காக வருத்தம் தெரிவித்து எழுதியது மட்டுமல்ல; இவர் அனுப்பிவைத்த கவிதையை அப்படியே மறுபடியும் திராவிட நாடு இதழில் அச்சிட்டும் இருக்கிறார் அவர்.

1955 தேர்தலில், புதுவை - காசுக் கடைத் தொகுதியில் ஜனநாயக முன்னணி சார்பில் நின்று வெற்றி பெற்றார் புரட்சிக்கவிஞர்; புதுச்சேரி சட்டப்பேரவை அவைத்தலைவராகவும் பொறுப்பேற்றார்.

1957 பொதுத் தேர்தலில் முதன்முதலாகப் போட்டியிட்டு, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் - அறிஞர் அண்ணா, கலைஞர், பேராசிரி யர், என்.வி. நடராசன் முதலான பதினைந்து பேர் இங்கே வெற்றி பெற்று, சட்டப்பேரவை உறுப்பினராயினர்.

நாடெங்கும் இந்த வெற்றி புகழ்ந்து பேசப்பட்டது; ஏடுகள் யாவும் பாராட்டி எழுதின.

இதுவரை தி.மு.கழக மேடைகளிலெல்லாம் கூடத் தொடர்ந்து பேசி வந்த பாவேந்தரின் பார்வை, எதன் காரணமாகவோ வித்தியாசப் படலாயிற்று.

***பொற்கிழி சர்ச்சை***

புரட்சிக்கவிஞருக்கு அண்ணா, முதலானோர் பொற்கிழி வசூலித்துக் கொடுத்தது சில தி.மு.கழக மேடைகளில் விமர்சிக்கப்பட்டது; சில ஏடு களில் கார்ட்டூன்களாகச் சித்தரிக்கப்பட்டன.

பொழுதுபோகாவிட்டால், பாவேந்தரைக் கண்டு, பேச வருவோரில் அவருக்குப் பிடித்தாற்போலப் பேச எண்ணி சிலர், இந்த அரசியல் குழப் பங்களைப் பற்றி அவரிடம் பூதாகரமாகச் சொல்லலாயினார், அதாவது கொம்பு சீவிவிட்டனர். புரட்சிக்கவிஞரின் மனம் குமுறலாயிற்று. அதன் விளைவாக 'அண்ணாதுரையா எனக்குப் பொற்கிழி அளித்தார்?' என்றோர் கட்டுரையைக் குயிலுக்கு எழுதிக்கொடுத்தார் கவிஞர்.

வீட்டிலிருந்து நான்தான் அதை வாங்கி வந்தேன்; குயிலகத்திற்கு வரும் வழியிலேயே படித்துப் பார்த்த எனக்குப் பகீரென்றது. மாப்பிள்ளை தண்டபாணியிடம் அதைக் கொடுத்துத் தயவு பண்ணிப் படிச்சிப் பாருங்க; மாப்பிள்ளை; இதை வெளியிட்டா நல்லாயிருக்குமா? என்றேன் நான்.

பொறுமையாக அவரும் படித்துப் பார்த்தார். 'முக்காவாசி தி.மு.க. கார்ன்கதான் இப்ப குயில் ஏஜெண்டா இருக்கான்; அவனுங்க தானேப்பா படிக்கிறானுங்க? இப்ப போயி இதெப்போட்டா ஆபிசெ இழுத்து மூட வேண்டியதுதான்; வையி, இடமில்லேன்னு சொல்லி இந்த இதழ்ல சமாளிப் போம்; அடுத்து இதழுக்குள்ளாற, வீட்ல நானே கவிஞர்கிட்ட பேசி, சமாதானம் பண்றேன்' என்றார் மாப்பிள்ளை.

அவர் எப்போதுமே அச்சக நிர்வாகச் சங்கடங்கள், குடும்பத்தில் உள்ள குறைபாடுகள் பற்றியெல்லாம் அதிகமாகக் கவலைப்படுபவர். மிகச் சாமர்த்தியமாக அவைகளைத் தீர்த்தவரும் கூட. ஆனால், அவர் தி.மு.க. அனுதாபிகூட அல்ல. தி.மு.க. முன்னணித் தலைவர்களின் பெயர்களையே கூட ஏக வசனத்தில்தான் உச்சரிப்பார்.

அந்த வாரம் குயில் வீட்டுக்குக் கொடுத்தனுப்பப்பட்டது; அடுத்த அரை மணி நேரத்திலேயே குயிலகத்திற்கு ரிக்ஷாவில் வந்து சேர்ந்தார் பாவேந்தர். முகம் சப்பாதிப் பழம்போல் ஆக, வார்த்தைகள் நெருப்புத் துண்டுகளாக வெளிப்பட்டன. வெளிவராண்டாவில் எடுத்துப் போடப் பட்ட மடிப்பு நாற்காலியில் கால்மேல் கால் போட்டு, முரட்டுச் சுருட்டு ஒன்றை இழுத்து இழுத்துப் புகையைக் கக்கியவாறே பேசலானார்.

### இவன் ஒரு கண்ணீர்த்துளி

'குயிலகம்' கட்டடச் சொந்தக்காரர், பக்கத்தில் அரிசிக்கடை வைத் திருந்தார். 'செட்டியாரே!' என்று அவரைக் கூப்பிட்டு, உரத்த குரலில் நடந்தையெல்லாம் சொல்லி முறையிட்டார். நானோ, உள்ளே உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு நின்றேன்.

சிறிது நேரம் வரை, பின்னால் கையைக் கட்டிக்கொண்டு மௌன மாக நின்றிருந்த மாப்பிள்ளை - அதெ ஒண்ணும் போடக்கூடாதுன்னு

இல்லீங்க.. அது.. அது எங்கேயோ தாராந்து போச்சி... என்று சொல்லி முடிக்குமுன் அதெப்பிடிக் காணாமெப் போயிடும்கிறேன்?... கூப்பிடு அந்தப் பட்டுக்கோட்டைப் பையனெ! என்று வெடித்தார் பாவேந்தர்.

வெலவெலத்துப்போய் வெளிப்பட்டேன் நான். என்னைக் காட்டி அந்த அரிசிக் கடைக்காரரிடம் சொன்னார். 'இவன் ஒரு கண்ணீர்த் துளிப்பா, இவன்தான் எங்கணா அதெக் கிழிச்சிக் கடாசியிருப்பான்!"

'ஐயையோ, அதெல்லாம் இல்லீங்க ஐயா, நான் கொணாந்து மாப்பிள்ளை கிட்ட அப்பவே கொடுத்துட்டேன்' என்றேன் நான்.

கவிஞரைவிட உரத்த குரலில் 'நான்தான் சொல்றேன்ல, அடுத்த இதழ்ல போட்ருவம்னா இப்பிடி சப்தம் போடறிங்களே! வீதியில போற வங்கள்லாம் வேடிக்கை பார்க்கிறாங்கள்ல?' என்று சொல்லிவிட்டு, உள்ளேபோய் ஒரு 'பேப்பர் பேடும்' பேனாவும் எடுத்துவந்து தந்தார் மாப்பிள்ளை, தன்னைவிட தடித்த குரலில் யார் பேசினாலும் அடங்கிப் போவது பாவேந்தர் சுபாவம்.

"இப்பவே வேற எழுதித்தர்றேன்" என்றபடி எழுதலானார் பாவேந்தர். "இது எப்பிடி காணாமெ போவும்னு பார்க்கிறேன்!" என்ற உறுமல் வேறு!

**கட்டுரை அச்சாயிற்று**

நான்கே பக்கம், மளமளவென்று எழுதி முடித்த புரட்சிக் கவிஞர் 'ஏய் அருணாச்சலம்' என்று கம்பாஸிடரைக் கூப்பிட்டு, மாப்பிள்ளையையோ என்னையோ நம்பாதவரைப் போல அவரிடமே அந்தத் தாள்களைக் கொடுத்தார். 'அரைமணி நேரத்துல புரூப் தரணும்?' என்றார்.

அதேபோல் படித்துவிட்டுத்தான் வீட்டுக்குப் போனார். முதலில் எழுதியதே தேவலாம் என்கிற வகையில் இருந்தது அவர் இரண்டாவதாக எழுதித் தந்த 'அண்ணாத்துரையா எனக்குப் பொற்கிழி அளித்தார்?' கட்டுரை அவ்வளவு மோசமான சொற்கள் அதில் இடம் பெற்றிருந்தன.

முதலில் நிறுத்திய கட்டுரையை அச்சிட்டிருந்தால் கூட ஒரே இதழோடு முடிந்துபோயிருக்கும். அதை ஒளிக்கப்போய் - இந்தக் கட்டுரையில் 'தொடரும்' போட்டுக் கொடுத்திருந்தார் புரட்சிக்கவிஞர்.

30.9.58 குயில் கிழமை இதழில் ஒன்றரை பக்கம், 7.10.58 இதழில் முக்கால் பக்கம், 14.10.58 இதழில் ஒன்றேகால் பக்கம் என்று அந்தக் கட்டுரை தொடர்ந்து வெளியிடப்பட்டது.

குயிலை அச்சிட்டு அனுப்பிய சில நாட்களிலேயே இதன் காரண மாக எண்ணற்ற வசவுக் கடிதங்கள் குயிலகத்திற்கு வரலாயின. பல குயில்

விற்பனையாளர்கள் தமக்கு ஏற்பட்ட விற்பனைப் பாதிப்பைப் பற்றி எழுதினார்கள்.

***கண்ணதாசன் கண்டனம்***

முத்துப்பேட்டை குயில் விற்பனையாளராக இருந்த ந. தர்மலிங்கம் என்பார். (பிற்காலத்தில் இவர் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினராக இருந்தார்) தாம் விற்பனையாளர் என்ற முறையில் வாங்கிவந்த அவ்வளவு இதழ் களையும் கொளுத்திச் சாம்பலை எங்களுக்கு அனுப்பிவிட்டு, 'என் முன்பணத்தில் பாக்கிகூட வேண்டாம்.. வைத்துக்கொள்' என்றோர் கடுமையான கடிதமும் எழுதியிருந்தார்.

அவர் வழியில் வேறு சிலரும் தம் குயில் விற்பனையை - சந்தாவை நிறுத்திக் கொள்ளுவதாகத் தெரிவித்திருந்தார்கள். கலைஞர் இதை முரசொலி யில் கண்டித்திருந்தார்; கவிஞர் கண்ணதாசன், தமது 'தென்றல்' ஏட்டில் குரல் கெட்ட குயிலே கேள்! என்கிற தலைப்பில் சில அனல் பறக்கும் அறுசீர் விருத்தங்களை எழுதி 'இரு இரு குத்தும் தாடி!'. என்று முடித்திருந்தார்.

எல்லாவற்றையும் நானே எப்போதும் போலக் கொண்டு போய்க் கவிஞரிடம் காட்டினேன். அப்போதெல்லாம் ஒருவிதப் பிரதிபலிப்பையும் அவர் முகத்தில் நான் கண்டதில்லை.

'இன்னும் ஒன்றுக்குத்தான் பதில் சொல்லியாக வேண்டும்' என்று முடிந்திருந்தது முந்திய வாரம் குயிலில் வெளியிடப்பட்ட அந்தக் கட்டுரை. அதோடு அதை நிறுத்திவிடலாம் என நானும் மாப்பிள்ளையும் எண்ணினோம். அவ்வாறு எண்ண மட்டுமே எங்களால் முடிந்தது!

அலுவலகச் செலவுகளைச் சமாளிக்கப் புரட்சிக் கவிஞருக்குத் தெரிந்தே மாப்பிள்ளை பெரிதும் கடன்பட நேர்ந்தது. என்னால் முடிந் ததை நானும் உதவினேன். அலுவலக நிர்வாகத்தைக் கவனித்து வந்த 'மாசி' என்பவரும் நானும் இவ்வாறு ஒருநிலை நேர்ந்ததற்காகப் பெரிதும் கவலைப்பட்டோம்.

ஒருநாள் காலை, இலக்கண வகுப்பிற்குச் சென்ற என்னிடம், குயிலுக் காக இரவே எழுதிவைத்திருந்தவற்றைக் கொடுத்தார் பாவேந்தர். அவற்றோடிருந்த ஒரு கால் கடுதாசி வாசகங்கள் என்னை மகிழ்வித்தன.

'அண்ணாத்துரையா...'

என்ற பகுதி, கவிஞர் வெளியூர் செல்ல நேர்ந்ததன் காரண மாக இந்த இதழில் வரவில்லை. அடுத்த இதழில் வரும்.

அமைச்சர்

என்பதே அது. இப்படியே கவிஞர் அதைவிட்டுவிடுவார் என்றுதான் நான் எண்ணினேன். குயில் விற்பனை கெட்டதால் விரக்தியோடிருந்த மாப்பிள்ளை மட்டும் 'அட போப்பா!' என்றார் சலிப்போடு.

இதேபோல, அதற்கடுத்த இரண்டாம் நாள் காலையில் கவிஞர் வீட்டிற்குச் சென்ற எனக்கோர் அதிர்ச்சி அங்கே காத்திருந்தது. கவிஞரை ஒருவர் ஏகவசனத்தில் திட்டிக்கொண்டிருக்கப் பாவேந்தர் அன்று வந்த 'முரசொலி' ஏட்டின் ஒரு பக்கத்தை ஆழ்ந்து படித்துக்கொண்டிருந்தார். படித்து முடிக்கிறவரை நின்றிருந்துவிட்டு 'வணக்கம்யா' என்றேன், நான்.

'இன்னிக்குப் பாடம் வேணாம் இராசேந்திரன், நானே அச்சகத் துக்கு வர்றேன் போ' என்றார் கவிஞர். (அன்றுமுதல் இன்றுவரை எனது பெயரை இப்படித் தெளிவாக உச்சரித்தவர் பாவேந்தர் ஒருவர்தான்).

நான் உள்ளேபோய் அம்மாவிடமும் அக்காவிடமும் 'எதுனா வாங் கியாறனுமா?' என்று கேட்டுவிட்டு, "மாப்பிள்ளை எங்கேக்கா?" என்றேன்.

'பாண்டியிலேல்லாம் கடன் பட்டாச்சு, பட்டாம்பாக்கத்துக்குப் போயி ருக்காரு; மத்தியானம் வந்துடுவாரு' என்று சற்று உரத்த குரலிலேயே சொன் னார் வசந்தா அக்கா (பட்டாம்பாக்கம் மாப்பிள்ளையின் சொந்த ஊர்.)

### கடைசிக் கட்டுரை

மாப்பிள்ளை வரும் முன்பாகவே, பாவேந்தர் குயிலகத்துக்கு வந்து சேர்ந்தார் ஒரு கட்டுரையோடு, 'அண்ணாத்துரையா எனக்குப் பொற்கிழி அளித்தார்?' கட்டுரைத் தொடர்ச்சியே அது! தலைப்புத்தான் அதுவே தவிர, உள்ளே பெயர் குறிப்பிடாமல் மறைமுகமாகக் கலைஞரைச் சாடி யிருந்தார் புரட்சிக்கவிஞர். குயிலில் கால்பக்க அளவே அது வந்தது.

ஒரு துளியாக இருந்தாலும் ஒரு குவளையாக இருந்தாலும் விஷம் விஷம்தானே? 'அவன் இல்லைன்னா தி.மு.க.வே இல்லை!' என்று கலை ஞரைப் பற்றி அப்போதெல்லாம் அவரே அடிக்கடி சொல்லக் கேட்டவன் நான்.

28.10.58 குயில் ஏட்டில் அக்கட்டுரையை வெளியிட்டதோடு சரி; ஏறத்தாழ பத்தாயிரத்திற்கு மேல் விற்பனையாகி வந்த குயில் முன்பே குறைந்ததோடு மேலும் விற்பனை குறைந்து ஐயாயிரத்துக்கும் கீழே சரிந்து - மரணப்படுக்கையில் விழுந்தது.

இருந்த விற்பனையாளர்களிடமிருந்தும் சரியானபடி பணம் வரவில்லை.

'வழக்குமன்றத்திற்கு வழிகாட்டாதீர்' என எச்சரிக்கைகள் விடுத்தோம்.

'விற்பனையாளர் இல்லாத ஊர்களுக்கு விற்புனையாளர் தேவை என்று அறிவித்தோம்.

'குயில் வளர்ச்சியைக் கெடுக்கும் விற்பனையாளர்கள்' என்று பணம் அனுப்பாதோர் பற்றி முகவரியோடு விளம்பரங்கள் எல்லாம் வெளியிட் டோம்.

என்ன செய்தும் பயனில்லை!

***மீண்டும் அரசியல்***

சில மாத காலம் இப்படிச் செலவிட்டும் பயனில்லை. இந்நிலையில் 'கறுஞ்சட்டை' என்ற பெயரில் திருவாரூர் தங்கராசு அவர்கள் 'பெரிய கண்ணீர்த்துளியார் - சிறிய காஞ்சிபுரம்' என்ற முகவரிக்கு எழுதுவது போல், நான்கைந்து கடிதங்கள் – ஐந்தாறு பக்கம் குயிலில் வருமாறு எழுதி நாங்கள் அரும்பாடுபட்டு அடக்கி வைத்திருந்த அரசியல் புழுதியை மீண்டும் கிளப்பினார். இவ்வாறான சில நெருக்கடி நிலைமைகள் மீண்டும் குயில் ஏட்டைச் சோதனைகளுக்குள்ளாக்கின.

குயில் கிழமை இதழ் தொடங்கியபோது முதல் இதழிலேயே இதழின் கொள்கைகளை விவரித்திருந்தார் பாவேந்தர். அதன் கடைசி வாக்கியம் 'அரசியற் சோலையில் குயில் புகும்' என்பதாகும்; அப்போது யாருக்கும் தெரியாது, அந்த அரசியலே குயிலுக்கு முற்றுப்புள்ளி இடும் என்று.

**இருட்டறை யூடே எழுந்தசெஞ் ஞாயிறு!**
**ஏங்கும் பயிர்க்கென இழிதரு வான்மழை!**
**புரட்டரை வேரொடு புரட்டும் மறப்புயல்!**
**பூவினும் மென்மைப் புதுவைத் தென்றல்..!**

என்றெல்லாம் முனைவர் இரா. இளவரசு அவர்கள் பாடியது போலவே இருந்திருக்கும் பட்சத்தில் 'குயில்' கிழமை இதழ், தங்கு தடையின்றித் தொடர்ந்து வெளிவந்திருக்கக் கூடும். அதில், பொதிகைத் தென்றலின் இதத்தை நாம் சுகித்திருக்கவும் கூடும்.

அந்த எல்லை கடந்ததே அவ்விதழுக்குப் பொல்லாங்காகிவிட்டது என்பது என்னுடைய கருத்து.

பாடிப்பறந்து கொண்டிருந்த பாவேந்தரின் குயில் கிழமை இதழ் 7.2.1961 உடன் நிறுத்தப்பட வேண்டியதாயிற்று!

***பாண்டியன் பரிசு***

பாண்டியன் பரிசைத் திரைப்படமாக்கும் பொருட்டுச் சென்னைக்குப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் வந்துசேர்ந்தார். குயில் கிழமை இதழ்

நிறுத்தப்பட இதுவே காரணம் என்று தெரிவிக்கப்பட்டது. அப்போது, இங்கே பாலு சகோதரர்கள் பாங்குற நடத்தி வந்த 'கலை' மாத இதழில் நானும் எஸ். இராதா கிருட்டிணன் என்பாரும் துணையாசிரியர்களாகப் பணியாற்றி வந்தோம்.

தேனாம்பேட்டையில் உள்ள ஏ.ஜி. அலுவலகம் எதிரே இப்போது 'சிட்-சட்' என்றோர் உணவகம் இயங்கி வருகிறதல்லவா? அதுதான் 'கலை' அலுவலகமாக இருந்தது. அப்போது பாலு சகோதரர்களின் சொந்தக் கட்டிடம் அது. அங்கிருந்து இராமன் தெருவில் பாவேந்தர் வந்து தங்கி யிருந்த 'பாரதிதாசன் பிக்சர்ஸ்' ஒரே ஒரு மைல்தான் இருக்கும்.

எனினும், பொருள் சம்பாதிக்க எண்ணிச் சென்னைக்கு வந்திருந்த நான் போய்ப் பார்த்தால் 'அங்கேயே வந்துவிடு' என்று கூறி விடுவாரோ என்ற அச்சத்தில் அவரது வருகை தெரிந்தும் ஒரு வார காலத்திற்குமேல் அந்தப் பக்கம் போகாதிருந்தேன். ஆனால், என்னைப் போலவே இருக்கப் பாவேந்தரால் முடியவில்லை. ஒருநாள் 'பட்டுக்கோட்டை இராசேந்திரன், கலை, சென்னை-18' என்கிற-பாவேந்தரே எழுதிய முகவரியோடு ஒரு அஞ்சல் அட்டை எண் அலுவலக முகவரிக்கு வந்தது.

'அன்புள்ள இராசேந்திரர்க்கு,

நலம். நான் சென்னைக்கு வந்திருப்பது தெரிந்திருக்கும்,
அழைத்தால்தான் வருவதாக உத்தேசமா?'

பாரதிதாசன்

என்கிற நான்கே வரிகளோடு காணப்பட்ட அந்தக் கடிதம் என்னை அப்படியே ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. அன்று மாலையே போய்ப் பார்த்தேன். அழமாட்டாக் குறையாக அதுவரை நான் வர இயலாமைக் கான பொய்க் காரணங்களைச் சொன்னேன்.

அலுவலகம், பணி, சம்பளம் பற்றியெல்லாம் விசாரித்தான பிறகு 'கம்பெனி வேலையெல்லாம் இந்தப் புள்ளையாண்டான் தாம்பா பார்த்துக் கிறான். நீயும் அப்பப்ப வந்துபோ... ஒத்தாசையா இருக்குமில்லே?' என்றார் பாவேந்தர். அங்கேதான், அப்போதுதான் பொன்னடியானை நான் முதன் முதலாகச் சந்தித்தேன்.

**கடைசிக் குயில்**

அந்த எண் 10, இராமன் தெரு, சென்னை-17 என்ற முகவரியில் இருந்துதான், பல்வேறு முயற்சிகளுக்குப் பிறகு குயில் ஏடு 15.4.1962இல் நான்காவது பிறவி எடுத்தது. திங்கள் இருமுறை ஏடு என்றும் 16 பக்கங்கள்,

விலை 16 காசு; குரல்: 1 இதழ்: 1 என்றும் திருவள்ளுவராண்டு, தமிழ் மாதங்களின் பெயரெல்லாம் முன் அட்டையிலே தாங்கி வெளிவந்தது அந்த ஏடு. இதற்கெல்லாம் மேலே, பூமிப்பந்தின் படம் – அதன் மேலே குயில் என்ற எழுத்தும், அதைவிடச் சற்றே சிறிய எழுத்தில் – கீழே 'சென்னை' என்ற எழுத்தும், அதைவிடச் சற்றே சிறிய எழுத்தில் 'அனைத் துலகத் தமிழ்க் கவிஞர் பெருமன்ற வெளியீடு', 'ஆயிரம் கவிஞர்கள் எழுதும் ஏடு' என்ற குறிப்புகளும் காணப்பட்டன.

இவற்றுக்கெல்லாம் கீழே முன்பக்கமே 'தமிழுக்கு வாழ்வதே வாழ்வு' என்ற தலைப்பில், புரட்சிக் கவிஞரின் கனிச்சொல் கவிதை அணி செய்தது. முதல் ஏட்டில் அவ்வாறு இடம் பெற்றிருந்த கவிதை இது:

**தமிழே உனக்கு வணக்கம்**
**தாயின் புகழ் இந்த உலகில் மணக்கும்**
**– தமிழே உனக்கு வணக்கம்.**
**இமை நேரமும் உனைமறக்க மாட்டோம்**
**எம்கடன் ஆற்றாமல் இறக்க மாட்டோம்**
**அமுதத் தமிழைத் துறக்க மாட்டோம்**
**அடிமையை ஒப்பினால் சிறக்க மாட்டோம்**
**– தமிழே உனக்கு வணக்கம்.**
**உனக்கு வந்தநலம் எமக்கு வந்ததாகும்**
**உனக்கு வந்தவெற்றி எமக்கு வந்ததாகும்**
**தனக்கென வாழ்ந்தது சாவுக் கொப்பாகும்**
**தமிழுக்கு வாழ்வதே வாழ்வ தாகும்**
**– தமிழே உனக்கு வணக்கம்.**

### *சிறப்பு அம்சங்கள்*

'பாவலர்கள் குயிலில் எழுதிவரும் பாடல்களைத் தொகுத்து, அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, அனைத்துலகும் அறியும் வண்ணம் செய்தலும் பெருமன்றில் பாவலர்கள் வரைவனவும் அவர்களின் உருவப் படத்துடன் வாழ்க்கை வரலாற்றை வெளியிடுவதும் குயிலின் பணியாகும். குயில் உறுப்பினர்கள் வேறு பலரையும் உறுப்பினராக்கிக் குயிலை வாங்கச் செய்தலும் கடனாகும், என்றெல்லாம் ஏட்டின் நோக்கம் தெரிவிக்கப் பட்டிருந்தது.

அதே போல் 16.2.1962 குயில் இதழில் மட்டும் 30 கவிஞர்களைச் சிறப்பிக்கும் வகையில், அவர்கள் புகைப்படங்களோடு அவரவர் கவிதைகள் வெளியிடப்பட்டிருந்தன. இவற்றையெல்லாம்விட மேலாக,

ஒவ்வொரு கவிஞரையும் பாராட்டிப் பாவேந்தர் எழுதிய சிறப்புமிக்க குறள் வெண்பாவும் பக்கங்களில் அணி செய்தது.

**கோவேந்தன் பாடிக் குவிக்கின்றான், நாளடைவில்**
**பாவேந்தன் ஆய்விடுவான் பார்.**

**தமிழன்பன் நல்ல தமிழ்க்கவிஞர் வாழ்க**
**தமிழன்பு மேலும் தழைத்து.**

**தஞ்சை முத்துத்தாசன் தமிழ்ப்பாட்டுக் கென்பரிசு**
**கொஞ்சமுத்தா கோடிமுத்துக் கள்.**

அத்தகைய குறள் வெண்பாக்களில் சில இவை.

பாவேந்தரின் சில பாடல்களை முருகுசுந்தரம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும் வெளியிட்டார்.

தானிருந்த பெரிய மாளிகைக்கு வாடகை தர இயலாத நிலையில், அதன் 'அவுட் ஹவு'ஸில் குடிபுகுந்திருந்தார் கவிஞர். இரண்டு மூன்று முறை போய்ப் பார்த்தேன். அந்த எளிய நிலையிலும் எங்காவது குயிலின் குரல் கேட்டால் 'அடடா, அந்த இனிய குரல் எப்படியிருக்கு பார்த்தியா?' என்று ரசித்தது அந்தக் கவியின் உள்ளம்; பழனியம்மாளும் உடனிருந்தார்.

***பாவேந்தர் மறைவு***

எப்பாடுபட்டும்கூட எட்டாவது இதழோடு (1.8.1962) சென்னைக் குயில் நின்றுபோய்விட்டது. இதற்கடுத்த இரண்டாண்டிற்குள்ளாகவே நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து, அன்பே நிறைந்து நிறைந்து, ஊற்றெழும் கண்ணீரதனால் உடம்பு நனைந்து நனைந்து - நாமெல்லாம் குமுறியபடி, புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரும் தம் இன்னுயிர் நீத்து, மீளாத் துயில் கொண்டுவிட்டார்.

21.4.1964இல் பெரிதும் உடல் நலிவுற்றுச் சென்னையில் உள்ள அரசுப் பொது மருத்துவமனையிலே சேர்க்கப்பட்டிருந்த புரட்சிக் கவிஞர் அவர் கள் உயிர் நீத்தார். அப்போது பி.எஸ். இளங்கோ அவர்கள் நடத்தி வந்த 'மாலைமணி' வார ஏட்டிலே பணிபுரிந்து வந்த நான், பாடிப் பறந்த அந்தக் குயிலின் உடலைப் போய்ப்பார்த்துக் குலுங்கிக் குலுங்கி அழுதேன். அவர் பிரிவாற்றாமல் ஐந்து எண் சீர் விருத்தங்கள் அழுத கண்ணீரோடு எழுதி வெளியிட்டேன்.

பாரதிதாசனார் மறைவின்போது, அறிஞர் அண்ணா அவர்கள் இந்தி எதிர்ப்புப் போரில் ஈடுபட்டுச் சிறையிலே இருந்தார்.

'பாரதிதாசன் என்பது இனியொரு தனிமனிதன் பெயரல்ல; தமிழின்பம் பொழிகின்ற கவிதைத் தொகுப்பின் பெயர்!..' என்றெல்லாம், தமது இரங்கற்செய்தியிலே கலைஞர் அவர்கள் குறிப்பிட்டிருந்தார்.

**எனக்குத் தமிழெனில் இதுவென உணர்த்திய**
**தனக்குநே ரில்லாத் தனிப்பெருங் கவிஞர்**
**பாரதி தாசப் பெருந்தகை**
**சீரடி போற்றினேன், செந்தமிழ் வாழ்கவே!!**

# இதழாளர் சி.பி. சிற்றரசு

## வே. கபிலன்

திராவிட இயக்கமானது எழுத்து - பேச்சு என்னும் இரண்டையும் இரண்டு கண்களாகப் பெற்றிருந்த - பெற்றிருக்கக்கூடிய ஒரு மாபெரும் இயக்கமாகும். இதுபற்றி, 'ராணி' என்னும் வார இதழ் ஆசிரியர் அ.மா. சாமி அவர்கள், 'திராவிட இயக்கம்' என்னும் தலைப்பில் வழங்கி இருக்கும் கருத்து வருமாறு:

'இந்தியா விடுதலை அடைந்த பின்பு தமிழ்நாட்டில் காங்கிரசுக்கு அடுத்தபடி ஆட்சிப் பொறுப்பு ஏற்றது திராவிட இயக்கமே. இவ்வளவு வலிமை மிகுந்த இவ்வியக்கத்தின் தலைவர்கள், காங்கிரசுத் தலைவர்களைவிடப் பெரிய அளவில் பேராற்றலுடன் எழுத்தையும் பேச்சையும் தங்கள் இயக்கத்தின் பெருங்கருவிகளாகப் பயன்படுத்திக் கொண்டவர்கள். எனவே, தமிழ் இதழியல் வரலாற்றில் - வளர்ச்சியில் - திராவிட இயக்கத்துக்கு நிச்சயம் பெரும்பங்கு உண்டு.

இந்தப் பாரத நாட்டைக் குறிப்பாகப் பைந்தமிழ் நாட்டை ஆங்கிலேயர் ஆட்சி செய்து கொண்டிருந்த காலத்திலேயே அவர்களிடமிருந்து இந்த நாட்டை விடுவிக்கவும் அன்றைய தமிழ்ச் சமுதாயத்தில் இருந்த ஏற்றத் தாழ்வைப் போக்கவும் தீண்டாமையைத் தீக்கிரையாக்கவும், சாதி வெறியைச் சாய்க்கவும் பெண்ணுரிமைக்காகப் போராடவும் மதமான பேயை மாய்க்கவும் மூடப்பழக்க வழக்கங்களை முறியடிக்கவும் பொருந்தாத் திருமணத்தைப் புதைகுழிக்கு அனுப்பி வைக்கவும் அறியாமையை அகற்றி, படிக்காத பாமர மக்களெல்லாம் கல்விக்கண் பெற்றிடவும் சகுனங்களை நெட்டித் தள்ளவும் கடவுள் பெயரால் நெடுங் காலமாக நிகழ்ந்துவரும் அநியாய -அக்கிரமங்களை அகற்றவும் சமதர்ம சமுதாயத்தை உருவாக்கவும் அரும்புவிட்ட சுயமரியாதை இயக்கமும் மொட்டான நீதிக்கட்சியும் மலரான திராவிட கழகமும் மணம் பரப்பிய - இன்னமும் அந்த மணத்தைப் பரப்பிக் கொண்டிருக்கிற தி.மு.க.வும் வானோங்கி வளர்வதற்கு முதல்வராகவும் தமிழகத்தின் விடிவெள்ளியாகவும் இருந்தவர் பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்களாவார்.

பேரறிஞர் அண்ணா முதற்கொண்டு, இதழாளர் சி.பி. சிற்றரசு, முத்தமிழறிஞர் கலைஞர் வரையிலும் பெரியார் வழியைப் பின்பற்றி எழுதிய எழுத்தும் பேச்சும் வேலும் வாளும் போன்றவையாகும்.

இதழாளர் சி.பி. சிற்றரசு அவர்களின் எழுத்திலும் பேச்சிலும் எப் போதுமே புனல் இருந்ததில்லை; அறியாமையைச் சாம்பலாக்கும் அனலே வீசிக் கொண்டிருந்தது.

'கோபம் இருக்கும் இடத்திலே குணம் இருக்கும்' என்னும் வாசகம், அவரைப் பொறுத்தவரையிலும் நூற்றுக்கு நூறு பொருத்தமுடையது.

அந்நாளில் அவர் தம் வாயிதழ்களைத் திறப்பாரானால் எதிரிகள் உதிரிகளாகி ஓடி ஒளிவர். எழுத்திலும் அப்படித்தான்; அவர் எழுதும் கட்டுரையை அரசியல் விமர்சனத்தை - மேனாட்டு மேதைகளின் வரலாற் றைப் படிக்க முற்பட்டால் கோழையும் வீரனாவான்; கொள்கையின் பீடமாவான்.

அந்த அளவுக்கு அவர் இருந்ததற்கு அடிப்படையான அவருடைய இளமைப் பருவ வரலாற்று முகத்தைச் சற்றே திரும்பிப் பார்த்துவிட்டால் வாயிதழாலும் எழுத்திதழாலும் தமக்கென்று ஒரு தனித்தன்மையை வகுத்துக்கொண்டு, கடைசி வரையிலும் இலட்சிய விளக்காய் இருந்ததற் குரிய காரணம் நமக்கு விளங்கிவிடும்.

### காஞ்சி பெற்றெடுத்த கற்பூரக் கண்மணிகள்

எந்தப் பல்லவர், காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு வட மொழியை வளர்த்தார்களோ, அதே காஞ்சியில் அருந்தமிழை வளர்ப்பதற்கும் - அறியாமையால் இருண்டு கிடந்த தமிழர் சமுதாயம் அறிவொளியால் மறுமலர்ச்சி பெறுவதற்கும் இருவர் பிறந்தனர்.

ஒருவர், பேரறிஞர் அண்ணா; மற்றொருவர் இதழாளர் சி.பி. சிற்றரசு.

பேரறிஞர் அண்ணா அவர்கள் பிறப்பதற்கு ஏழாண்டுகளுக்கு முன்பே, இதழாளர் சி.பி. சிற்றரசு அவர்கள் 1902ஆம் ஆண்டு, தெலுங்கு மொழி பேசும் குடும்பத்தைச் சேர்ந்த பெத்தண்ணா - இலட்சுமி என்னும் பெற்றோருக்கு மகனாகப் பிறந்தார்.

### இளமைப் பருவமும் சி.பி.சி.யின் சுபாவமும்

'சின்னராசு' என்னும் பெயரோடு வளரும்போதே முரட்டுத்தனமும் பிடிவாத குணமும் அஞ்சா நெஞ்சமும் பெற்றவராக இருந்தார். 'தந்தை சொல் மிக்கதொரு மந்திரம் இல்லை' என்னும் முதுமொழிக்கிணங்க வைணவ மதத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தார். வளர்பிறை வயதில் தெலுங்கையும் தமிழையும் ஆங்கிலத்தையும் கற்றார்.

அவருடைய தந்தை, சொந்தமாக நடத்தி வந்த கடை, சந்தர்ப்ப சூழ்நிலையில் வீழ்ச்சி கண்ட வேதனையால் விளைந்த நோயால் விழிகளை மூடிவிட்டார். சி.பி.சி. வேலூரில் இருந்த தாய்மாமன் வீட்டில் தாயோடும் உடன்பிறந்தாரோடும் தங்கினார். அப்போது தாய்மாமன் தொடங்கி இருந்த தீப்பெட்டித் தொழிலில் தாமும் சேர்ந்து உழைத்தார். இருவர் உழைப்பும், அப்போது தோன்றிய விம்கோ தீப்பெட்டி தொழிற் சாலையால் வீணானது.

அப்போது தாய்மாமனுக்கும் இவருக்குமிடையே ஏற்பட்ட போராட் டத்தால் அனைவரையும் மறந்தநிலையில் வீட்டைவிட்டு வெளியேறி னார். யாருடைய துணையுமின்றி நேராகக் கோலார் தங்கவயலுக்கு வந்தார். உயிரைத் துரும்பாக எண்ணி வெடி வைக்கும் பணியில் சேர்ந்தார்.

எந்த ஒரு தாய்மாமன் சொல்லைத் தாங்க முடியாமல் வீட்டைவிட்டு வெளியேறி இரண்டாண்டு காலம் கோலாரில் வேலை பார்த்து வந்தாரோ, அதே தாய்மாமன் தன்னைத் தேடி வந்து சொன்ன செய்தியைக் கேட்டதும் பதறிப் போனவர் வீட்டுக்கு வந்தார். நோயால் படுத்த படுக்கையாகிக் கிடக்கும் தாயைக் கண்டதும் கலங்கினார்.

மகனைக் கண்ட மாதா புத்துயிர் பெற்றதுபோல் மகிழ்ந்தார். தாயின் உருக்கமான விருப்பத்திற்கிணங்கச் சுலோசனா என்னும் அம்மையாரை மணம் புரிந்துகொண்டார். பள்ளிப் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தும் எழுதப் படிக்கத் தெரியாதவர்க்குப் பத்திரம் எழுதிக் கொடுத் தும் வாழ்வை நகர்த்திவரும் நாளில் தாயை இழந்தார். அப்போதுதான் அவருடைய பார்வை சமுதாயத்தின் மீது படர ஆரம்பித்தது. அப்போது அவருக்கு முப்பத்து மூன்று வயது.

**சுயமரியாதைத் திருமணமும் சுடர்பெற்ற சி.பி.சி.யும்**

1935ஆம் ஆண்டு அவர் குடியிருக்கும் பகுதியில் சுயமரியாதை திருமணம் செய்து வைக்க, தந்தை பெரியார் வந்தார். தற்செயலாக அவருடைய பேச்சைக் கேட்ட சி.பி.சிற்றரசு பெரியார் கருத்திலிருந்த உண்மையை நெஞ்சில் ஏற்றார். அன்று முதல் பெரியாரால் நடத்தப்பட்டு வந்த குடியரசு என்னும் வார ஏடு, அவருக்குப் பகவத்கீதையாக மாறியது. பேசும் ஆர்வம் அவரை அறியாமலே அவருள் பீறிட்டெழுந்தது.

**அண்ணல் தங்கோவால் சின்னராசு — சிற்றரசானார்**

7.5.1936 ஆம் ஆண்டில் வேலூர் திடலில் அண்ணல் தங்கோ தலைமையில் நடந்த சுயமரியாதைக் கூட்டத்தில் முதன்முதலாகச் சி.பி.சி. அவர்கள் பேசினார். அவருடைய பேச்சிலிருந்த வேகத்தை அறிந்த

அண்ணல் தங்கோ, 'இதற்குமுன் இங்கு வீரமுழக்கமிட்ட சின்னராசு என்பவர் பெயரைச் சிற்றரசாக மாற்றி வைக்கிறேன், எதிர்காலத்தில் சிற்றரசு பேரரசாகட்டும்'என்று வாழ்த்தினார்.

அதன் பிறகு சுயமரியாதை இயக்கத் தோழர் ஒருவரால் தந்தை பெரியாரின் தொடர்பைப் பெற்றார். அன்று முதல் நீதிக் கட்சிக்கும் பெரியாரின் சுயமரியாதைக் கொள்கைக்கும் கவசமானார்.

மீண்டும் 17-6-37ஆம் ஆண்டு அதே வேலூர் பொதுக்கூட்டத்தில் வாயிதழைத் திறந்த சி.பி.சிற்றரசு 'தோழர்களே! நாடுவிட்டு நாடு வந்தோன் நமக்கிங்கே நாமத்தைப் போட்டுவிட்டான். நம்மவரோ அதை இன்னும் உணரவில்லை. ஊமத்தம் பூவானோம்; உன்மத்தன் வாழுகிறான். இதற்கு முன்னே நெற்றிக்கு நான் போட்ட நாமக்கட்டி இன்றிருந்தால் வேலூர் கோட்டையாவது கொஞ்சம் வெளுத்திருக்கும்'[6] என்றார்.

அக்கால ஆங்கிலேயர், கர்நாடகம், ஆந்திரம் கேரளம், தமிழகம் ஆகிய நான்கு மாநிலங்களையும் ஒன்றாக்கி, 'சென்னை மாகாணம்'[7] என்றே அழைத்து வந்தனர். இம்மாகாணத்தின் முதல்வராக அன்றிருந்த இராஜாஜி அவர்கள், பள்ளிகளில் இந்தியைப் புகுத்தும் முயற்சியில் தீவிரமாய் இருந்தார்.

அதைக்கண்ட இதழாளர் சி.பி. சிற்றரசு, 'சுயமரியாதை இயக்க இலட்சிய வீரர்களே! நாட்டுப்பூ இங்கிருந்து நல்ல மணம் வீசுகையில், காட்டுப்பூ நமக்கெதற்கு? தொத்தப் பார்க்கும் தொழு நோயை - இந்திப் பேயைத் தொலைப்பதற்கான வேளை இது.' என்று அக்கால சர்ச்சிலைப் போல் நாடெங்கிலும் முழக்கமிடலானார். கலைவாணர் என். எஸ்.கே. அவர்களைப் போல் மக்களை நாளும் சிரிக்கவைத்ததோடு சிந்திக்கவும் செய்த செம்மல் சி.பி. சிற்றரசு.

1938ஆம் ஆண்டு இராஜாஜி, கட்டாய இந்தியைப் பள்ளியில் புகுத்தி, சட்டத்தை இயற்றியதோடு நில்லாமல், அப்போதே அதை நடைமுறைக்குக் கொண்டு வந்தார்.

அந்த அநியாய சட்டத்தை எதிர்த்து, தந்தை பெரியார் தலைமையில் ஆயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் போராடினர். அதன் விளைவாக, 6.12.38ஆம் ஆண்டு பெரியாருக்கு ஓராண்டு கடுங்காவல் தண்டனை அளித்துப் பெல்லாரி சிறையில் அடைக்கப்பட்டார்.

அதனால் கொதிப்படைந்த நீதிக் கட்சித் தலைவர்களும், சுயமரியாதை இயக்கத் தொண்டர்களும் வேலூரில் மாநாடு கூட்டினர். அம்மாநாட்டில் சர்.ஏ.டி. பன்னீர் செல்வம், ராஜா சர். முத்தையா, அஞ்சா நெஞ்சன் அழகிரி, குத்தூசி குருசாமி போன்றவர் பேசிவிட்ட பிறகு நம்முடைய

இதழாளர் சி.பி.சிற்றரசு வாயிதழைத் திறந்ததுமே எழுந்த மக்கள் கரவொலி அவருடைய பேச்சு முடியும் வரையிலும் இருந்தது.

அங்கு மட்டுமா? செங்கை சீர்திருத்த மாநாட்டில் மார்டின் லூதராக மாறினார்; திண்டிவனத்தில் நடைபெற்ற மாநாட்டில் வால்டேராக மாறி, பகுத்தறிவுப் பகலவன் பெரியாரை உடனே விடுவிக்குமாறு போர்க்குரல் எழுப்பினார்.

இந்தியை எதிர்த்து உயிரோடு சிறைக்குச் சென்ற தாளமுத்து - நடராசன் என்னும் இருவரும் பிணமாக வெளியே வந்தனர். அதைக் கேள்விப்பட்ட சி.பி.சிற்றரசு அவர்களின் முகம் நெருப்பானது. அதனால் அதைத் தொடர்ந்து நடந்த மாநாடுகளில் - மன்றங்களில் - மாநகரங்களில் - சிற்றூர் - பேரூர்களிலெல்லாம் வாயிதழ்களால் அவர் விதைத்த நெல் மணிகளால் - விளைந்த பயிர் - விழித்தெழுந்த மக்கள் உணர்ச்சி மகத்தானது.

அப்போது கோட்டையை நோக்கிப் பெரியார் இயக்கத்தினர் மட்டு மல்ல; சில தேசிய இயக்கச் சட்டமன்ற உறுப்பினர்களும் சேர்ந்து சென்றனர்; 'பெரியாரை விடுதலைசெய்' என்று அவர்களும், அவர்களுக்குப் பின்னால் வந்திருந்த தொண்டர்களும் எழுப்பிய இடிமுழக்கத்தால் இராஜாஜியின் கல்மனம் கரையத் தொடங்கியது. அதனால் 22.5.39 ஆம் நாளன்று தந்தை பெரியார் விடுதலையானார்.

### 'வசிஷ்டர் வாயால் பிரம்மரிஷி' பட்டம்

தந்தை பெரியாருக்கென்று சென்னைக் கடற்கரையில் மிகப்பெரிய அளவில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. இலட்சக்கணக்கான மக்கள் திரண்டிருந்த அம் மாபெரும் கூட்டத்தில் சர்.ஏ.டி. பன்னீர் செல்வம், பேரறிஞர் அண்ணா, கி.ஆ.பெ. விசுவநாதம், அஞ்சா நெஞ்சன் அழகிரி, அ. பொன்னம்பலனார் ஆகியோர், தந்தை பெரியாருக்குப் புகழாரம் சூட் டிய பிறகு சி.பி.சிற்றரசு பேச எழுந்தார். அப்போது அவரை நோக்கிக் குத்தலான ஒரு கேள்வித்தாள் வந்தது. அதைக் கண்ட மறுநொடியே தந்தை பெரியார் உட்பட அனைவருமே வயிறு குலுங்கக் குலுங்கச் சிரிக்கும் படியாக அதற்குப் பதில் வழங்கினர். கடைசியாகப் பேசிய தந்தை பெரியார் அவர்கள், சி.பி.சிற்றரசு அவர்களின் அறிவுப்பூர்வமான சிந்தனையை - சிரிக்க வைத்த திறனை வெகுவாகப் பாராட்டியதோடு நில்லாமல், 'சிந்தனைச் சிற்பி' என்னும் மகுடத்தை அவருக்கு அணிவித்தார்.

### திராவிட கழகமும் 'தீப்பொறி' இதழும்

இவ்வாறு வாயிதழாளராக வளர்ந்திருந்த சிந்தனைச் சிற்பி சி.பி.சி யின் நெஞ்சம், 1942ஆம் ஆண்டு திராவிட நாடு கேட்கும் முடிவோடு திராவிட கழகம் உதயமான பிறகுதான் இதழொன்றைத் தொடங்கி முன்வந்தது.

அக்கால ரஷ்யாவில் பொதுவுடைமைத் தந்தையாக விளங்கிய லெனினால், 'இஸ்காரா' என்னும் பெயரில் ஓர் இதழ் நடத்தப்பட்டது. 'இஸ்காரா' என்றால், தமிழில், 'தீப்பொறி' என்று பொருள். அதாவது, தம் உணர்வுகளை மிகவும் வேகமாகத் தெரிவிப்பதென்று அதற்குப் பொருளாகும்.

அந்தக் கருத்தின் அடிப்படையில் வேலூரில், 'தீப்பொறி' என்னும் வார இதழைத் தொடங்கினார். அதில் ஆங்கிலேயர் ஆதிக்கத்தையும் பார்ப்பனீயத்தின் அநியாய - அக்கிரமத்தையும் எடுத்துக்காட்டினார். படிப்பவர் நெஞ்சம் வீறு கொண்டு எழும்படியாக ரோம் நாட்டுச் சீசரை - கிரேக்க நாட்டுச் சாக்ரடீசை - சீர்திருத்தவாதி இங்கர்சாலை - விடுதலைக்கு வித்திட்ட வால்டேர், ரூசோவை - நீக்ரோ மக்களுக்கு விடுதலை பெற்றுத் தந்த ஆப்ரகாம் லிங்கனை - ஏழைப்பங்காளன் எமிலி ஜோலாவைத் தம்முடைய எழுதுகோலால் பாமர மக்களுக்கு அடையாளம் காட்டினார். என்ன செய்வது? சந்தர்ப்ப - சூழ்நிலையால் 'தீப்பொறி' இதழை நிறுத்தி விட்டார். பழையபடி வாயிதழால் நாட்டு மக்களிடையே நாளும் பொழுதும் நடமாட முற்பட்டார். ஆனாலும் அவர் எழுதுவதை நிறுத்தவில்லை.

## போர்வாள் நாடகமும் தலைநகர் அறிமுகமும்

ஓய்வு கிடைக்கும் நாட்களில்' போர்வாள்' என்னும் தலைப்பில் ஒரு நாடகத்தை எழுதியதோடு நில்லாமல், அந்நாடகத்தில் நடிக்கவும் முற்பட்டார்.

முதன் முதலாகக் கும்பகோணத்தில் நடைபெற்ற அந்நாடகத்தை, தந்தை பெரியாரும் பேரறிஞர் அண்ணாவும் கண்டுவிட்டு வெகுவாகப் பாராட்டினர். அதே நாடகம், திருவாரூரில் 63 நாட்கள் தொடர்ந்து நடந்த போதுதான், இன்று தமிழினத்தின் தலைவராகவும் மாண்புமிகு தமிழக முதல்வராகவும் விளங்கும் கலைஞர் அவர்களுக்கும், இதழாளர் சி.பி.சி. அவர்களுக்குமிடையே நெருக்கமான தொடர்பு ஏற்பட்டது.

இப்படி, அவருடைய தொண்டு பல்வேறு துறைகளின் வாயிலாகக் கழகத்துக்கென்று பயன்பட்டுக் கொண்டிருந்தபோதுதான் ஓர் இருண்ட கட்டம் உருவானது. அதுவும் திருவண்ணாமலையில் இராஜாஜியும் பெரியாரும் சந்தித்து உரையாடிய பிறகு ஏற்பட்ட இருட்டு என்றால் அது மிகையாகாது.

எந்தப் பெரியார் பொருந்தாத் திருமணத்தைப் பற்றி வன்மையாகக் கண்டித்து எழுதியும் பேசியும் வந்தாரோ, அவரே அதற்கு அடிமையாகி விட்டதால், பேரறிஞர் அண்ணா உட்பட பெரும்பாலோர் அவரை விட்டுப் பிரிந்து வந்தனர்.

**'விடுதலை' அறிக்கையும் தி.மு.கழக உதயமும்**

அந்தத் தருணத்தில் தந்தை பெரியாரால் நடத்தப்பட்ட 'விடுதலை" நாளிதழில் ஓர் அறிக்கை வெளிவந்தது. அதாவது, 'பெரியாரை அண்ணாத் துரை கொலை செய்ய சதி என்பதே அது. அதைக் கண்ட சி.பி. சிற்றரசு பதறிப்போனார். அப்போதே காஞ்சிக்குச் சென்றார். அண்ணாவைக் கண்டு பெரியார்மீது நீதிமன்றத்தில் வழக்கு தொடுக்குமாறு கேட்டுக்கொண்டார். அதைக் கேட்டு அண்ணா தயங்கினார். சி.பி.சிற்றரசு விடவில்லை. 'அண்ணா' நமக்கு எதிரிகள் ஏராளம். அய்யாவின் அறிக்கையைச் சாதகமாகப் பயன் படுத்திக் கொண்டு அவருக்கோ, மற்றொருவருக்கோ ஏதேனும் விபரீதம் நேரிட்டால், அந்தப் பழி உங்கள் மீதுதான் விழும். அதற்காகவாவது வழக்கு தொடுத்தாக வேண்டும் புறப்படுங்கள்!' என்று கூறி அவரை வற்புறுத்தி அழைத்துக்கொண்டு சென்னைக்கு வந்தார். பெரியார்மீது அண்ணா வழக்கொன்று தொடுக்கச் செய்தார்.

அதன் விளைவால் நீதிமன்றத்துக்கு வந்த தந்தை பெரியார் நீதிபதி கேட்ட கேள்விக்குப் பதிலாக, அப்படியெல்லாம் ஒன்றுமில்லை; 'தவறி வந்துவிட்ட அறிக்கை' என்று கூறி நீதிபதிக்கு முன்னே கையெழுத்துப் போட்டுவிட்டுச் சென்றார். அப்போது பேரறிஞர் அண்ணா, சி.பி.சியின் கைகளைப் பிடித்துக்கொண்டு, ஆனந்தக் கண்ணீர் வடித்தபடி நன்றி தெரிவித்துக் கொண்டார். பின்னர், அவரோடு வெளிவந்த எல்லோருடைய முடிவின்படி, 1949ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 17 ஆம் நாளன்று தி.மு.கழகம் ஆரம்பமானது.

***சிந்தனைச் சிற்பியும் சிறப்புச் சொற்பொழிவும்***

பொதுவாக, தி.மு.க.வின் தொடக்க காலத்தில், அதன் வளர்ச்சிக்கான நிதிக்கென்று ஆங்காங்கு ஒவ்வொரு தலைப்பில் ஒவ்வொருவரும் சிறப்புச் சொற்பொழிவு செய்தனர். குறிப்பாக, சென்னையிலுள்ள கோகலே மண்டபத்தில், செயின்மேரீஸ் மண்டபத்தில், மெமோரியல் மண்டபத்தில் அடிக்கடி சிறப்புச் சொற்பொழிவு நடைபெற்றது. அப்படி நடைபெற்ற சிறப்புச் சொற்பொழிவுகளில் சி.பி.சி.யின் பங்கு பெரிதாகும்.

ஜூலியஸ் சீசரைப் பற்றிப் பேசத் தொடங்கினால் அங்கே சி.பி.சி.யைப் பார்க்கமுடியாது; சீசரைத்தான் பார்க்கமுடியும். அதுபோலவே, சாக்ரடீசைப் பற்றிப் பேசத் தொடங்குவாரானால், மண்டபத்தில் எந்த ஒரு மூலையில் ஓர் ஊசி விழுந்தாலும் அதன் ஓசை கேட்கும். அந்த அளவுக்கு மக்களி டையே அமைதியும் மலைப்பும் இரண்டறக் கலந்திருக்கும்.

பெரும்பாலும் அவருக்கு வழங்கப்படும் தலைப்புகளெல்லாம் மேனாட்டு மேதைகளைப் பற்றியதாகவே இருக்கும். அப்படி அவர்

ஒவ்வொரு தலைப்பிலும் ஒவ்வொரு காலக் கட்டத்தில் பேசிய சிறப்புச் சொற்பொழிவே, பின்னர், ஒவ்வொரு நூலாக வெளிவந்துள்ளது. இவ் வுண்மையை 'விஷக்கோப்பை'[9] என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள நூலின் முன்னுரையில் அவரே குறிப்பிட்டிருப்பதை ஈண்டு காணலாம்.

'மக்கள் அறிவு வளர்ச்சி பெறவேண்டும்; அரசியல்வாதிகள் மேனாட்டு வரலாறுகளை உணர வேண்டும்; மாணவர்கள் இரண்டையும், அதாவது, அறிவையும் வரலாற்று உண்மைகளையும் பெறவேண்டும் என்பதே என் விருப்பம்.

ஒரு நூலை எழுதத் தொடங்குமுன் அதைப் பற்றி மன்றங்களிலோ - மண்டபங்களிலோ - பல்கலைக் கழகங்களிலோ நான் பேசிவிடுவது வழக்கம். அதே நிலையின்தான் இருபதுக்கு மேற்பட்ட நூல்கள் வெளி வந்துள்ளன.

அத்தகைய வியத்தகு ஆற்றலும் ஆங்கிலத்தில் புலமையும் பெற்றுத் திகழ்ந்தவர் வேலூரில் தொடங்கிய குடும்பத்தைக் காலச்சூழ்நிலைக் கேற்ப சேலம், திருச்சி மாவட்டங்களுக்கு மாற்றி நடத்தி வந்தார்.

அவர் திருச்சிக்கு வந்துவிட்ட பிறகுதான் இலங்கையிலிருந்த தி.மு.கழகக் கண்மணிகள் அவரை இலங்கைக்கு வந்து சிறப்புரையாற்று மாறு அழைப்புவிடுத்திருந்தனர். அவரும் அதற்கு ஒப்புக்கொண்டு, அப்போது கழகத்தின் பொதுச்செயலாளராக இருந்த பேரறிஞர் அண்ணாவைச் சந்திக்க, 5.4.53இல் சென்னைக்கு வந்தார். அண்ணாவின் ஆலோசனையைக் கேட்டுக்கொண்டு இலங்கைக்குச் சென்றார். அண்ணா வின் அறிவுரையால் அங்குள்ள பல இயக்கத் தலைவர்களையும், இலங் கையில் இருந்த இந்திய தூதரையும், அந்நாட்டுப் பிரதமரையும் அவரால் கண்டு பேச முடிந்தது.

இலங்கையில் பல்வேறு பகுதிகளில் பேசிவிட்டுத் தமிழ் நாட்டுக் குத் திரும்பி வந்ததும் அங்குப் பல்வேறு தலைப்புகளில் பேசிய பேச்சுக் களையெல்லாம் எழுத்தாக்கி, 'இலங்கை எதிரொலி' என்னும் தலைப்பில் நூலாக்கி, அப்போது திருச்சியிலிருந்த தமிழ் மன்றத்தின் வாயிலாக நாட்டு மக்களுக்கு வழங்கினார்.

**சென்னை வருகையும் 'தீச்சுடர்' உதயமும்**

பின்னர் சென்னைக்கு அதுவும் வட சென்னையிலுள்ள ஏழுகிணறு பகுதிக்கு வந்து வாடகை வீட்டில் வசிக்கலானார். தாம் குடியிருக்கும் வீட்டிலேயே 1956ஆம் ஆண்டில், 'தீச்சுடர்' என்னும் தலைப்பில் வார இதழைத் தொடங்கினார்.

1952ஆம் ஆண்டிலேயே பேரறிஞர் அண்ணா அவர்களால் நான் அவருக்கு அறிமுகமாகி இருந்ததால் என்னையே தம்முடைய இதழுக்குப் பொறுப்பாசிரியராக நியமித்தார்.

அப்போது அடிக்கடி வெளியூர்க் கூட்டங்களுக்குப் போய்விடுவார். ஆனாலும் அந்தந்த வாரத்துக்குரிய தலையங்கத்தை - அந்நாள் அரசின் கொடூரமான செயலை மையமாகக் கொண்ட கட்டுரையை எந்தெந்த ஊரில் இருக்கிறாரோ, அந்தந்த ஊரிலிருந்து உடனுக்குடன் அனுப்பிவிடுவார்.

சிறப்பாகச் சொல்வதென்றால் தி.மு.கழகத்தை - அதன் கோட்பாட்டைக் குறித்து யார் பேசினாலும், எழுதினாலும் கொஞ்சமும் அஞ்சாமல் பொறி பறக்கும் விதத்தில் பதிலடி கொடுப்பதில் அவருக்கு நிகர் அவர்தான்.

### *திருச்சி மாநில மாநாடும் கழகத்தில் திருப்பு முனையும்*

1956ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் வரையிலும் தந்தை பெரியார் அவர்களின் கொள்கையைப் பின்பற்றி, சமுதாய சீர்திருத்தத்தில் தன்னை முழுமையாக உட்படுத்திக்கொண்டு தொண்டாற்றி வந்த தி.மு.கழகம், அதே ஆண்டு, மே மாதம், திருச்சியில் நடைபெற்ற தி.மு.கழக இரண்டாவது மாநில மாநாட்டில் எடுக்கப்பட்ட வாக்கெடுப்பின் பயனாக, அரசியலில் இறங்கி, தேர்தலைச் சந்திப்பதென்று முடிவெடுக்கப்பட்டது.

அன்று முதல் தீச்சுடர் இதழில் அரசியல் கலந்த தலையங்கமும் 'கோணி ஊசி' 'உலைக்களம்' போன்ற பல்வேறு தலைப்புகளில் நகைச் சுவை கலந்த சூடான பதில்களும் கட்டுரைகளும் வரலாயின.

மாநில மாநாடு நடந்து முடிந்த அதே மாதத்தில் அதாவது 31.5.56 இதழில், 'உலைக்களம்' என்னும் தலைப்பில் அப்போது நாளிதழ்களில் வெளிவந்த செய்திகளுக்கு அவர் தந்த பதில்களில் சில:

1. இந்திய எல்லையில் பாக். துருப்புகள் குவிப்பு - செய்தி

   அதை அடக்கத்தான் பாக். எல்லையில் அரிசி குவிகிறதே. - பதில்

2. பத்தாவது படித்த பெண் வேலை கிடைக்காததால் சேலையில் மண்ணெண்ணெய் ஊற்றித் தீ வைத்துக்கொண்டு சாக முற்பட்டாள். 'தற்கொலை முயற்சி' என்று காவல் துறையினர் வழக்கு பதிவு செய்திருக்கின்றனர். - செய்தி

   உண்மைதானே. இந்தக் காங்கிரஸ் அரசை நம்பி அந்தப் பெண் பத்தாவது வரையிலும் படித்தது தவறுதானே! போகட்

டும்! சிறையிலடைபட்ட பெண், விடுதலை அடைந்த பிறகாவது வேலை கொடுக்கிறார்களா பார்ப்போம். - பதில்

3. சிங்கள வெறியர்கள் உண்ணாவிரதம். தமிழ் ஒழிப்புச் சட்டத்தை இன்னும் கடுமையாக்க வேண்டுமாம்! - செய்தி

நன்றி கெட்ட நாய்கள்: நூறு ஆண்டுகளாகத் தமிழர் அங்கே இல்லையானால் சிங்களமே இல்லை. - பதில்

4. புத்தர் விழா ஊர்வலத்தில் குடிகார இராமன் வேடத்தில், மாமிசத்தைக் கடித்துக் கொண்டு ஒரு வாலிபர் போனார். - செய்தி

புத்தர் உபதேசங்களில் இதுவும் ஒன்றோ, என்னவோ! - பதில்

5. கிரகணத்திற்குக் குளிப்பவர்கள் முட்டாள்கள் - செய்தி

உண்மைதான். ஆனால் கும்பமேளாவுக்குப் போகிறவர்கள் அதைவிட முட்டாள்களல்லவா? - பதில்

6. 'முதலாளியின் மச்சான்' என்று சொல்லி ஏமாற்றி விருந்து சாப்பிட்டான் ஒருவன். - செய்தி

'பரதேசி' என்றால்தான் பக்கத்துத் தெரு வரையிலும் விரட்டு கிறார்களே! அதனால்தான் அந்தப் பசியாளன் இந்தப் புது வழி யைக் கண்டு பிடித்தான்போல் இருக்கிறது. - பதில்

7. இளம் வயது மனைவியின் இரண்டு கைகளையும், சீனிவாச ஐயர் என்ற மிராசுதாரர் வெட்டினார். - செய்தி

வெட்டியவர் ஐயரா? அவருக்கேது அவ்வளவு தைரியம் என்று யோசிக்கிறீர்களா? அவர் ஒரு மிராசுதாரராயிற்றே! - பதில்

8. 'தட்சணப் பிரதேசம் வேண்டும்' என்று சொன்ன பருவப் பெண்ணுக்கு முதல் பரிசு கொடுங்களென்று நிதி மந்திரி சுப்பிர மணியம் சிபாரிசு செய்தார். - செய்தி

குருத்துரோகம்! நியாயமாக அந்த முதல் பரிசை, அவருடைய குருதேவரான ஆச்சாரியாருக்குக் கொடுக்கச் சிபாரிசு செய் திருக்க வேண்டும். - பதில்

இப்படி வாரந்தோறும் அவர் அளித்து வந்த பதில்களால் மக்கள் பெற்ற விழிப்புணர்ச்சிக்கு அளவில்லை என்றே சொல்ல வேண்டும். அதுபோல,

தீச்சுடரை நோக்கி வரும் கேள்விக்கேற்ற பதிலும் இருக்கும். உதாரணத்துக்கு ஒன்று.

கேள்வி: எதற்கெடுத்தாலும் 'தமிழ்த்தாய் - தமிழ்த்தாய்' என்கிறீர்களே! அந்தத் தமிழ்த் தாயின் முகவரி உங்களுக்குத் தெரியுமா?
- காங்கிரஸ் தொண்டன்

பதில்: காங்கிரஸ் தொண்டன் கேட்கிறான், நம்முடைய தமிழ்த்தாயின் முகவரியைச் சொல்கிறேன் - தெரிந்துகொள். உங்கள் பாரத மாதா வசிக்கும் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில்தான் எங்கள் தமிழ்த்தாய் குடியிருக்கிறாள். அதுவும் உன் பாரதமாதாவைப் போல் வாடகை வீட்டிலல்ல; சொந்த வீட்டில். அங்கு போய்ப் பார்த்துக்கொள்.

## ஸ்டாலினைக் குறித்து லெனின் சொன்னது

எந்தத் துறையாக இருந்தாலும் அந்தத் துறையைப் பற்றி எழுதுவதில் வல்லவர் சி.பி.சி. ஒருமுறை தீச்சுடரில், 32 ஆண்டுகளாக வெளிவராத 'இரகசியம்' என்னும் தலைப்பில் அப்போது அவர் எழுதிய கட்டுரையை இப்போது பாருங்கள்.

> 'ஸ்டாலின் நடத்தையில் உள்ள பாதகமான தன்மையான முரட்டுத்தனம், சக ஊழியர்களை மதிக்காமை, பதவியைத் துஷ்பிரயோகம் செய்வதில் ஆர்வம், கூட்டுத் தலைமை நியதிகளைப் புறக்கணிக்கக் கூடியவையாகும். கம்யூனிஸ்டு கட்சியின் பொதுச்செயலாளராக மாறிய பிறகு ஸ்டாலின் விரிவான ஆதிக்கத்தைச் சேர்த்துக் கொண்டார்'.

இப்படி, லெனின் எழுதிய பத்து நாட்களுக்குப் பிறகு மேலும் சில வாசகங்களையும் கீழ்க்கண்டவாறு அவர் சேர்த்திருக்கிறார்.

'ஸ்டாலின் இழிவான குணம் படைத்தவர். பொதுச்செயலாளர் பதவி வகிக்கும் ஒருவரிடம் இப்படிப்பட்ட குறைகள் இருக்கக் கூடாது. பதவியிலிருந்து விலக்கவும், மற்றொருவரைத் தேர்ந்தெடுக்கவும் வழி கண்டு பிடிக்க வேண்டுமென்று நான் என் கூட்டாளிகளைக் கேட்டுக் கொள்கிறேன்'.

இது மட்டுமல்ல. 'இந்தக் கடிதத்தை நான் இறந்த பிறகு கூடும் முதல் குழுக்கூட்டத்தில் படிக்க வேண்டும்' என்றும் அதில் கேட்டுக் கொள்ளப் பட்டிருக்கிறது.

லெனின் கேட்டுக் கொண்டபடி அவர் இறந்த பிறகு அந்தக் கடிதம் பிரிக்கப்பட்டது. ஆனால், லெனின் விருப்பப்படி குழுவில் படித்துக்

காட்டப்படவில்லை. இதை, ஸ்டாலினே படித்து விட்டு அதில் தன்மேல் லெனின் அவர்களால் சாட்டப்பட்டிருந்த குற்றங்கள் உண்மைதான் என்று ஒப்புக்கொண்டிருக்கிறாரென்றாலும் குழுக்கூட்டத்தில் அதைப் படிக்க அனுமதி தரவில்லை.

'இந்த உண்மை, லெனின் இறந்த 32 ஆண்டுகளுக்குப் பிறகு அதாவது ஸ்டாலின் இறந்து நான்காண்டுகள் ஆகிவிட்ட பிறகு சோவியத்தின் இளைஞர் நிறுவன இதழான கோபோ சோமால்ஸ் காயா பிராவ்டாவில் வெளியிடுமாறு சோவியத் அரசு கேட்டுக் கொண்டிருக்கிறது' என்று தெரிவித்துவிட்டு 'குறிப்பு' என்னும் துணைத் தலைப்பின் வாயிலாக அந்நாளைய ரஷ்யாவின் நிலையை விளக்கியுள்ளார். அதுவே இது.

"மக்கள் அபிமானமும் ஆட்சித் திறனும் புரட்சி மனமும் கொண்டு, ஸ்டாலினுக்கே வழிகாட்டியாக இருந்த லெனினாலேயே வாய்விட்டுச் சொல்ல முடியாமல் இரகசியமாக எழுதி வைத்துவிட்டு, அதையும் தாம் இறந்த பிறகே பிரித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறாரென்றால் ஸ்டாலின் எவ்வளவு பயங்கரமான மனிதராக இருந்திருக்கிறாரென்பதை எண்ணிப் பாருங்கள். அப்படியானால் புல்கானின் – குருஷ்ஷேவ் பயப்பட்டதில் வியப்பில்லையல்லவா?"

இதுபோல் காலத்துக்கேற்ற எழுத்தோவியங்கள் 'தீச்சுடர்' இதழில் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருந்தன. ஆனால் நாளடைவில் வெளியூர் விற்பனையாளர்கள் சரியாகப் பணம் அனுப்பாத காரணத்தால் தீப்பொறி போல் தீச்சுடரும் நின்றுவிட்டது.

## *இன முழக்க நிறுவனரும் இதழாளர் சி.பி. சிற்றரசும்*

1960ஆம் ஆண்டில் கண்ணப்பா வள்ளியப்பன் தொடங்கிய 'இன முழக்கம்' என்னும் வார இதழுக்கு சி.பி.சிற்றரசு ஆசிரியரானார். அதற்கும் என்னைத் துணையாக்கிக் கொண்டார்.

ஒவ்வொரு வாரமும் இதழின் முன்பக்கத்தில் முன்னணித் தலைவர்களின் முகப்போவியம் இடம் பெற்றிருக்கும். அக்காலத் தேசிய அரசின் போக்கையும் மைய அரசின் செயலையும் வாரந்தோறும் தலையங்கத்தின் வாயிலாகவும் சூடான கட்டுரைகளின் வாயிலாகவும் தம்முடைய எண்ணங்களை எடுத்துவைத்து வரலானார். பின்னர், 'புறப்படு மகனே' என்னும் தலைப்பில் சரித்திர நவீனத்தை – தமக்கே உரிய அழகு நடையில் எழுத ஆரம்பித்தார்.

'இன முழக்கம்' இதழில் டி.கே. சீனிவாசன், கவியரசர் பொன்னிவளவன் போன்றோரின் கதைகள் – கட்டுரைகள் – கவிதைகள் இடம் பெற்று

வந்தன. கழகக் கண்மணிகளால் வளர்ந்து வந்த இன முழக்கம் இதழானது வேலூரில் நடைபெற்ற பொதுக்குழுவின் எதிரொலியால் மாறுபட்டது. இதழின் உரிமையாளர் தி.மு.க.வுக்கு எதிராகிப் போன ஈ.வெ.கி. சம்பத், கவியரசர் கண்ணதாசன் போன்றவர் பக்கம் சாய்ந்து விட்டதால் சி.பி.சி.யும், நானும் நண்பர் கயல் தினகரனும் இதழைவிட்டு வெளியேறி விட்டோம். மேற்படியார் தொடங்கிய தமிழ்த் தேசியக் கட்சிக்கு அந்த இதழின் உரிமை யாளர் இரையாகிப் போனார்.

அப்போது தமிழ்நாட்டு மக்களிடையே தி.மு.கழகத்தின்மேல் ஏற்பட்டிருந்த தவறான எண்ணத்தைப் போக்குவதற்கென்று சி.பி.சிற்றரசு அவர்கள் சுற்றுப்பயணம் மேற்கொண்டார். கழகத்தை விட்டுப் பிரிந்து போன வர் மூட்டிய தீயை அணைத்து, மீண்டும் எங்கும் தென்றல் தவழச் செய்தார்.

## 'முன்னணி' இதழும் 'பின்னணி' நிலையும்

1961ஆம் ஆண்டு வடசென்னையைச் சேர்ந்த வண்ணையம்பதி யில் திரு ம.ரா.தேவராசன் அவர்களால் "முன்னணி" என்னும் வார இதழ் ஆரம்பிக்கப்பட்டது.

அந்த வார இதழுக்கு இன்றைய மாண்புமிகு வருவாய்த்துறை அமைச்சர் நாஞ்சில் கி. மனோகரன் ஆசிரியரானார்; நான் பொறுப்பாசிரி யரானேன்.

அப்போது சி.பி.சிற்றரசு அவர்களை யான் நேரில் சந்தித்து, 'முன்னணி' யில் தொடர்ந்து எழுதவேண்டுமென்று கேட்டுக் கொண்டேன். அதற்கிணங்க, 'எது ஜனநாயகம்?' என்னும் தலைப்பில் சில வாரங்கள் தொடர்ந்து எழுதினார். அந்தத் தொடர்க் கட்டுரையிலிருந்து சிலவற்றை மட்டும் இங்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்:

> "கோலோச்சும் உரிமையை மாளிகையிலிருந்து மண் மேட்டுக்கு அழைத்து வந்த மக்களின் ஆட்சியே ஜனநாயகம்"
>
> 'கிடைக்குமோ -கிடைக்காதோ' என்ற அச்சமில்லாமல் ஆனால் ஒரேயடியாகக் கிடைக்காமல், நிதானமாக, சிறுகச் சிறுகச் செம்மையாகக் கிடைக்கப் பெறுவதே ஜனநாயகம்'
>
> "காட்டில் மழை பெய்து ஓடிக் கடலில் கலந்துவிடும் தன் மையை மாற்றி, கழனிகளுக்குப் பயன்படத்தக்க வகை யிலே மாற்றியமைக்கும் அரசியல் உழவுதான் ஜனநாயகம்.

> 'கரங்களுக்கு வலுவேற்றுவதை நிறுத்தி, கருத்துகளுக்கு வலுவேற்ற வேண்டும்' என்று கற்றுக் கொடுப்பதுதான் ஜனநாயகப் பள்ளி. வாளைத் தீட்டுவதை நிறுத்தி, நாவைத் தீட்டுவதுதான் ஜனநாயக உலைக்களம்.
>
> மக்களை மிரட்டி வந்த செங்கோலையும், சிம்மாசனத் தையும் சிரித்துக்கொண்டே பொருட்காட்சிச்சாலைக்குக் கொண்டு வந்து சேர்த்து விடும் முறைக்கே 'ஜனநாயகம்' என்று பெயர்.

இது போலவே, 'பேரனுக்கு' என்னும் தலைப்பில் மடலொன்று எழுதி வந்தார். அது அவருடைய இளமைக் கால நினைவலைகளை - அன்றைய சமுதாய நிலைகளை எடுத்துக்காட்டுவதாக அமைந்திருந்தது. பின்னர் என்னுடைய வற்புறுத்தலால் - நான் கொடுத்த வரலாற்றுக் குறிப்புகளால், 'கபாடபுரம்' என்னும் தலைப்பில் அவர் எழுதத் தொடங்கிய தொடரி லிருந்து சில துளிகளை இங்கு எடுத்துக்காட்டுகிறேன்:

> 'இதுதான் கபாடபுரம்! செந்நாப் புலவர்கள் இலக்கிய - இலக்கண ஆராய்ச்சி நடத்திய இடம் அது. தமிழ்த் தாயின் சிலம்பொலி கேட்க, வாதப்போர் நடத்தப்பட்ட இடம். காலம் அழிந்தாலும் தமிழ்க் கருவூலங்கள் அழியா வண்ணம் நம் மூத்தவளுக்குப் பாக்களால் கருத்தாரத்தை அணிவித்து மகிழ்ந்த இடம்.
>
> வில்லேருழவர்களின் மணிமாடங்களில் கொலுவீற் றிருந்த சொல்லேருழவர்களின் சூறாவளிச் சிந்தனைக்கு முதலிடம் கொடுத்து முடி சூட்டிய இடம்'
>
> ................................
>
> 'அக்காலத்தில் தங்கத்தையும் அறிந்திருந்தார்கள்; சங்கத்தையும் அறிந்திருந்தார்கள். இவ்விரண்டில் எது சிறந்தது? சங்கம் தான். 'எப்படி?' என்று யாராவது கேட் கக்கூடும். தங்கம் செய்யாததைச் சங்கம் செய்யும். இதுவே அவர்கள் கண்ட முடிவு. ஆகவேதான் தங்கத்தை உதறித்தள்ளி விட்டுச் சங்கத்தை அமைத்தார்கள்.
>
> ஒலியை எழுத்தாக்கி, எழுத்தை எண்ணமாக்கி, எண்ணத் தைக் கருத்தாக்கி அதை மோதவிட்டு மெய்யைக்கண்ட இடமே கபாடபுரம்; இந்தச் சங்கம் அளித்த நூல்கள் எண்ணில் அடங்காது. எனினும் கடலால் கபாடபுரம்

> கொள்ளை கொள்ளப்பட்டபோது நூல்களும் அந்தக் கடலின் அடிவாரத்துக்குப் போய்விட்டன. நீண்ட காலத் தமிழ்க் கருவூலங்களைத் தின்றும் பசியடங்காத நிலையில் கரைக்குத் தன் அலைகளை ஓயாமல் ஓங்காரச் சத்தத்தோடு இன்னமும் அனுப்பிக் கொண்டிருக்கிறது'

என்று தொடர்ந்து அவர் எழுதி வரும் காலத்தில்தான், இன முழக்கம் போல் இதுவும் த.தே.க.வுக்கு இரையாகிவிட்டது. உடனே நானும், நாவுக்கரசர் நாஞ்சிலாரும் வெளியேறிவிட்டோம்.

### காங்கிரஸ் வீழ்ச்சியும் கழக ஆட்சியும்

1962ஆம் ஆண்டு அப்போது தமிழ்நாட்டின் முதல்வராக இருந்த பக்தவத்சலம் அவர்களால் எங்கும் - எதிலும் விலையேற்றம். அத்தகு கொடிய விலையேற்றத்தை எதிர்த்து, தி.மு.கழகம் களத்தில் இறங்கியது. அப்போராட்டத்தின் விளைவால் பேரறிஞர் அண்ணா சிறைச்சாலையைப் பூஞ்சோலையாக ஏற்றார். போராட்டத்தில் ஈடுபட்ட கழகக் கண்மணிகளில் பலர் சுட்டு வீழ்த்தப்பட்டனர். அதனால் குமுறிக் கொண்டிருந்த சி.பி. சிற்றரசு என்னும் எரிமலை வெடித்தது. மக்கள் மன்றத்தின் முன்னே கழக முன்னணித் தலைவர்களின் போர்க்குரல்.

1967ஆம் ஆண்டு பொதுத்தேர்தல் வந்தது. விலைவாசியால் பெரிதும் நொடித்துப்போயிருந்த மக்கள், காங்கிரஸ் ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கும் முடிவோடு, தி.மு.கழக வேட்பாளர்களுக்குத் தம்முடைய வாக்குகளை அளித்து அவர்களை வாகை சூடச் செய்தனர். பேரறிஞர் அண்ணா அவர்கள், தமிழ்நாட்டின் முதல்வரானார். சி.பி. சிற்றரசு போன்றோரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்கியது.

இரண்டே இரண்டு ஆண்டுகளுக்குள் மக்கள் பெறவேண்டிய மறுமலர்ச்சிக்கென்று இரவைப் பகலாக்கிப் பாடுபட்ட பேரறிஞர் அண்ணா கொடிய நோயின் காரணமாக 1969ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் மூன்றாம் நாள் கழகத்தை மட்டுமல்ல, மக்களையும் கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கடிக்கும் விதத்தில் விழிகளை மூடிவிட்டார்.

பின்னர் முதல்வர் பொறுப்பைக் கழகக் கோட்டையின் சிறப்பு உறுப்பினர்களின் ஏகோபித்த முடிவால் கலைஞர் ஏற்றார்.

### மேலவைத் தலைவரானார்

ஒரு காலத்தில் தந்தை பெரியாருக்குச் சாரதியாகவும் (வண்டி ஓட்டுநர்), மூத்த தலைவர்களில் முடிசூடா மன்னராகவும் இருந்த சி.பி. சிற்றரசு அவர்களைத் தம்முடைய அமைச்சரவையில் ஒருவராக இருக்க

வைக்கக் கலைஞரின் மனம் இடமளிக்கவில்லை. அதன் விளைவாக, முதல்வர் பதவிக்கும் மேலான பதவியான, 'மேலவைத்தலைவர்' பதவியை அவருக்கு வழங்கி, அவரை வாழ்த்தும் வயது தமக்கு இல்லாத காரணத் தால் மாலை சூட்டி வணங்கினார். அத்துடன் கலைஞரின் ஆசை தணிய வில்லை. சி.பி.சிக்கென்று சென்னைக் கடற்கரையிலுள்ள சீரணி அரங்கில் மகத்தான ஒரு பாராட்டுக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தார். அந்தக் கூட்டத் திற்கு அவரே தலைமை ஏற்றார்.

தந்தை பெரியார் முன்னிலையில் நடந்த அந்தப் பாராட்டுக் கூட்டத் தில், அவருடைய வாழ்வை மையமாகக் கொண்டு நான் எழுதிய, 'சி.பி.சி. உலா' என்னும் கவிதை நூலை அந்நாளைய மாண்புமிகு அமைச்சர் சத்தியவாணிமுத்து அம்மையார் வெளியிட்டார்கள்.

அத்தகு சிறப்பிற்குரிய சி.பி.சி. அவர்கள் கடைசிக்காலத்தில் கழகத்தை விட்டுப் பிரிந்துசென்றது வருத்தத்துக்குரிய ஒன்றே. பின்னர் நோய்வாய்ப்பட்ட நிலையில் 16.2.1978 இல் தம்முடைய நெடுங்காலத் தொண் டுக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டுக் காற்றோடு காற்றாகக் கலந்துவிட்டார்.

வள்ளுவப் பெருந்தகை நன்றல்லதைத்தான் மறக்கச் சொன்னார். ஆனால் நாட்டு மக்களுக்கென்று தொண்டாற்றிய மேதையை - நன்றியை அவர் மறக்கச் சொல்லவில்லை.

எனவே, எழுத்தால் - பேச்சால் - செயலால் - எல்லாவற்றுக்கும் மேலான துணிச்சலால் தமிழ்ச் சமுதாய மறுமலர்ச்சிக்குத் தொண்டு புரிந்த இதழாளர் சி.பி. சிற்றரசு அவர்களை இன்றைய சமுதாயம் மறந்து விட்டிருந்தாலும் திராவிட இயக்க இதழ்கள் - தமிழின வரலாறு அவரை மறந்துவிடத் தயாராகயில்லை. அவ்விரண்டிலும் அவருடைய புகழ் என்றென்றும் நிலைத்திருக்கும்.

# இதழாளர் வே. ஆனைமுத்து

## தமிழேந்தி

### இதழாளர் வே. ஆனைமுத்து – அறிமுகம்

பெரம்பலூர் மாவட்டம் முருக்கன்குடியில் 1925 சூன் 21 ஞாயிறன்று பிறந்தார். 1940 முதல் பார்ப்பனரல்லாதார் உணர்வு கொண்டார். 1942 முதல் சுயமரியாதை இயக்கத்தில் ஈடுபாடு ஏற்பட்டது. அண்ணாமலைப் பல் கலைக் கழகத்தில் 1946 - 48இல் இடைநிலை (Intermediate) வரை பயின்றார். தன்னூக்கமாக இலக்கியம், இலக்கணம், வரலாறு, சட்டம் ஆகிய துறைகளில் பல நூல்களைக் கற்றார். திருச்சியிலிருந்து 1950 இல் 'குறள் மலர்' கிழமை இதழும் 1957இல் 'குறள் முரசு' கிழமை இதழும் நடத்தினார். 26.11.1957இல் நடைபெற்ற அரசியல் சட்ட எரிப்புப் போராட் டத்தில் பங்கேற்று ஒன்றரை ஆண்டுக் கடுங்காவல் தண்டனை ஏற்றார்.

1954ஆம் ஆண்டு முதல் தந்தை பெரியார் அவர்களுடன் நெருங் கிய தொடர்பு கொண்டிருந்தார். 1956 முதல் முழுநேர இயக்கப் பணியை மேற்கொண்டு பெரியாரின் அணுக்கத் தொண்டரானார். 1972 - 73இல் பெரியாரின் சொற்பொழிவுகளையும் கட்டுரைகளையும் தொகுத்து 'பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள்' என முப்பெரும் தொகுதிகளாகப் பதிப்பித்துள்ளார்.

8.8.1976 இல் 'பெரியார் சமஉரிமைக் கழக'த்தைத் தொடங்கினார். இப்போது இஃது 'மார்க்சிய - பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியாகச் செயல்பட்டு வருகிறது. 1978இல் அனைத்திந்திய பிற்படுத்தப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர், மலையின மக்கள், மதச்சிறுபான்மையினர் பேரவை தொடங்கப்படக் காரணமாக இருந்து அதன் புரவலர் தலைவராக வட மாநிலங்கள் பலவற்றிற்குப் பலமுறை பயணம் மேற்கொண்டு போராட்டங் கள் பல நடத்திச் சமுதாய மாற்றத்திற்காகப் பணியாற்றி வருகிறார். 1978இல் மண்டல் குழு அமையவும் 1980இல் வி.பி. சிங் தலைமையிலான ஐக்கிய முன்னணி அரசு மண்டல் பரிந்துரைகளை நடைமுறைப்படுத்தும் ஒரு பகுதியாகப் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு நடுவண் அரசுப் பணி இடங்களில் 27 விழுக்காடு இடஒதுக்கீடு அமைய முதன்மைக் காரணமாக நின்றவர்.

'தமிழ்நாட்டில் பண்பாட்டுப் புரட்சி', 'அரசியல் சட்டம் ஒரு மோசடி', 'வகுப்புரிமைப் போராட்டம் ஏன்', 'நாத்திகர்? போர்வாள்', 'பொதுவுடைமை வாதிகளும் பெரியார் கொள்கைகளும்', Federalism in peril, Amend The constitutional Guaranteeing proportional reservation - To all segments உள்ளிட்ட பத்துக்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். 17.8.1974 முதல் திருச்சியிலிருந்து 'சிந்தனையாளர்' என்னும் பெயரில் ஒரு கிழமை ஏட்டைத் தொடங்கினார். இவ்வேடு தற்போது சென்னையிலிருந்து மாத இதழாக 22 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளிவந்துகொண்டுள்ளது. 1994 முதல் 'PERIYAR ERA' என்னும் ஆங்கில மாத ஏட்டையும் நடத்தி வருகிறார்.

ஆனைமுத்து அவர்களின் 48 ஆண்டைய நெடிய இதழியல் அடைவுகளில் இன்றியமையாத அய்ந்து செய்திகளை அவர் தொடர்ந்து முதன்மைப்படுத்தி வருவதாக நாம் கருதுகிறோம்.

1. தாய்மொழிக் கல்வி, தமிழின மேம்பாடு
2. வகுப்புரிமைப் போராட்டம்
3. வருணாசிரம (சாதி) ஒழிப்பு
4. இந்திய அரசியல் சட்டம் வெகுமக்களுக்கு எதிரானது என்னும் உறுதியான நிலைப்பாடு
5. மார்க்சிய - பெரியாரிய நெறியில் இந்தியக்கூட்டாட்சி

***தாய்மொழிக் கல்வி, தமிழின மேம்பாடு***

வளர்ந்துவரும் இன்றைய அறிவியல், தொழில் நுட்ப உலகில் எல்லா மக்களுக்கும் கல்வி அவரவர் தாய்மொழியில் அமைவதுதான் இயற்கையானது, ஏற்புடையது என்ற கருத்து அனைவராலும் ஏற்கப்பட்டுவிட்டது. முன்னேறிய நாடுகள் பலவும் இத்துறையில் வெற்றி கண்டு வருகின்றன. ஆனால் பல்வேறு தேசிய இனங்களைக் கொண்ட இந்தியத் துணைக் கண்டம் ஆங்கில வல்லாண்மையின் பிடியில் சிக்கியபோது பயிற்றுமொழி ஆங்கிலம் ஆனது. 1947இல் வெள்ளையர் வெளியேற்றத்துக்குப்பின், ஆங்கிலத்தின் இடத்தில் அமர்ந்திருக்க வேண்டிய அனைத்துத் தேசிய மொழிகளும் புறந்தள்ளப்பட்டு, இந்தி அந்த இடத்தில் முந்திக் கொண்டது. தமிழ்நாட்டின் நிலையோ அவலத்தின் உச்சம்.

ஆனைமுத்து அவர்கள் 1950களில் இருந்தே தாம் நடத்திவந்த குறள் மலர், குறள் முரசு ஏடுகளில் தாய்மொழிக் கல்வியின் தேவையைத் தொடர்ந்து வற்புறுத்தி வருகிறார்.

தமிழ் ஆட்சிமொழியாக்கப்படுவதன் நோக்கம், தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட தமிழ் மக்கள் அரசாங்கத்தாருடனும் அரசாங்கத்தின்

பல்வேறு அலுவல் துறைகளிலுள்ளவருடனும் தமிழிலேயே கடிதப் போக்குவரவு செய்யவேண்டும்; அறமன்றங்களில் தமிழிலேயே வழக்கு கள் நடத்தப்பட வேண்டும். தீர்ப்புகள் எழுதப்பட வேண்டும்; தமிழ், பல் கலைக் கழகப் பாடமொழியாக எல்லாக் கட்டங்களிலும் இருக்க வேண்டு மென்ற கோரிக்கையின் நோக்கம், பட்டப்படிப்புப் பெற்று வெளியேறும் தமிழ் மக்கள் பொறியியல், அறிவியல், பொருளியல், வான நூற்கலை, வரலாறு, நுண்கலை, மருத்துவக்கலை முதலான எல்லாக் கலைகள் பற்றி யும் தமிழ் மொழியிலேயே எண்ணிப் பார்க்கவும் எழுதவும் திறம்படப் பிறர்க்கு எடுத்துச் சொல்லவும் ஏற்ற வாய்ப்பு உண்டாக்க வேண்டும் என்பதே. தமிழை ஆட்சிமொழியாக்குவதற்கு அரசினர் இன்றுவரை செய்துள்ள முயற்சிகள் என்ன? (குறள் முரசு, ஆசிரியர் உரை, சுவடி 1. ஏடு 2)

1950களில் எழுப்பப்பட்ட வினாவிற்கு இன்றுவரை விடை இல்லை. இராசாசி அவர்கள் இரண்டு முறை தமிழ்நாட்டில் முதலமைச்சராகப் பொறுப்பு வகித்துள்ளார். முதன் முறையாக 1937இல் தாம் பதவி வகித்த 27 மாதங்களில் (அ) நீதிக்கட்சி ஆட்சியில் சிற்றூர்ப் புறங்களில் தொடங் கப்பட்ட 2200 தொடக்கப் பள்ளிகளை மூடினார். (ஆ) இந்தப் பள்ளிகளை நடத்திடப் பணமில்லை என்று கூறிய அவர், அதே ஆண்டில் அன்றைய மதிப்பில் 12 இலட்சம் ரூபாய் செலவில் சென்னையில் சமஸ்கிருதக் கல்லூரி ஒன்றை நிறுவினார். (இ) இந்தியைச் சென்னை மாகாணப் பள்ளிகளில் கட்டாயப் பாடமாக்கினார்.

1952இல் இரண்டாம் முறையாகப் பொறுப்பேற்றபோது (அ) சாதித் தொழிலைக் கற்றிடச் சொல்லிட, அரைநேரப் படிப்புத் திட்டத்தைச் சிற்றூர்ப் புறங்களில் அறிமுகப்படுத்தினார். (ஆ) 6000 தொடக்கப் பள்ளிகளை மீண்டும் மூடினார். (இ) தொழிற்படிப்புகளுக்கான மாணவர் சேர்க்கைக்கு நேர்முகத் தேர்வுக்கு என இருந்த 200 மதிப்பெண்ணை 50 ஆகக் குறைத்தார்.

இந்நிலையில் திராவிடக் கட்சிகளின் நிலைப்பாடு பற்றி ஆனை முத்து அவர்கள் 1992சூலை சிந்தனையாளன் ஏட்டில் பின்வருமாறு எழுதுகின்றார்:

1967 முதல் கடந்த 25 ஆண்டுகள் நடைபெற்ற திராவிடக் கட்சி களின் ஆட்சியிலும் இந்தி இந்தியாவின் ஆட்சிமொழி என்பது தங்கு தடையின்றி நிறைவேறி வருகிறது. தமிழ் அலுவல் மொழி என்பது ஏமாற்றமாகவே உருவாகிவிட்டது. தமிழ்ப் பயிற்றுமொழி படைத்தவர் களுக்குத் தரமான கல்வி - ஏழைகளுக்குத் தரங்கெட்ட கல்வி என்றே ஆகிவிட்டது. பட்டிதொட்டி எங்கும் ஆங்கிலக் கல்வி பரவிவிட்டது.

(சிந்தனையாளன் சுவடி 14, ஏடு 3)

தமிழினம் மேம்பாடு அடையவும் தன்மான உணர்வு பெறவும் தாய்மொழிவழிக்கல்வி மிகவும் இன்றியமையாதது என்பதை ஆனை முத்து தொடர்ந்து வற்புறுத்தி வருகிறார். தம்முடைய மார்க்சிய- பெரியா ரியப் பொதுவுடைமைக் கட்சியின் சார்பில் இக்கருத்தை முதன்மைப் படுத்தித் தமிழகம் தழுவிய பிரச்சார இயக்கம் நடத்தியுள்ளார்.

1996 சூலை 13, 14 ஆகிய தேதிகளில் சென்னையில் தம் கட்சியின் சார்பில் நடத்தப்பட்ட நான்கு பெரும் மாநாடுகளில், முதல் மாநாடு 'தமிழ் பயிற்றுமொழி ஆட்சிமொழி மாநாடு' ஆகும். இம்மாநாடு பற்றிச் சிந்தனை யாளன் ஆகஸ்டு 96 இதழில் ஆனைமுத்து பின்வருமாறு எழுதுகிறார்:

1. 1996 - 97 கல்வியாண்டில் தமிழகத்திலுள்ள அரசு ஒப்புதல் பெறாத எல்லாத் தொடக்கப் பள்ளிகளும். அரசு ஒப்புதல் பெற்றவையாக ஆகவேண்டும். முதலாவது வகுப்பு தொடங்கி அய்ந்தாவது வகுப்பு முடிய எல்லாப் பாடங்களும் தமிழிலேயே இப் பள்ளிகளில் கற்பிக்கப்பட வேண் டும் எனத் தமிழக அரசு ஆணையிட வேண்டும்.

2. பொதுமக்கள் வரிப்பணத்திலிருந்து நடைபெறும் நிறுவனங்களான அரசு உயர்நிலை, மேனிலை நிதி உதவிப்பள்ளிகள், சி.பி.எஸ்.இ நவோதயா பள்ளிகள், அய். அய். டி., அய். அய். எஸ். முதலான உயர் தொழில் நுட்ப நிறுவனங்கள் ஆகிய அனைத்திலும் தமிழ்நாட்டில் தமிழ் மொழியிலேயே எல்லாப் பாடங்களும் கற்பிக்கப்பட வேண்டும். மருத்துவம், பொறியியல் உயர் தொழில் நுட்பக் கல்வியும் தமிழில் தரப்பட வேண்டும்.

3. வணிக நோக்குடன் செயற்படுகிற தனியார் கல்வி நிறுவனங்களைப் படிப்படியாக அரசுக் கல்வி நிறுவனங்களாக மாற்றிட வழிகாண வேண்டும்.

4. தமிழ்நாட்டு எல்லைக்குள் இயங்கும் மய்ய அரசு ஆட்சிக்கு உட்பட்ட தொடர்வண்டித்துறை, அஞ்சல் துறை, வாழ்நாள் காப்புறுதி நிறுவனம், வருமானவரி சுங்கவரி அலுவலகங்கள் முதலான அனைத்து மய்ய அரசுத் துறைகளில் தமிழ் மட்டுமே அன்றாட நடவடிக்கைகளுக்கு உரிய ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்.

5. இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் இதுவரை ஏற்கப் பட்டுள்ள இந்திய மொழிகளும் இனி ஏற்கப்படவிருக்கும் இந்திய மொழி களும் மற்றும் ஆங்கில மொழியும் 'இந்திய அரசின் ஆட்சி மொழிகள்' என்பதை ஏற்கும் வகையில் இந்திய அரசியல் சட்ட விதிகள் 343, 344, 348 மற்றும் தொடர்புடைய விதிகளைத் திருத்தம் செய்ய தமிழக அரசினர் முயற்சி மேற்கொள்ள வேண்டும். இக்கொள்கையில் ஏற்புடைய அனை வரும் மக்களை அணிப்படுத்தி இதற்கெனப் போராட முன்வரவேண்டும். (சிந்தனையாளன், சுவடி 14, ஏடு 1).

இஃது இதழாளர் ஆனைமுத்து 1996இல் வெளிப்படுத்தியுள்ள கருத்தாகும். இவரே திராவிட இயக்க ஏடுகளில் முதன்முதலாக எழுதிய, இன்றைக்கு 50 ஆண்டுகளுக்கு முன்பு, அஃதாவது 14.12.1947 திராவிட நாடு ஏட்டில் 'கல்வித் திட்டம்' என்னும் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரை பின்வருமாறு முடிகிறது:

உயர்நிலைக் கல்வி, ஒருவரைச் சிறந்த தாய்மொழி அறிவு உடைய வராகவும் தான் உலகப் பொதுமகன் என்பதை உணர்த்தும் வன்மை பெற்ற தாயும் அமைதல்வேண்டும். உயர்நிலைக் கல்வி பெறத்தக்க வசதி எங்கணும் ஒரே நிலையாய் அமைக்கப்படும்வரை ஆங்காங்கே மாணவர் உணவு விடுதிகளும் அமைக்கப் பெற்று அரசியலாராலேயே கண்காணிக்கப்பட வேண்டும்.

பல்கலைக்கழகத்தினின்றும் வெளியேறும் ஒவ்வொருவரும் தாய்மொழிப் புலமை நிரம்பியவர்களாகப் பயிற்றுவிக்கப்பட்டிருத்தல் வேண்டும். இத்தகு திட்டத்தின்கீழ், தொடக்கக்கல்வி முதல் பல்கலைக் கழகப் படிப்பு முடியப் பயிலும் ஒருவன் தாய்நாட்டிற்கும் உலகத்திற்கும் உறுபயன் தோய்ந்தவனாக விளங்குவானென்பதும் திண்ணம்.

தமிழின மேம்பாட்டுணர்வைச் செழிக்கச் செய்வதிலும் ஆனை முத்து அவர்களின் பங்கு குறிப்பிடத்தகுந்ததாய் உள்ளது. தமிழர்களின் ஒப்பற்ற வாழ்வியல் இலக்கியம், திருக்குறள் ஆகும். கிட்டத்தட்ட கி.பி. 1700 வரையில் மாற்றார்க்கு அடிமைப்படாத அரசியல் உணர்வாளர்களாக வும் சாதியற்ற சமுதாய அமைப்பை உடையோராகவும் இலக்கியப் பெருஞ் செல்வத்திற்கு உரியோராயும் விளங்கிய தமிழர் வாழ்வு வீழ்ச்சி கண்டது.

மீண்டும் தன்மானத்தை எழுப்பி நிமிர்த்த புராண, பொய்மைச் சாதிச் சகதியிலிருந்து அதனை மீட்டெடுக்க, தமிழர் தேசிய நூலாம் திருக்குறளை முதன்மைப்படுத்த வேண்டிய கட்டாயம் இங்கு முகிழ்த்தது. இதழாசிரியர் ஆனைமுத்து குறள்முரசு கிழமை ஏட்டின் முதல் இதழில் பின்வருமாறு எழுதுகிறார்.

பழந்தமிழரின் வாழ்வியல் கண்ணாடியாகவும் தமிழரின் வாழ்க்கைச் சட்டமாகவும் ஒப்புரவு உணர்வையும் பண்பாட்டையும் கற்பிக்கும் பெரு நூலாகவும் உள்ள திருக்குறள் நூலை எல்லாத் தமிழரும் கற்று உணர்ந்து கடைப்பிடித்து வாழ்தல் வேண்டும் என்ற வேண்டுகோளை முன்வைக்கும் சீரிய எண்ணம்தான் குறள் முரசு ஒலிக்கக் காரணம் (குறள் முரசு 11.1.57.).

ஒரு குலத்துக்கு ஒரு நீதி சொல்லும் மனு நீதியையும் தமிழ் மறையாம் திருக்குறளையும் ஒப்பிட்டு வள்ளுவத்தின் உயர் அறத்தை விளக்கும் ஆனைமுத்து அவர்களின் அறிவுத்திறம் நுட்பமும் செறிவும் கொண்ட

தாகும். கள்ளுண்ணாமை, பிறனில் விழையாமை ஆகிய இரண்டு அதிகாரங்களில் இடம்பெற்றுள்ள,

> துஞ்சினார் செத்தாரில் வேறல்லர் எஞ்ஞான்றும்
> நஞ்சுண்பார் கள்உண் பவர்.
>
> அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
> நின்றாரின் பேதையார் இல்.

என்னும் இரு குறட்பாக்களை எடுத்துக்காட்டி, அவற்றை மனுநீதியோடு பொருத்துகிறார் ஆனைமுத்து. மனு நீதி சொல்கிறது

'நீ குடிப்பது பழியாகாது, ஊனுண்பது பழியாகாது; வேறொருவனின் மனைவியைப் புணர்வதும் பழியாகாது. படைக்கப்பட்ட உயிர்களின் பண்பாடு இயற்கை எழுச்சி அப்படித்தான். முடியுமானால் இதைத் தவிர்த்துக்கொள். ஏனெனில் தவிர்ப்பதனால் வரும் கைம்மாறு கணக்கிலடங்காது' – இப்படிக் கூறுகின்றது மக்களை மக்களாக்க வேண்டி வகுக்கப்பட்ட மனுச்சட்டம்.

> "There is on sin in eating meat, in (drinking) spirituous liquor, and in carnal intercourse, for that is the nature way of created beings, but absoantation brings great rewards"

என்பதுதான் மனு சட்டத்தின் 56ஆவது பகுதிக்கு மாக்சு முல்லர் தந்த மொழி பெயர்ப்பு(குறள் மலர் 18.8.1950).

**வகுப்புரிமைப் போராட்டம்**

திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று வகுப்பு வாரி உரிமை என்பது அனைவரும் அறிந்த ஒன்றே ஆகும்." இங்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை ஒப்புக் கொள்ளாததினால், நான் கவலைப் படவில்லை. இதற்காகவே வெளியேறி வேறு ஸ்தாபனம் ஆரம்பித்து வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை ஒப்புக்கொள்ளச் செய்கிறேனா இல்லையா பார்" என்று பந்தயம் கட்டி மீசையை முறுக்கிக்காட்டி விட்டு.... (சேலத்தில் பெரியார் சொற்பொழிவு 20.7.1945) காங்கிரசைவிட்டு வெளியேறினார் பெரியார்.

அப்படி வெளியேறும் முன்னரே, 2.5.1925லேயே குடி அரசு ஏட்டைத் துவக்கிவிட்டார் அவர். அப்படி வெளியேறிய பின்னர் அவர் கண்ட இயக்கம்தான் சுயமரியாதை இயக்கம். சுயமரியாதை இயக்கம் முதல் மாநாடு 1929இல் நடந்த வரையில் கூட, அது ஒரு கடவுள் மறுப்பு இயக்கமாக உருவாகவில்லை. வருண, சாதி, ஆதிக்க-பார்ப்பன ஆதிக்க-இந்து மத

ஆதிக்க ஒழிப்பு இயக்கமாகவே விளங்கியது. இந்த ஆதிக்கங்களைச் சமுதாய, கல்வி, உத்தியோகத் துறைகளில் ஒழித்திடச் சுயமரியாதை இயக்கம் முனைந்து பாடுபட்டது. 1920இல் சென்னை மாகாண ஆட்சிக்கு வந்த தென்னிந்தியர் நல உரிமைச் சங்கத்தின் மூலக் கொள்கை வகுப்புவாரி உரிமை ஆகும்.

அந்த ஆட்சியும் இந்த ஆதிக்க ஒழிப்புக்கு ஒரு கருவியாக, வகுப்புவாரி உரிமை ஆணைகளை 1921லேயே நிறைவேற்றிவிட்டது. ஆயினும் கண்ணை மூடிக்கொண்டு சுமார் எட்டாண்டுகள் எதிர்த்த காரணத்தால் 1929 வரை இங்கே வகுப்புரிமை அமலுக்கு வர இயலவில்லை. பெரியாரின் பேராதரவுடன் தமிழகம், கேரளம், ஆந்திரம், கர்நாடகம் உள்ளிட்ட சென்னை மாகாணத்தில் நீதிக்கட்சி ஆதரவு பெற்ற சுயேச்சை அமைச்சரவைக் காலத்தில்தான் 2.7.29 முதல் வகுப்புரிமை நடைமுறைக்கு வந்தது.

அதுவும் பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாதோர், ஆதிதிராவிடர், இஸ்லாமியர், கிறிஸ்துவர் என்கிற 5 பிரிவினருக்கும் தனித்தனிப் பங்கீடாகவே அந்த உரிமை வந்தது. மாகாணத்துறைகளில் மட்டுமே இது வந்தது. சென்னை மாகாணத்தில் மட்டுமே இது கிடைத்தது. இதை அடுத்து 1934இல் இஸ்லாமியர்க்கு 25% தனி ஒதுக்கீடும் சீக்கியர் பவுத்தர், சைனர் முதலான மதச் சிறுபான்மையினருக்கு 8 1/3% தனி ஒதுக்கீடும் மய்ய அரசினால் அளிக்கப்பட்டன.

இது மத்திய அரசிலும் மாகாண அரசுகளிலும் அளிக்கப்பட்டது. மாகாண அரசுகளில் அவரவர் விகிதாசாரப்படி அளிக்கப்பட்டது. சென்னை மாகாண அரசு எந்த வகுப்புவாரி முறையை அமல்படுத்துகிறதோ அதே முறையை அப்படியே சென்னை மாகாண எல்லைக்குள் இருக்கிற எல்லா மத்திய அரசுத் துறைகளிலும் பின்பற்ற வேண்டும் எனக் கோரினர் நீதிக் கட்சி மூதாதையர். அதன்படி, 1945இல் அஞ்சல் தந்தித் துறையில் மட்டும் பார்ப்பனர். பார்ப்பனரல்லாதோர், ஆதிதிராவிடர் ஆகியோருக்குத் தனி ஒதுக்கீடு வந்தது. இதற்குப் பிறகு சர். ஏ. இராமசாமி மேற்கொண்ட இடைவிடாத முயற்சி காரணமாக 1944இல் மத்திய அரசின் மற்ற துறைகளிலும் வகுப்புரிமை வெற்றி கண்டது. மாகாண ஆட்சி, மத்திய அரசுத்துறைகள் ஆகிய இரண்டிலும் இப்படி எல்லா வகுப்பாருக்கும் ஒதுக்கீடு வந்தது முதன்முதலாகச் சென்னை மாகாணத்தில் மட்டுமே. இதற்கு மூல காரணம் நீதிக்கட்சி மட்டுமே.

1943 ஆகஸ்டு 11இல் ஆதிதிராவிடருக்கு 1/3% தனி ஒதுக்கீடு அளிக்கப்பட்டது. இது மத்திய அரசு உத்தியோகங்களில் மட்டுமே அளிக்கப்பட்டது.

இத்துணையும் சாதிக்கப்பட்டாலும் கூட, பார்ப்பனரல்லாதாரில் அதிகம் பேராக இருக்கிற பிற்படுத்தப்பட்டவர்களுக்கு உரிய பங்கு கிடைக்க வில்லை. எனவே மாகாண அரசு, மய்ய அரசு இரண்டிலும் இதைப் பெற்றுத் தீருவது என 1946 முதல் ஓயாது உழைத்தார் பெரியார். அப்படி கடைசி வரை 27 ஆண்டுகள் கோரிய அவர் சென்னை மாகாண அரசில் மட்டும் 1947இல் பெயரளவில் தனி ஒதுக்கீடு பெற்றுவிட்டார் பிற்பட்டோருக்கான ஒதுக்கீடு.

1947இல் 14% என இருந்ததை, 1954இல் 25% ஆகவும் 1971இல் 31% ஆகவும் பெற்றுத்தந்தவரும் அவரே.

பெரியாரின் வகுப்புரிமைக் கொள்கையை வளர்த்தெடுத்ததில் குறிப்பாகத் தமிழகத்தில் எம்.ஜி.ஆர் ஆட்சிக் காலத்தில் பிற்படுத்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீடு 31 விழுக்காட்டிலிருந்து 50 விழுக்காடாக உயர்த்தப்படவும் நடுவண் அரசில் முதன்முறையாக மண்டல் பரிந்துரை மூலம் 1990ஆம் ஆண்டு வி.பி.சிங் ஆட்சிக் காலத்தில் 27 விழுக்காடு இட ஒதுக்கீடு பிற்படுத்தப்பட்ட வகுப்பாருக்கு அரசு பள்ளிகளில் வழங்கப் படவும் காரணமாய் அமைந்தவை ஆனைமுத்து அவர்களின் அயராத உழைப்பும் சிந்தனையாளன் ஏட்டின் மூலம் அவர் ஊட்டிய எழுச்சியும்தான் எனில் அது மிகையாகாது.

1978இல் ஆனைமுத்து அவர்களும் அவரது இயக்கத்தினரும் எடுத்த முயற்சியின் காரணமாக அப்போதைய தலைமை அமைச்சர் மொரார்ஜி தேசாய் அவர்களால் 20.12.78இல் பி.பி.மண்டல் தலைமையி லான இரண்டாவது பிற்படுத்தப்பட்டோர் குழு அமைக்கப்பட்டது. வகுப்புரிமைக் கோரிக்கை விண்ணப்பம் (மெமரண்டம்) 25.3.79 அன்று பிரதமர் தேசாயிடம் மீண்டும் தரப்பட்டது.

நடுவண் அரசுத்துறைகளில் பிற்படுத்தப்பட்டோருக்கு ஒதுக்கீடு கோரி புதுதில்லியில் 15.11.79இல் அந்நாளைய பிரதமர் சரண்சிங் வீட்டின் முன் பல்லாயிரவர் கூடி மறியல் செய்து கைதாயினர். தமிழ் நாட்டிலிருந்து சென்றோரில் அரியலூர் ஆ.செ. தங்கவேலு பட்டாளத்தார். கே. பாலசுப்ர மணியம், வழக்கறிஞர் ச. தென்னன் ஆகியோரும் தளைப்பட்டனர்.

அடுத்தடுத்துப் பதவியில் இருந்த இந்திராகாந்தி, கியானி ஜெயில்சிங், வி.பி.சிங், இராம் விலாஸ் பஸ்வான் மற்றும் ஐக்கிய முன்னணி அமைச்சர் கள் பலரையும் சந்திப்பது, தெளிவான அரசியல் சட்ட விளக்கங்களுடன் மடல்கள் தீட்டுவது, சிந்தனையாளன் ஏட்டின் வழியாக ஒடுக்கப்பட்ட மக்களிடையே தம் எழுத்துகள் மூலம் உணர்வூட்டுவது என்கிற இடை யறாப் போராட்டங்களுக்குப்பின் கிடைத்த வெற்றிதான் 1990இல் நடப்புக்கு வந்த மண்டல் குழு பரிந்துரையின் ஒரு பகுதி அமலாக்கம் ஆகும்.

1990இல் வி.பி.சிங் அரசு பிற்பட்டோருக்கு 27% இட ஒதுக்கீட்டை நடைமுறைப்படுத்தியது. இதை எதிர்த்துக்கிளம்பிய அரசியல் புயல் அத்வானியின் இரதயாத்திரையாக மாறித் தேசிய முன்னணி ஆட்சியைக் கவிழ்த்தது. 1991இல் அமைந்த சிறுபான்மை பி.வி. நரசிம்மராவ் அரசு மண்டல் பரிந்துரை நடப்புக்கு வரக்கூடாது என்கிற கெட்ட எண்ணத்தில் இட ஒதுக்கீட்டில் பொருளாதார அளவுகோலைப் புகுத்திற்று. வாளா இருப்பாரோ பழமைவாதிகள்? மீண்டும் உச்ச நீதிமன்றத்தில் வழக்கு. இதன்மீது 16.11.92 அன்று வெளியான தீர்ப்பில் பிற்பட்டோர் இட ஒதுக்கீட்டிற்குக் கேடாய் அமைந்த மூன்று கூறுகளை வே. ஆனைமுத்து சனவரி 1993 சிந்தனையாளன் ஏட்டில் பட்டியலிட்டுப் பின்வருமாறு மனம் நொந்து எழுதுகிறார்:

1. ஒவ்வொரு மாநில அரசும் பிற்பட்ட சாதிகளில் - எந்த ஒன்றிலும் முன்னேறிய பிரிவினராக இருப்பவர்களை' அடையாளங் காண வேண்டும். அப்படி முன்னேறிய பிரிவினராக இருப்பவர்களைப் பிற்பட்டோர் பட்டியலில் இருந்து நீக்கிவிட வேண்டும். இவர்கள் இனிமேல் இட ஒதுக்கீடு பெறுவதற்கு உரிமை இருக்கக் கூடாது.

2. உச்ச நீதிமன்றம் பிற்பட்டோருக்கான ஒதுக்கீடு, தாழ்த்தப்பட்டோருக்கான ஒதுக்கீடு (15%), பழங்குடிகளுக்கான ஒதுக்கீடு (7.5%). ஆக எல்லாம் சேர்ந்து எப்போதும் 50%, விழுக்காட்டுக்குள்தான் இருக்க வேண்டும்.

3. பதவியில் இட ஒதுக்கீடு தருவதை 15.11.97 உடன் முடித்துவிட வேண்டும் என்று கூறிவிட்டது.

இவ்வளவு கேடுகள் நிறைந்த உச்ச நீதிமன்றத் தீர்ப்பு 45 கோடி பிற்பட்டோருக்கும் 16 கோடி தாழ்த்தப்பட்டோருக்கும் 5 கோடி பழங்குடிகளுக்கும் வேண்டுமென்றே அநீதி இழைத்துவிட்டதை நாம் ஒவ்வொருவரும் உணர வேண்டாமா? இந்த 66 கோடி மக்களின் உரிமைகள் பெரிதா? உச்சநீதி மன்றத்தின் உரிமை பெரிதா? (சிந்தனையாளன், சனவரி 93).

இட ஒதுக்கீட்டில் இத்தனைச் சிக்கல்களுக்கும் ஒரே தீர்வு மக்கள் தொகை அடிப்படையில் விகிதாச்சாரப்படி ஒதுக்கீடு என வரையறுத்துக் கீழ்க்காணுமாறு எழுதுகிறார்:

அரசியல் சட்டத்தின் விதிகள் 15 (4), 16 (4) ஆகியவை ஆளும் வர்க்கத்தினராலும் உயர் அதிகார வர்க்கத்தினராலும் உயர்நீதித் துறையினராலும் சிதைக்கப்பட்டுவிட்டன. அவரவர் மக்கள் தொகை விகிதாச்சாரப்படி கல்வியிலும் வேலைவாய்ப்பிலும் இட ஒதுக்கீடு செய்வதற்கு ஏற்ப அரசியல் சட்டத்தில் விதி 15 (4), விதி 16(4) விதி 29 (2) இவற்றிற்கு மாற்றாகப் புதிய விதிகளைச் சேர்த்து அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுவதே ஒரே தீர்வாகும்.

**இந்திய அரசியல் இடஒதுக்கீடு தரப்பட வேண்டிய முறை**

| | பிரிவு | விகிதாச்சார இடஒதுக்கீடு |
|---|---|---|
| 1. | தாழ்த்தப்பட்டோர் | 15.0% |
| 2. | பழங்குடியினர் | 7.5% |
| 3. | இஸ்லாமியர் | 11.0% |
| 4. | இந்திய கிறித்தவர் – ஆங்கிலோ கிறித்தவர் | 2.0% |
| 5. | சீக்கியர் | 2.0% |
| 6. | பவுத்தர், சமணர், பார்சி | 1.0% |
| 7. | பார்ப்பனர் | 5.5% |
| 8. | பார்ப்பனர் அல்லாத இந்து முற்பட்ட வகுப்பினர் | 12.0% |
| 9. | பார்ப்பனர் அல்லாத இந்து பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் | 44.0% |
| | | 100 |

(சிந்தனையாளன், பிப்ரவரி 94)

16.11.92 அன்றைய உச்ச நீதிமன்றத் தீர்ப்பின்படி தமிழ்நாட்டில் தொழிற்படிப்புகளுக்குத் தற்போதைய ஒதுக்கீட்டு விகிதம் 50% ஆகக் குறைக்கப்பட்டுள்ளது. முந்தைய அதிமுக அரசு இடஒதுக்கீட்டைக் காப்பாற்றிக்கொள்ள அரசியல் சட்ட விதி 3/சியின்கீழ் தனிச்சட்டம் செய்து கொண்டு அதனை நாடாளுமன்றம் ஒன்பதாவது அட்டவணையில் சேர்த்துப் பயன் ஏதுமில்லை. அண்மையில் முடிந்த நெல்லை திமுக மாநாடு கோரியுள்ளபடி ஒதுக்கீட்டு உரிமையை அந்தந்த மாநிலங்களே பெற்றுக் கொள்வதாலும் தீர்வு வரப்போவதில்லை என்பதே ஆனைமுத்து அவர்களின் கருத்தாகும். அஃது ஏற்புடையதும் கூட!

### சாதி (வருணாசிரம) ஒழிப்பு

சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிந்துவிட்டோம். அகலிகை கல்லான அந்தக் காலம் மலையேறிவிட்டது. பொக்ரானில் அணுவெடிப்புச் சோதனை நடத்துமளவு அறிவியல் வளர்ச்சி படுவிசையில் பாய்கிறது. ஆனாலும் இந்த 1998ஆம் ஆண்டிலும் பெரிய எண்ணிக்கையில் உள்ள இந்த மக்கள் கூட்டத்தில் 100க்கு 96 பேர் வருணாசிரமம் என்னும் வஞ்சக வலையில் சிக்கி வதைபடுவோரே ஆவர். (இந்த இழிவைச் சுமந்து வாழ்வோரேயாவார்) இக்கொடுமை வேறெந்த நாட்டிலும் இல்லை. சாதி இழிவை நீக்கும் பெரும் போரில் தளர்வின்றிப் போராடிய தன்னிகரற்ற தலைவர்கள் மகாத்மா ஜோதிராவ் புலே, தந்தை பெரியார், அண்ணல் அம்பேத்கர் இன் னும் பல தலைவர்கள் இங்கே நெடிய போராட்டங்கள் நடத்தியும் வருணா சிரமக் கோட்டையைத் தகர்க்க முடியவில்லை. இதற்கான காரணங்கள்தாம் என்ன? ஆனைமுத்து எழுதுகிறார்:

பெரியார் கொள்கை வெற்றிக்குப் பெரியார் தொண்டர்கள் செய்ய வேண்டியது என்ன?

பெரியாரின் கொள்கைகளில் மிகவும் தலையானது வருணாசிரம ஒழிப்பு; சனாதன ஒழிப்பு. நால்வருண ஒழிப்பு என்பதற்கு இந்திய அரசும் சட்டங்களும் குறுக்கே நிற்கிற முக்கிய தடைகள். இந்துக்கள் நான்கு வருணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். பிராமணன், சத்ரியன், வைசியன், சூத்திரன் என்பவையே அப்பிரிவுகள். இப்பிரிவுகளில் முதல் மூன்று வருணத்தாரும் இருபிறப்பாளர்கள். நால் வருணங்களிலும் ஆயிரக் கணக்கான உள்சாதிகள் உண்டு. இவற்றுக்கு இன்றும் மனுஸ்மிருதி, யக்ஞவல்கிய ஸ்மிருதி, நாரத ஸ்மிருதி முதலானவையும் மிதாட்சர சட்ட வியாக்கியானமுமே சட்ட ஆதாரங்களாக உள்ளன.

இப்படிப்பட்ட ஏற்பாடு 1996-97இலும் இந்துச் சட்டத்தில் இடம் பெற்று நடப்பில் இருக்கிறது. சாதி அமைப்பின் இழிந்த - கொடுமையான வடிவம் தீண்டாமை. இந்திய அரசியல் சட்டத்தின் விதி 17இன்படி தீண் டாமை அகற்றப்பட்டுவிட்டது என்று எழுதியிருப்பது உண்மைதான்.

ஆனால், இன்றைய நடப்பில் காணாமை - அண்டாமை மட்டுமே மறைந்துள்ளன. தொட்டால் தீட்டு என்னும் தீண்டாமை இன்றும் இந்தியா வில் 5 இலக்கம் சிற்றூர்களில் நடப்பில் உள்ளது. தமிழ்நாட்டில் 25 ஆயிரம் சிற்றூர்களில் நடப்பில் இருக்கிறது. இந்த இழிவுக்கு ஆளாகியுள்ள - இந்தியா முழுவதிலும் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பு மக்களும் மற்றுமுள்ள 50 கோடி சூத்திர வகுப்பு மக்களும் 1996-97இலுமாக நடப்பில் - கடவுள் வழிபாட்டில் மதகுரு தன்மையில் - அர்ச்சகர் பணியில் தீண்டப்படாத வர்களே.

இவற்றை அப்படியே பாதுகாப்பவை - இந்துச் சட்டம்; மற்றும் அதன் அங்கீகாரம் பெற்ற சாதி வழக்குச் சட்டம், பிரதேச வழக்குகள் சட்டம் என்பவையே.

ஆனைமுத்து அவர்களின் இன்னொரு கருத்தையும் அறிஞர்கள் ஆய்வுக்குட்படுத்த வேண்டுவது தேவையாகிறது. ஆரிய, நால்வருணக் கலப்பு என்பது பண்டைத் தமிழ் மக்கள் வாழ்விலும் ஒரு தாக்கத்தை உண்டாக்கியுள்ளது என்கிற கருத்துப்பட அவர் எழுதுவதாவது:

தமிழர்க்கு முழுமுதல் நூலாக விளங்கும் தொல்காப்பியத்தில் கரகம், நூல், மனை, அந்தணர், மாயோன், சேயோன், வருணன், மறையோர் தேஎம், கரணம், பார்ப்பான், ஐயர் முதலான சொற்களும் சொற்கோவை களும் பயின்றுள்ளதை நாம் ஒருசேரக் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். மறையோர் தேஎம் என்பது வடவரையே குறிக்கும் என்பது

உறுதி எனின், மேலே குறிப்பிட்டுள்ள பிற சொற்களும் ஆரியப் பார்ப்பன ரையும் அவர்களின் கோட்பாடுகளையுமே குறிக்கும்.

இவற்றைக் கொண்ட தொல்காப்பியர் காலம் முதலே தமிழரின் திருமணம் முதலான நிகழ்ச்சிகளில் ஆரியரின் கோட்பாடுகள் தமிழர் களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டன என்பதை நாம் அறிய முடிகிறது. கீழ்க்காணும் செய்திகள் இதை உறுதிப்படுத்தும்.

'தன்சாதியைவிடத் தாழ்ந்த சாதியில் பெண் கொள்ளுவதனாலும், புனிதச் சடங்குகளைச் செய்யத் தவறுவதாலும் வேதத்தைப் பயிலாமல் புறக்கணிப்பதனாலும் பிராமணர்களை அவமதிப்பதாலும் மேன்மையான குடும்பங்களும் நசித்துவிடும்' என இல்லறத்தானுக்குரிய கடமையை விதிக்கின்ற மனுநெறி நூற்பாவில் சொல்லப்படுகிறது.

> By low marriages by omitting (the performance of) sacred rites, by neglecting the study of the veda and by irreverance towards Brahmanas, (Great) families sink low[11]

இதில் சொல்லப்பட்ட இல்வாழ்க்கை நெறி தொடக்கத்தில் ஆரியர்க்கு மட்டுமே உரியதாக இருந்தது. பிற்காலத்தில் அதுவே எல்லா வருணத் தார்க்கும் உரியதாக விதிக்கப்பட்டது என்பது அறியத்தக்கதாகும். (தமிழர்க் கான வாழ்க்கை நெறி - புலமை, சூன் 9 ப. 25)

மிகவும் சிக்கலான, எஃகு கோட்டை என அரசியல் சட்டப் பாது காப்புக் கவசத்தை அணிந்துள்ள இந்தக் கேட்டினுக்குத் தீர்வுதான் என்ன? ஆனைமுத்து, சிந்தனையாளன் ஆகஸ்டு 96 ஏட்டில் வருணாசிரம ஒழிப்புப் பற்றி எழுதும்போது குறிப்பிடுகிறார்:

இந்துச் சட்டத்தில் வருணாசிரமத்துக்கும் உள்சாதி அமைப்புக்கும் உள்ள இந்தப் பாதுகாப்பு இன்று வரையில் நாடாளுமன்றத்தில் ஒரு சட்டத் திருத்தம் வழியாக மாற்றப்படவோ நீக்கப்படவோ அல்லது திருத்தப் படவோ இல்லை.

இவ்வாறு நாடாளுமன்றத்தினால் மாற்றப்படாத, நீக்கப்படாத அல்லது திருத்தப்படாத எல்லாப் பழைய சட்ட ஏற்பாடுகளும் இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் நடப்புக்கு வந்த பிறகும் கூடச் செல்லுபடி ஆகும் என இந்திய அரசியல் அமைப்புச் சட்ட விதிகள் 13, 25, 26, 372 (1) (2) இவற்றில் திட்டவட்டமாகக் கூறப்பட்டுள்ளன.

இந்த ஏற்பாடு நீடிப்பது 75 கோடி உழைப்பாளி மக்களை எல்லா வகையிலும் இழிவும் அவமானமும்படுத்தி உரிமை இழக்கச் செய்வது

ஆகும். எனவே இந்துச் சட்டத்தில் உள்ள நால் வருணப் பாதுகாப்புக் குறித்த பகுதி முழுவதையும் நீக்கியும் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் உள்ள வருணப் பாதுகாப்பு விதிகளான 13, 25, 26, 372 (1) (2) ஆகியவற்றை நீக்கியும் இந்திய நாடாளுமன்றம் திருத்தம் கொண்டு வரவேண்டும் எனக் கோரி, தமிழ்நாட்டுச் சட்டமன்றத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்ற தமிழ் நாடு அரசும் மற்ற மாநில அரசுகளும் அனைத்து அரசியல் கட்சிகளும் பொதுமக்களும் மனமுவந்து முன்வரவேண்டும் (ஆகஸ்டு 96 சிந்தனை யாளன், ப. 28).

மேலும் தீண்டாமை ஒழிப்பு, சாதி ஒழிப்பு குறித்து இது தொடர்பாகத் தமிழ்நாட்டு அரசுக்கு அவர் முன்வைக்கும் கோரிக்கைகளாவன:

தாழ்த்தப்பட்டோருக்குத் தனிக் குடியிருப்பு, தாழ்த்தப்பட்டோருக்குத் தனிக் குடிநீர்க் கிணறு, தாழ்த்தப்பட்டோருக்குத் தனிக்கோவில், தாழ்த்தப் பட்டோருக்குத் தனிச் சுடுகாடு, தாழ்த்தப்பட்டோருக்குத் தனிச் சமுதாயக் கூடம் என்பவை தாழ்த்தப்பட்டோரை என்றென்றும் தீண்டப்படாதவர் களாகவே வைக்க உதவிடும் என்பதை உணர்ந்திடுக.

தாழ்த்தப்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர்க்கெனத் தனித் தனிக் குடியிருப்புகள் வேண்டாம். எல்லா ஊர்களிலும் கலப்புக் குடியிருப்பு களையே கட்டுக.

கலப்புக் குடியிருப்பில் எல்லாத் தாழ்த்தப்பட்ட வகுப்புக் குடும் பங்களுக்கும் கட்டாயமாக வீடுகள் ஒதுக்கீடு செய்க.

ஊர்ப் பொதுக் கோயில், பொதுக் குடிநீர் இடங்களில் தாழ்த்தப் பட்டோரும் மற்றோரும் சமமாகப் புழங்க வழி கண்டிடுக.

விரைவில் தீண்டாமை ஒழிந்திட வழி அமைத்திடுக.

பார்ப்பான் சுடுகாடு, பறையன் சுடுகாடு, குடியானவன் சுடுகாடு எனச் சாதிக்கொரு சுடுகாடு இருப்பதை உடனடியாகச் சட்டவிரோதம் ஆக்குக.

சாதியின் பெயரால் மாவட்டங்களுக்குப் பெயரிட்டிருப்பதை அகற்றுக.

சாதிக் குறிப்போடு போக்குவரத்துக் கழகங்களுக்குப் பெயரிட்டிருப் பதை நீக்குக.

தமிழ் ஆட்சி மொழிக்கெனத் தனி அமைச்சகம் அமைத்ததைப் போல சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்புப் பிரச்சாரத்திற்கெனத் தனித்துறை ஒன்றை அமைத்திடுக. இதில் கல்வியும் பயிற்சியும் பற்றும் உள்ளவர்களை ஈடுபடுத்துக.

கோவில் அர்ச்சகர் பணி என்பது அனைத்து சாதியினர்க்கும் உரிய தான பொதுப்பணி என அறிவித்திடுக.

வேதாகமக் கல்லூரியை உடனே மூடுக.

வேதாகமக் கல்லூரி என்கிற பேரால் வேதத்தைக் கற்பிப்பது அனைத்துச் சாதியினருக்கும் அர்ச்சகராக வேண்டப்படாதது. அர்ச்சகராக விரும்பும் அனைத்துச் சாதியினர்க்கும் தமிழ், சைவ, வைணவ ஆகமங்களை மட்டுமே கற்றுத்தர வழி செய்திடுக.

அனைத்துச் சாதியினர்க்கும் அர்ச்சகர் பணி தருவதை இன்றே இப்போதே நடைமுறைப்படுத்துக (சிந்தனையாளன், சூன் 96 பக். 8–9).

## இந்திய அரசியல் சட்டம் வெகுமக்களுக்கு எதிரானது என்னும் கருத்தாக்கம்

இந்திய அரசமைப்பு - தேசிய இனங்களின் அடிமை முறி என்பார் கோபி வழக்கறிஞர் கு.ச. ஆனந்தன் அவர்கள்.

இந்திய அரசியல் சட்டம் ஒரு மோசடி எனக் காட்டமாக உரைப்பார் வே. ஆனைமுத்து. எப்படி?

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் பொருள் பொதிந்த கோட்பாடு களைக் கொண்ட முகப்பினை (Preamble) நாம் பார்த்தால் அதில், இந்திய மக்களாகிய நாம்... நமது அரசமைப்புச் சபையில் இந்த அரசமைப்பை இயற்றி, அங்கீகரித்து அதனை நமக்கு நாமே வழங்கிக் கொள்கிறோம் எனத் தெளிவாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

இந்திய மக்களாகிய நாம் எனவும் நமது அரசமைப்புச் சபை எனவும் அதில் குறிப்பிட்டுள்ளதை அத்தொடர்கள் தெளிவாக்குகின்றனவா? இல்லை. நமது அரசமைப்பை உருவாக்குவதற்காக வயது வந்தோர்க்கு வாக்குரிமை என்ற ஜனநாயக முறைப்படி, இந்திய அரசமைப்புச் சபை உறுப்பினர்கள் இந்திய மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை. இந்தியா சுதந்திரம் பெற்றபின், மறைமுகத் தேர்தல் மூலமாகக்கூட அச் சபையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படவில்லை.

நமது அரசியலமைப்புச் சட்டம், பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் படாத உறுப்பினர்களைக் கொண்டே உருவாக்கப்பட்டது. அதன் பின்னர் பொதுக்குடி ஒப்பம் - அதாவது Referandam என்ற முறையினாலும் அந்த அரசமைப்புச் சட்டத்திற்குரிய அங்கீகாரத்தையும் இந்திய நாட்டு மக்களிட மிருந்து பெறவில்லை.

அரசியல் நிர்ணய சபையில் காங்கிரசுக் கட்சி பெற்றிருந்த மிகப் பெரும்பான்மை, இந்திய மக்களின் நேரடித் தீர்ப்பால் உருவானதல்ல. நிலக்கிழார்கள், வரி மட்டும் செலுத்துவோர், மத, இன, பால் அடிப்படையில் தனித் தொகுதியைச் சார்ந்தவர்கள், இன்ன பிறவகையினர் - அதாவது - இந்திய மக்களில் 100க்கு 14 பேர் மட்டுமே 1935ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தினடிப்படையில் சுதந்திரம் ஒரு வெறுங்கனவு என்று கருதப்பட்ட காலத்தில் இந்தியா பிரிக்கப்படுமா? ஒன்றாயிருக்குமா? என்று ஆருடம்கூடக் கணிக்கப்படாத நேரத்தில் இந்திய அரசமைப்புச் சட்டத் தையும் இந்திய அரசியல் நிர்ணய சபையையும் யாரும் நினைத்துக்கூடப் பார்க்காத கால கட்டத்தில் 1945ஆம் ஆண்டில் அடிமை நாட்டின் மாநிலச் சட்டசபைகளுக்கான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தனர். ஆங்கில ஏகாதிபத்தியம், இந்தியப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணக் கொடுத்த ஒரு திட்டத்தின் (பிரித்தானியத் தூதுக் குழுத் திட்டத்தின்) அடிப்படையில் மேற் சொன்ன மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்கள் 1946ஆம் ஆண்டில் மறைமுகத் தேர்தலின் மூலமாக வாக்களித்து 'நமது' அரசமைப்புச் சபையின் உறுப் பினர்களை 'நமது' அரசமைப்பை உருவாக்குவதற்காகத் தேர்ந்தெடுத்தனர்.

அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் இந்தியத் துணைக் கண்டத்தின் 3/5 நிலப்பகுதியினையே ஒரு வகையாகப் பிரதிபலித்தனர். ஆங்கிலப் பேராதிபத்தியம் இந்திய மண்ணை விட்டு வெளியேறிய பின்ன ரும் கூட இந்திய மக்களினால் தேர்ந்தெடுக்கப்பட்ட புதிய அரசமைப்புச் சபை உருவாக்கப்படவில்லை. விடுதலை உரிமை பெற்ற இந்திய மக்களை எந்தக் கோணத்திலும் பிரதிபலிக்காததும் அடிமை நாட்டின் மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்களால் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உரிமையற்ற உறுப்பினர்களைக் கொண்டதுமான பழைய அரசமைப்புச் சபைக்கு - 40 கோடி மக்கள் சமுதாயத்தின் எதிர்காலக் குடியரசு அமைப்புச் சட்டத்தை உருவாக்கக்கூடிய முழு உரிமையினையும் இறைமையையும் அதிகாரத்தை யும் மக்கள் பிரதிநிதித்துவத்தையும் சுதந்திரத் திருநாளுக்கு ஒரு நாள் முன்னர் அதாவது 14.8.1947ஆம் நாளில் அச்சபையிலிருந்த அதிகாரப் பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்படாத காங்கிரஸ் உறுப்பினர்களே சட்டத்திற் கும் ஜனநாயக முறைக்கும் முரணாக - ஏதேச்சதிகார முறையில் திடீரெனத் தமக்குத்தாமே வழங்கிக் கொண்டனர்.

ஆகவே இன்றைய அரசமைப்பில் பொறிக்கப்பட்டுள்ள முகப்பிற் கும் உண்மையில் நடந்த நடப்பிற்கும் ஒன்றுக்கொன்று எவ்வகைத் தொடர்புமில்லை. சுருங்கக்கூறின் அரசமைப்பின் முகப்பில் கூறப்பட் டிருப்பவை உண்மைக்கும் சட்ட நியாயத்திற்கும் முரணானவை. (தேசிய இனங்களும் தமிழ்த் தேசியமும், கு.ச. ஆனந்தன், பக். 89 - 90.

இந்திய அரசமைப்பின் தந்தை என்று போற்றப்படும் அண்ணல் அம்பேத்கர் அவர்கள், அரசமைப்பை நான்தான் உருவாக்கினேன் என்று என் நண்பர்கள் கூறுகிறார்கள். ஆனால் அந்த அரசமைப்பைக் கொளுத்தும் முதல் ஆளாக நான்தான் இருப்பேன் என்பதைக் கூறுவதற்கும் நான் தயாராக உள்ளேன். மக்கள் 'நீதானே அரசமைப்பை வடித்தாய்' என்று என்னிடம் கூறி வருகின்றனர். அதற்கு நான் கூறும் மறுவிடை இதுவே: 'நான் ஒரு வாடகைக் குதிரை. என்னை எதையெல்லாம் செய்யச் சொன்னார்களோ, அதையெல்லாம் என் விருப்பத்திற்கெதிராகச் செய்தேன்' என்று குறிப்பிட்டார்.

வே. ஆனைமுத்து அவர்கள் இந்திய அரசியல் சட்டமே மோசடியான ஒன்று என்று சினந்து கூறக் காரணம் என்ன?

இந்தச்சட்டம் இந்தியாவில் இருக்கிற வெகுமக்களுக்கு எப்படிப் பட்ட வாழ்க்கையைத் தர வேண்டுமென்பதைப் பற்றியோ, எப்படிப்பட்ட நன்மைகளைத் தரமுடியும் என்பதைப் பற்றியோ சற்றும் இலட்சியம் கொள்ளாத ஒரு சட்டமாக இன்றைக்கு இருந்து வருகிறது? இந்திய மக்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்பதை முக்கிய நோக்கமாக அதில் அவர்கள் வைக்கவில்லை. வெள்ளைக்காரன் எப்படி இந்தியாவின் வெகு மக்களை அடக்கி ஆண்டானோ, அதேபோலவே இந்தியாவில் உள்ள பார்ப்பனர்களும் மேல் சாதிக்காரர்களும் முதலாளிகளும் நிலச்சுவான் தார்களுமாகிய சிறுபான்மையினர், வெகுமக்களை அடக்கி ஆள்வதற்கு ஒரு வலிமையான - கூர்மையான ஆயுதம் அவர்களுக்குத் தேவை. அதைத்தான் 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை அடிப் படையாக வைத்துக்கொண்டு - அமெரிக்கா, கனடா, பிரிட்டன், பிரான்சு ஆகிய நாடுகளினுடைய சட்டங்களில் தங்களுக்குச் சாதகமாக உள்ள கூறு களையும் சேர்த்து இந்திய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கினர்.

இந்தியாவில் வாழும் மக்களுக்குச் சமூக விடுதலை, அரசியல் விடுதலை, பொருளாதார விடுதலை - இந்த மூன்றையும் அளிப்பதற்கான தன்மையில் இச்சட்டம் உருவாக்கப்படவில்லை. (இந்திய அரசியல் சட்டம் வெகுமக்களுக்கு எதிரானது ஏன்? பக்.35 - 36.)

'சிங்கத்தைச் சிங்கத்தின் குகையிலே சந்தித்தவர்' என்று சொல்வார் களே அதைப் போல நீதிமன்றக் கூண்டிலேறி நீதிபதிகள் முன்பாகவே சிங்கமென முழங்கிய பெரியார் பற்றிய செய்தியை வே. ஆனைமுத்து 26.4.1957 அன்றைய குறள்முரசு ஏட்டில் வெளியிட்டுள்ளார்:

கனம் நீதிபதி அவர்களே! தாங்கள் எந்த சட்டத்தை அமுல் செய்து அதன் அடிப்படையில் நீதி வழங்குவதாகக் கருதுகிறீர்களோ அந்த

சட்டத்திற்கு நான் கட்டுப்பட்டவனாக ஆக்கப்பட்டிருக்கிறேன். ஆனால் அந்தச் சட்டத்திற்கு நான் மதிப்பு (Respect) அளிக்க மாட்டேன். ஏனெனில் அந்தச் சட்டம், மனுநீதி - நாரத ஸ்மிருதி - பகவத்கீதை - இராமாயணம் - பாரதம் முதலான ஆரிய வேத-மத-சாஸ்திரங்களின் அடிப்படையில் எழுதப்பட்டது. 'மீமாம்சம்' என்ற மதக்கோட்பாட்டை ஒத்துக்கொண்டு மத சம்பிரதாயங்கட்கும் சடங்குகட்கும் மதிப்புக் கொடுப்பது; வேதத்தை மட்டுமே நம்பி, சமஸ்கிருதத்தைத் தேவபாஷையாகவும் கொண்டிருந்த 'பண்டிட்டுகள் என்ற வடநாட்டுப் பார்ப்பனர்களைக் கூட்டி, காசியிலும், கல்கத்தாவிலும் பாட்னாவிலும் அலகாபாத்திலும் இருந்த வெள்ளைக் காரர்களால் செய்யப்பட்ட 'இந்துச் சட்டம்' என்பதாகப் பார்ப்பன ஆதிக் கத்திற்காக ஏற்பட்டது.

'திராவிடரின் மூவாயிரமாண்டு கால பண்பட்ட நாகரிகத்தையோ - திராவிடரின் வழிகாட்டி நூலான திருக்குறளையோ, திராவிடரின் ஒப்பற்ற தமிழிலக்கியங்களான அகநானூறு, புறநானூறு போன்ற நூல்களையோ உணர்ந்திருந்த தமிழ் மூதாதையர்களைக் கூட்டி அவர்களைக் கேட்டு ணர்ந்து அதன்பிறகு, திராவிடரின் வாழ்வை ஒழுங்குபடுத்துவதற்கான சட்டம் இயற்றப்பட்டிருந்து, அந்தச் சட்டப்படிக்குத் தீர்ப்பு அளிக்கும் நீதிமன்றமாக இந்த மன்றம் விளங்கினால் அதன் ஆணைகட்கு மதிப்புக் கொடுப்பேன். அவற்றிலும் தவறு காணப்பட்டால் கண்டிப்பேன். எனவே, இன்றுள்ள அமைப்பு முறையில், பார்ப்பனர்களாலும் வெள்ளையர்களாலும் செய்யப்பட்ட 'இந்துச்சட்டம்' என்கிற பார்ப்பன ஆதிக்கச் சட்டத்தின்படி ஏற்பட்டுள்ள - அல்லது ஏற்படப்போகும் தீர்ப்புக்கு நான் கட்டுப்பட வேண்டியவன் என்றாலும், அதற்கு மதிப்புக் கொடுக்க வேண்டியவன் ஆகமாட்டேன்.

இத்துணை வேகத்தன்மை நிரம்பிய துகள்களை வெளிப்படுத்தும் 'அணுகுண்டு'களைக் காட்டிலும் ஆற்றல் படைத்த அணுகுண்டைப் பார்ப்பனச் சேரிகளின்மேல் வீசியிருக்கிறார் பெரியாரவர்கள். (குறள் முரசு 26.4.57)

தொகுப்பாக அரசியல் சட்டம் பற்றி ஆனைமுத்து அவர்களின் கருத்து பின்வருமாறு:

அரசு என்றால் என்ன?

அரசாங்கம் என்றால் என்ன?

அரசியலமைப்புச் சட்டம் என்றால் என்ன?

நீதித்துறை என்றால் என்ன?

நிர்வாக இயந்திரம் என்றால் என்ன?

இவற்றையெல்லாம் நாம் சரியாகப் புரிந்துகொண்டாலொழிய நாம் நம் இலட்சியத்தில் வெற்றி அடைய முடியாது.

வர்ணாசிரம தர்மத்தை இன்னமும் தூக்கிப்பிடிக்கிற - சிறுபான்மை யினரால் வெகு மக்களை அடக்கி ஆளுவதற்காக உருவாக்கப்பட்ட, இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தை நாம் மாற்றியாக வேண்டும். அரசு என்பது வர்ணாசிரம தர்மத்தை ஒழிக்கக்கூடிய இலட்சியத்தைக் கொண்டதாக இருக்க வேண்டும். அத்தகைய அரசை நாம் நிர்மாணிக்க வேண்டும்.

நம் நாட்டில் பெரியார் வழியில் - அம்பேத்கர் வழியில் சிந்திப்பவர் களுக்கு வர்ணாசிரம ஒழிப்பு என்பது இலட்சியமாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட இலட்சியத்தின்படி இந்த அரசை மாற்றி அமைக்கக்கூடிய புரட்சிக்காரர்களாகப் படித்த இளைஞர்கள், வழக்கறிஞர்கள், ஆசிரியர்கள், பேராசிரியர்கள், தங்களை முழுவதுமாக அர்ப்பணித்துக்கொள்ள முடியா விட்டாலும் அவற்றை அடைவதற்கான கொள்கை, தத்துவம், நடைமுறை, வழிமுறை ஆகியவற்றைப் புரிந்துகொண்டு செயல்படவேண்டும். ஒரு குறிப் பிட்ட காலத்தில் நம் கொள்கையை அடைய முடியவில்லை என்றாலும் கூட அதை அடைவதற்கான கெட்டியான - தெளிவான - உண்மையான பாதையை நாம் அமைக்க வேண்டும். மக்களின் பிரச்சினைகளை எடுத்துக் கொண்டு முன்னேறுகிறபோது, கொஞ்சம் கொஞ்சமாக மக்களின் பிரச் சினைகளை மக்களுக்குப் புரியவைத்துவிட்டால் உறுதியாக நாம் வெற்றி பெறுவோம். (இந்திய அரசியலமைப்புச் சட்டம், நூல் ப.89)

***மார்க்சிய – பெரியாரிய நெறியில் இந்தியக் கூட்டாட்சி***

'இந்தியா ஒரு நேஷனா?' என முதன்முதலில் கேள்விக்குறி எழுப் பிய அறிவுலக மேதை தந்தை பெரியார், 'திராவிட நாடு திராவிடருக்கே' எனத் தீரமுடன் முழங்கிய அடலேறு அவர். பின்னர் அது 'தமிழ்நாடு தமிழருக்கே' என்கிற அரசியல் முழக்கமாக அமையப் பெற்றது.

பெரியார் பாதை தேர்தல் பாதை அன்று. மக்களைத் திரட்டிப் போராடி, அளவற்ற தியாகங்களைச் செய்து அடையக் கூடிய ஒன்றுதான் நாட்டு விடுதலை என்பது. ஆனால் 1949இல் பெரியாரைவிட்டுப் பிரிந்த பேரறிஞர் அண்ணா, தனி அரசியல் இயக்கம் கண்டார். தேர்தலில் போட்டியிட்டு வென்று அதன் மூலம் நாட்டு விடுதலையைப் பெற முடியும் என்கிற கருதுகோளுடன் செயல்பட்டார்.

திமுகவின் இந்தக் கொள்கை முடிவை வே. ஆனைமுத்து அந்த நாட்களில் மிகக் கடுமையாகச் சாடித் தம் ஏடுகளில் எழுதினார்:

கண்ணீர்த் துளிகளாகிய எங்கட்கு ஓட்டுப்போடுங்கள்! எங்களைச் சட்டமன்றத்திற்குள் நுழையவிடுங்கள்! சட்டமன்றத்திற்குப் போனால் அங்குப் போகின்ற ஒரே காரணத்தால் - நெய்வேலி நிலக்கரி தமிழ்நாட்டுக்குப் பயன்பட, சேலம் இரும்பு தமிழ்நாட்டுக்குப் பயன்பட ஏற்ற ஏற்பாடு செய்யும் வல்லமை எங்கட்குண்டு. ஆகவே அருமை திராவிட ஓட்டர்களே, தமிழ்ப்பார்ப்பனர்களே! எங்கட்கு ஓட்டுப் போடுங்கள்! என்பதாக அழகான வரிசைப்படுத்திய மொழிகளை அச்சிட்டு விளம்பரப்படுத்தி அதன் மூலம் தமிழ்நாட்டு இளைஞர்களையும் படித்த வாலிபர்களையும் பொது மக்களையும் மிக எளிதாக ஏமாற்ற விரும்புகிறார்கள் கண்ணீர்த் துளிகள்.

அதேபோல்தான், இன்றைய தேர்தலில் கண்ணீர்த்துளிகள் தங்களால் முடியாத செயலா? அல்லது முடியக் கூடியதா? என்பதை உணர வேண்டியது முதன்மை என்ற எண்ணம் சிறிதுமே இல்லாமல் (நன்றாக நினைவுறுத்துங்கள்!) வாயில் வந்ததைக் கூறி வாக்காளர்களை ஏமாற்றுகின்றனர்.

கண்ணீர்த்துளிகள் சட்டமன்றத்திற்குப் போவதால் நெய்வேலி நிலக்கரித் திட்டத்தில் ஊசிமுனை அளவுகூட முன்னேற்றமோ, வெற்றியோ காணமுடியாது. அப்படி முன்னேற்றம் கொண்டுவரும் ஆற்றல் இருக்கிறதே அது சென்னை மாநிலச் சட்ட மன்றத்திற்கே கிடையாது. சென்னை அரசினர்க்குங் கிடையாது.

நீங்கள் அனைவரும் எண்ணிப் பாருங்கள்;

(அ) நெய்வேலி நிலக்கரி, தமிழ்நாட்டுக்குப் பயன்பட வேண்டுமானால் திராவிட மக்கட்கு என்ன வேண்டும்! தனிச்சுதந்திர திராவிட நாடு வேண்டும்!

(ஆ) காவிரி வட்ட எண்ணெய் தமிழ்நாட்டுக்குப் பயன்பட திராவிடர்க்கு என்ன வேண்டும்? தன்னுரிமை பெற்ற திராவிட நாடு வேண்டும்!

(இ) சேலத்து இரும்பு தமிழ்நாட்டுக்குப் பயன்பட திராவிட இனத்தவர்க்கு என்ன வேண்டும்? தன்னாட்சி பெற்ற திராவிட நாடு வேண்டும்!

அதற்காக, சென்னைச் சட்டமன்றத்திலே போய், கண்ணீர்த்துளிகள் சாதிக்கப்போவதென்ன? சென்னை சட்ட மன்றம் என்பது இந்திய யூனியன் ஆட்சி எனப்படுகிற வண்டிச் சக்கரத்தில் ஒரு ஆரக்கால் அவ்வளவுதான்!

நெய்வேலி நிலக்கரி - சேலம் இரும்பு - கோவை வைரம் - பெரம்பலூர் ஜிப்சம் - பெரம்பலூர் தீயக முடிச்சு - அனுப்பட்டி - திருச்சி இரும்பு ஆகிய இவற்றையெல்லாம் திராவிடரின் தொழில் வளத்திற்குப் பயன்படுத்த விரும்பும் நமக்கு இந்திய அரசியல் சட்டப்படி எந்த உரிமையும் கிடையாது.

அப்படிப்பட்ட உரிமை டில்லிக்காரனுக்கு உண்டு; டில்லி பாராளுமன்றத்திற்கு உண்டு; அந்த உரிமை தமிழ்நாட்டிலுள்ள சட்ட மன்றத்திற்குக் கிடையாது.

எண்ணெய் வயல்கள், கனிவள எண்ணெய்கள் உள்ள மூல இடங்கள், பெட்ரோலியம் பெட்ரோலிய ஆக்கப் பொருள்கள், மற்ற நீர்ப்பொருள்கள், எளிதில் பற்றியெரியும் ஆபத்தான தன்மையுள்ள பொருள்கள் என்பதாகப் பாராளுமன்றத்தில் அறிக்கையிடப்பட்ட பொருள்கள் ஆகிய இவைபற்றிய ஒழுங்கு முறைகளைச் செய்வதும் இவற்றைப் பெருக்குத் திட்டங்களைச் செயற்படுத்துவதும் யூனியன் அரசுக்கு உட்பட்டது (எண் 53, யூனியன் பட்டியல் லிஸ்ட்டு 1, ஏழாவது ஷெட்யூல், இந்திய அரசியல் சட்ட விதி 246இன் படி, பக்கம் 239)

மேலும் சட்டப்பேரவைக்கு நுழைவது என்கிற முடிவை எடுத்து விட்ட எவரும் இந்திய அரசியல் சட்டத்திற்கு உட்பட்டே எச்செயலிலும் ஈடுபட முடியும் என்பதையும் மிகத் தெளிவாக விளக்குகிறார்.

பல்பிடுங்கப்பட்ட பாம்பை வைத்துக்கொண்டு பாம்பாட்டி வேடிக்கை காட்டுவது போல அரசியல் சட்டத்தை எதிர்த்துப் பேசுவது அல்லது அதற்கு முரணான கோரிக்கை எழுப்புவது என்பது இருக்கிறதே, அந்தப் பல் பிடுங்கப்பட்ட பிறகுதானே, மாகாண சட்டசபைக்குள் நுழைகிறான் இன்றைய எம்.எல்.ஏ.? ஆட்சியாளனுக்குப் பக்கபலமாக இருக்கிற அந்த அரசியல் சட்டப் பஞ்சாங்கத்தைக் கிழித்து – எரித்து – சாம்பலாக்கினாலன்றி, 'திராவிடர்க்கு விடுதலை கிடைக்கச் செய்வதற்கு என்ன யோக்கியதை பெற் றிருக்கிறார்கள்? சட்டம் படித்தோரே! கல்லூரிக் காளைகளே!

திராவிடர் நலனில் ஆர்வம் பூண்டோரே! நீங்களனைவரும் திராவிடப் பண்பாடு விடுதலை பெறுவதற்காக வடநாட்டு ஆதிக்கம் ஒழிவதற்காக - இதே நோக்கங்கட்காகக் கண்ணீர்த் துளிகள் தேர்தலில் நிற்கிறார்களென்று நம்புகிறீர்களா?

1957 மார்ச்சு 31க்குப் பிறகு, சென்னை மாநிலச் சட்டமன்றத்தின் முதல்கூட்டம் நடக்கப்போகும்போது, கண்ணீர்த் துளித்தீரர்களுள் தோற் பவர் பலர் போக, மீதியுள்ள சிலர் என்ன உறுதிமொழி கூறிச் சட்ட சபைக்குள் நுழைய வேண்டும் தெரியுமா?

இந்திய அரசியல் சட்டத்திற்குத் தெண்டனிடுகிறேன்!

இந்திய அரசியல் சட்டத்தைப் பயபக்தியுடன் மதிக்கிறேன்!

இந்திய அரசியல் சட்டத்தின்படி நிலைநாட்டப்பட்ட சட்டதிட்டங் கட்கு மதிப்புக் கொடுத்து என் கடமையைச் செய்வேனென்று கடவுள்மீது ஆணையாக நான் உறுதி கூறுகிறேன்!

நேர்மையுள்ள நெஞ்சினரே! சட்டத்தையே படித்துப்பாருங்கள்:

"மக்கள் மன்றத்திற்கு (அல்லது நாடுகள் மன்றத்திற்கு அல்லது மாகாண சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற (அல்லது நியமிக்கப் பெற்ற) அ.ஆ. ஆகிய நான் இந்திய அரசியல் சட்டத்தில் உண்மையான நம்பிக்கையுடையவனென்றும் அரசியல் சட்டத்தின்படி நிலைநிறுத்தப் பட்ட சட்டங்களின்படிக்கு இந்தியக் குடிமகன் ஒருவன் செய்ய வேண்டிய கடமைகளைச் சரிவரச்செய்வேனென்றும் நான் மேற்கொள்ளப்போகும் பணியை விசுவாசத்துடன் செய்வேனென்றும் கடவுளின்மீது ஆணை யாக (அல்லது) பயபக்தியை மனதிலிறுத்தி உறுதி கூறுகிறேன்."

(அரசியல் சட்டம் பிரிவு மூன்றில் பகுதி 3 பகுதி 7 பக். 212, 214)

I, A., B., having been elected (or nominated) a member of the Legislative Assembly (or Legislative Council) do swear in the name of God/Solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established and that I will faithfully discharge the duty upon which I am about to enter" (Part VII. Third Schedule, Constitution of India, P.21[4])

தந்தை பெரியார் அவர்களுடன் அவர்தம் காலம் முழுவதும் இணைந்து பணியாற்றிய வே. ஆனைமுத்து அவர்களும் தொடக்கம் முதலே நாட்டுப் பிரிவினையை ஆதரித்து மிகத் தீவிரமாக எழுதும் போக் கைக் காண்கிறோம். 14.5.57 குறள்முரசு ஏட்டில் 'திராவிடம் காப்போம்' என்கிற தலைப்பிட்டு அவர் எழுதியுள்ளதாவது:

திராவிடனுக்குப் பிறந்த திராவிடனின் கடமையென்ன?

பம்பாயிலும் ஆமதாபாத்திலும் கல்கத்தாவிலும் புனாவிலும் எங்கள் இனத்தவர் கூலி வேலைக்காரர்களாகவும் உங்கள் இனத்தவர் மேனி குலுங்காத மேல்தர அலுவலர்களாகவும் வாழும் அவல நிலையைப் பொறுக்க முடியாது. எனவே எங்கள் நாட்டினின்றும் வெளியேறுவதைத் தவிர வேறு வழி கிடையாது என்பதை எடுத்துணர்த்தி அதன்படிச் செய லாற்றுவதுதான்.

எனவே திராவிடரின் நல்வாழ்வுக்கு உலைவைத்த பார்ப்பானுக்குப் பாதுகாப்பளித்துவிட்டு அதன் பிறகு 'திராவிடத்தைக் காப்போம்!' என்று கூறி ஊராரை ஏய்ப்பதை விட்டுவிட்டு எங்கு வாழ்ந்தாலும் நம் இனத்தவர் என்ற ஒரே அடிப்படையில் 'திராவிடரைக் காப்போம்' 'திராவிடத்திலுள்ள ஆரியனையும் வட நாட்டானையும் வெளியேற்றுவோம்' என்ற சூளுரையை மக்கள் மன்றத்தில் எடுத்துணர்த்தித் திராவிடரைக் காக்க வேண்டும்.

ஆட்டைக்காக்க வேண்டுமானால், ஓநாயைக் கொல்ல வேண்டாமா?

தற்போதைய நிலையில் 'தனி நாடு' பற்றிய அவருடைய எண்ணம் யாது? அவரே சொல்கிறார்:

இப்போது, 'தந்தை பெரியார் கோரிய தமிழ்நாடு விடுதலை' குறித்து நாம் காண்போம்:

'தமிழ்நாடு – தமிழருக்கே!' என்ற முழக்கம் எதற்கு? தனிச் சுதந்திரத் தமிழ்நாடு வேண்டும் என்பதற்குத்தானே!

'திராவிட நாடு திராவிடருக்கே!' என்ற முழக்கம் எதற்கு?

சுதந்திரமான திராவிட நாடு வேண்டும் என்பதற்குத்தானே!

இவற்றை வென்றெடுப்பது என்பது நெய்யில் பொரித்துத் தின்னவா? ஊறுகாய் போடவா? பார்ப்பானிடம் நாட்டை ஒப்படைத்து ஆளச் சொல்லவா? இல்லை. உழைப்பாளிகளான – வெகுமக்களான நம் மக்களே நம்மை நாமே சுதந்திரமாக ஆளவேண்டும் என்பதற்காகத்தான். பெரியார் தனி நாடு கோரியது இதற்காகத்தான். பெரியார் முழுக்க முழுக்கவும் முக்காலத்தும் ஓர் அரசியல்வாதியாக விளங்கியே இக்கோரிக்கையை முன்வைத்தார்.

ஆனால் பெரியார் கோரிய நாட்டுப் பிரிவினைக்குப் போதிய வலிமை அவருடைய காலத்திலேயே சேர்க்கப்படவில்லை. போதாக் குறைக்கு, பெரியாரின் வழிவந்த திராவிட கட்சிகள், பெரியார் இயக்கத்தின் குறிக்கோளை உள்ளீடும் உரமும் அற்றவையாக ஆக்கிவிட்டன.

திராவிடர் கழகத்தின் இன்றைய இழிந்த போக்கானது, காசை வணங்கும் கயமை நிலைக்குப் பெரியார் தொண்டர்களை ஆளாக்கிவிட்டது. இது ஒரு கேடான நிலைமை.

இன்றைய அறிவியல் வளர்ச்சி – தொலைதூரத் தொடர்புக் கருவிகள் வளர்ச்சி. இருந்த இடத்திலிருந்தே கணைகளை ஏவி நாடுகளை அழிக்கும் ஆயுதங்கள் பெருக்கம் இவற்றுக்கு இடையே, சின்னஞ்சிறிய 'தனி சுதந்திர நாடுகள்' என்பவை ஏகாதிபத்திய – முதலாளித்துவ பன்னாட்டு மூலதனத்துக்கு எளிதில் இரையாகிவிடுகின்றன.

இன்று உள்ள 185 சுதந்தர நாடுகள் தனிக்குடியுரிமை, தனிக்கொடி, தனிப்படை, தனி அரசியல் சட்டத்துடன் இயங்குகின்றன. ஆனால், இவற்றில் எந்த ஒரு நாட்டிலும் இன்று 'எல்லார்க்கும் எல்லாம்' என்பதை உத்தரவாதம் – உறுதிப்பாடு செய்கிற அரசமைப்பு இல்லை. மேலும் இவற்றில் எந்த ஒரு நாடும் பொருளாதார சுதந்திரத்தோடு இல்லை. இதை நாம் உணர வேண்டும். எனவே இந்தியாவில் 'எல்லார்க்கும் எல்லாம்' என்கிற இலக்கை

அடைந்திட முதன்மை தருவோர் - சமதர்ம அரசு அமைப்புக் கொண்ட - மொழிவழித் தேசிய மாநில அரசுகள், தாங்களே விரும்பி இணைந்து கொள் ளுகிற ஓர் உண்மையான கூட்டாட்சியாக இந்தியாவை உருவாக்கப்பாடு படுவது சரியானது என மா.பெ.பொ.க. திடமாகக் கருதுகிறது.

சுதந்திரத்தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டி, படைகளுக்கும் ஆயுதங் களுக்கும் செலவு செய்கிற தனிச்சுதந்திர நாடுகளாக இந்தியா விலுள்ள 25 மாநிலங்களும், 7 யூனியன் பிரதேசங்களும் அமையப் பெற்றால், எந்தச் சுதந்திர நாட்டு மக்களுக்கும் எல்லார்க்கும் எல்லாம் என்பதைக் குறிப்பிட்ட ஒரு கால எல்லைக்குள்ளோ அல்லது என்றைக்குமோ கிடைக்கச் செய்ய முடியாது. எந்த நாட்டுச் சுதந்திர மக்களுக்கும் ஒருபோதும் அமைதியான வாழ்வு கிட்டாது என மா.பெ.பொ.க. திட்ட வட்டமாகக் கருதுகிறது.

இன்று ஒவ்வொரு சிந்தனையாளன் ஏட்டிலும் அதன் முகப்புப் பகுதியில் இடம் பெற்றுள்ள கொள்கை முழக்கங்களாவன: 'இந்தியாவில் பொதுவுடைமை மலர மார்க்சிய - பெரியாரிய நெறியில் தேசிய இனவழிப் பட்ட சம உரிமை உடைய சமதர்மக் குடியரசுகள் ஒருங்கிணைந்த இந்தியா வின் பொதுவுடைமை மலர மார்க்சிய - பெரியாரிய நெறியில் தேசிய இன வழிப்பட்ட - சம உரிமை உடைய சமதர்மக் குடியரசுகள் ஒருங்கிணைந்த உண்மையான கூட்டாட்சி அமைய ஆவன செய்தல்

> உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள் - மார்க்ஸ், ஏங்கல்ஸ்
>
> ஒடுக்கப்பட்ட தேசிய இனமக்களே ஒன்று சேருங்கள் - இலெனின்
>
> ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களே ஒன்று சேருங்கள் - பெரியார் மார்க்சிய பெரியாரியம் என்பது ஏன்? - விளக்கம்.

"உலகில் சமதர்ம உணர்ச்சிக்கு விரோதமான தன்மைகளில் மற்ற தேசத்திற்கும் இந்தியாவுக்கும் ஒரு முக்கியமான வித்தியாசம் இருந்து வருகிறது. அதென்னவென்றால் மற்ற நாடுகளில் ஒரு விஷயந்தான் முக்கியமாகக் கருதப்படுகிறது. அதாவது முதலாளி பணக்காரன் வேலையாள் (ஏழை) என்பதுவேயாகும். ஆனால் இந்தியாவிலோ மேல் சாதியார் கீழ்ச் சாதியார் என்பது ஒன்று அதிகமாகவும் முதன்மையாக வும் இருப்பதால் அது பணக்காரன் ஏழைத் தத்துவத்திற்கு ஒரு கோட் டையாக இருந்து காப்பாற்றிக் கொண்டு வருகிறது என்பது 14.12.1931இல் பெரியார் முன்வைத்த கருத்து.

இந்தக் கருத்து இந்தியாவில் சமதர்மம் மலர வேண்டும் என்பதையும் இந்திய சமுதாய அமைப்பில் செயற்கையாக உள்ள முதன்மையான தடையையும் தெளிவாகச் சுட்டிக்காட்டுவது ஆகும். உலகில் பல நாடு களிலும் உள்ள சமுதாயங்களில் பேதங்களைப் பாராட்டுவதற்கான பல கூறுகள் உள்ளன. உலக நாடுகள் பலவற்றிலும் எங்குமே இல்லாததும் நூதனமானதுமான சாதி என்றகிற ஒரு கூறு அதிகமானதாகவும் பேதத் துக்கு அடிப்படையானதாகவும் இங்கே இருக்கிறது. இந்த நூதனமான ஒரு பேதத்தன்மை இந்தியாவில் மட்டுமன்றி, இந்திய வம்சா வழியினர் குடி யேறியுள்ள எல்லா நாடுகளிலும் இன்றும் உள்ளது.

மார்க்சிய சித்தாந்தப்படி, சமூகத்தின் அடித்தளமாக விளங்குகிற உற்பத்திச் சாதனங்கள், உற்பத்திக் கருவிகள், உற்பத்தி உறவுகள் இவற்றின் அமைப்புக் காரணமாக அந்தந்தக் காலத்தில் தோன்றிய மேல் கட்டுமானங்கள்தாம் மதம், சாதி, அரசியல் கொள்கைகள், நீதித்துறை கோர்ட்டுகள், சட்டங்கள், ஒழுங்கு விதிகள் மற்றும் இவற்றைச் சார்ந்தே வளர்ந்துவிட்ட கருத்துக்கள், தேற்றங்கள், சமுதாய உணர்ச்சிகள், இயல் புகள் ஆகிய எல்லாம் ஆகும் என்பதுதான்.

எனவே சமுதாய அடித்தளத்தை அடியோடு மாற்றிவிடாமல் அந்த அடித்தளத்தின் பிரதிபலிப்புகளாக இருக்கிற மேலே சொல்லப்பட்டவை போன்ற மேல் கட்டுமானங்களை அழிக்கவோ, மாற்றவோ, சிதைக்கவோ முயற்சி செய்வது, மார்க்சிய சித்தாந்தத்துக்கு எதிரானது. கருத்தோடு போராடுவது, நிழலோடு சண்டையிடுவது என்பதே இதன் பொருள்.

இயக்கவியல் பொருள்முதல் வாதம், வரலாற்றியல் பொருள்முதல் வாதம் நமக்குக் கற்பிப்பது இதுதான். இதுவே உண்மையும் ஆகும்.

சாதி அமைப்பு என்பது இங்கு ஒரு மேல் கட்டுமானமாக மட்டும் இல்லாமல், சமுதாய அடித்தளத்தின் பிரிக்க முடியாத ஒரு கூறாக ஆகி விட்டது. இன்று அது அப்படியே இருக்கிறது என்றுதான் பெரியார் திடமாகக் கருதினார். எனவேதான் மார்க்சிய - பெரியாரியம் என நாம் கூறுகிறோம்.

இம்மாபெரும் இலக்கை அடையவும் இந்தியாவில் ஓர் உண்மை யான கூட்டாட்சி அமைக்கப்படவும் மேற்கொள்ளப்பட வேண்டிய வேலைத் திட்டங்கள் யாவை என்பதைப் பற்றி வே. ஆனைமுத்து பட்டியல் இடுகிறார். அவற்றை முன்வைத்து இக்கட்டுரையை நாம் நிறைவு செய்வோம்.

இந்தியாவில் ஓர் உண்மையான கூட்டாட்சி அமைக்கப் பாடுபடுவதே மா.பெ.பொ.கவின் அரசியல் இலக்கு.

இந்த இலக்கை அடைவதற்கான வேலைத் திட்டங்கள்:

1. தாழ்த்தப்பட்டோருக்கான தனிக்குடியிருப்புக்கள் இருப்பதை அகற்றி, தாழ்த்தப்பட்டோரும் மற்ற பிரிவினரும் கலந்து குடியிருக்கிற தன்மையில் கலப்புக் குடியிருப்புகளை உருவாக்க வேண்டும். சாதிக்கு ஒரு சுடுகாடு இருப்பதை ஒழிக்க வேண்டும்.

2. 1950க்கும் 1986க்கும் இடையில் மாநில அரசாங்கத்தினால் நிறை வேற்றப்பட்ட நில உச்சவரம்புச் சட்டங்களை நடைமுறைக்குக் கொண்டுவரப் போராட வேண்டும். இதன் மூலம் கிடைக்கும் உபரி நிலமும் அரசுப் புறம்போக்கு நிலமும் ஆதித்திராவிடக் கூலி விவ சாயத் தொழிலாளிகளுக்கும் மற்ற வகுப்பிலுள்ள நிலமற்றோர்க் கும் கிடைக்கச் செய்யப் போராட வேண்டும்.

3. இந்தியாவிலுள்ள எல்லாப் பிரிவு மக்களுக்கும் கல்வியிலும் வேலை யிலும் விகிதாச்சார ஒதுக்கீடு வர வழி காணவேண்டும்.

4. அந்தந்த மாநில எல்லைக்குள் அமைந்து இயங்குகிற இந்திய மய்ய அரசின் அலுவலகங்கள் எல்லாவற்றிலும் அந்தந்த மாநில ஆட்சி மொழியே அலுவல் மொழியாக ஆக்கப்படவேண்டும்.

5. இந்திய ஆட்சிப் பணி (ஐ.ஏ.எஸ்.) என்பது அடியொடு ஒழிக்கப் பட்டு ஆட்சிப் பணிப் பொறுப்பு மாநிலங்களிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். இந்தியக் காவல் துறைப்பணி இந்திய நீதித்துறைப்பணி முதலானவையும் ஒழிக்கப்பட்டு மாநிலங்களிடமே இவை ஒப்ப டைக்கப்பட வேண்டும்.

6. இந்திய உச்ச நீதிமன்றம் என்பது உடைக்கப்பட்டு, அந்தந்த மாநிலத்திலேயே உச்ச அதிகாரம் படைத்த நீதிமன்றம் அமைக்கப்பட வேண்டும்.

என்கிற இவற்றை உடனடி வேலைத் திட்டங்களாக முன்வைத்துப் போராடுவது, ஒன்றுபட்ட இந்தியாவைக் கலகலக்கச் செய்யும். அடுத்து ஒவ்வொரு மாநிலத்துக்கும் தனித்தனியான அரசியல் அமைப்புச் சட்டம் தனிக்குடியுரிமை, தனிக்கொடி, தனி பாதுகாப்புப்படை இவற்றை உள்ளடக் கியதாக ஒவ்வொரு மாநிலமும் முன்னுரிமை படைத்ததாக உருவாக்கப் படவேண்டும்.

இன்று நம்மிடையே உள்ள பெரியார் தொண்டர்கள் இப்புரிதல்களு டன் ஒருங்கிணைவதாலும் சமதர்மவாதிகளும் மார்க்சிய - பெரியாரிய - அம்பேத்கரியத் தொண்டர்களும் ஒருங்கிணைவதாலும் இன்னும் ஒன்றி ரண்டு தலைமுறைக் காலத்தில் நாம் இந்தக் குறிக்கோளை நிறை வேற்ற முடியும்.

## நூற்பட்டியல்

1. குறள் மலர் - தொகுதிகள்
2. குறள் முரசு - தொகுதிகள்
3. சிந்தனையாளன் - தொகுதிகள்
4. தமிழ்நாட்டில் பண்பாட்டுப் புரட்சி, வே. ஆனைமுத்து
5. இந்திய அரசு வெகுமக்களுக்கு எதிரானது ஏன்?, வே. ஆனைமுத்து
6. தமிழர்க்கான வாழ்க்கை நெறி, வே. ஆனைமுத்து (புலமை, சூன் 1996)
7. இந்தியாவில் தேசிய இனங்களும் தமிழ் தேசியமும் கு.ச. ஆனந்தன்
8. பெரியார் கொள்கை வெற்றிக்குப் பெரியார் தொண்டர்கள் செய்ய வேண்டியது என்ன?

# இதழாளர் டி. கே. சீனிவாசன்

## டி. கே. எஸ். இளங்கோவன்

திருச்சிராப்பள்ளி கோதண்டபாணி சீனிவாசன், 1922ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 14ஆம் நாள் திருச்சியில் திரு. கோதண்டபாணி திருமதி ஆனந்தவல்லி அம்மையார் ஆகியோரின் இரண்டாவது மகனாகப் பிறந்தார்.

அவருடன் பிறந்தவர்கள் ஒரு மூத்த சகோதரர், ஒரு இளைய சகோதரர் மற்றும் இளைய சகோதரிகள் மூவர்.

**கல்வி**

திருச்சி இ.ஆர். உயர்நிலைப் பள்ளியிலும் பசுமலை உயர்நிலைப் பள்ளியிலும் படித்த அவர் பள்ளியிறுதி வகுப்போடு கல்வி நிறைவு பெற்றவர்.

**குடும்பச் சூழல்**

வசதிமிக்க குடும்பத்தில் பிறந்தவர் டிகே. சீனிவாசன். அவருடைய தந்தையார் இராமேசுவரம் அருகிலுள்ள மண்டபம் எனும் ஊரில் ஆங்கி லேயக் கப்பல் நிறுவனம் ஒன்றில் அதிகாரியாகப் பணியாற்றினார். அவருடைய பெரியப்பா சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் தென்னிந்திய இரயில்வேயில் முதல் இந்திய அதிகாரி. ஆகவே பள்ளிப்படிப்பு முடிந்த உடனேயே இரயில்வேயில் பணிபுரியத் தொடங்கினார்

டி.கே. சீனிவாசனின் பெற்றோர்கள் ஆழ்ந்த ஆன்மிகவாதிகள். தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் சில கோயில்களைப் பராமரித்தவர்கள். அப்படிப்பட்ட குடும்பத்தில் பிறந்தாலும், தன்னுடைய பள்ளிப் பருவம் முதல் டி.கே. சீனிவாசன் அவர்கள் தென்னிந்திய நல உரிமைக் கழகச் செயல்பாடுகளினால் ஈர்க்கப்பட்டு, 'ஜஸ்டிஸ்' கட்சி உறுப்பினரானார்.

தொடர்ந்து, சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் எனத் திராவிட இயக்கத்திலேயே தன் வாழ்நாள் முழுவதும் பணி யாற்றி வந்தார்.

1940களில் திருச்சியில் திராவிட வாலிபர் கழகம் என்ற அமைப்பை உருவாக்கி, அதன் செயலாளராகப் பல காலம் பணியாற்றினார்.

திராவிட இயக்கப் பேச்சாளர்களில் தலைசிறந்து விளங்கிய சிலரில் டி. கே. சீனிவாசன் ஒருவராகக் கருதப்பட்டார்.

1959ஆம் ஆண்டு இரயில்வே பணியிலிருந்து வெளியேறிய அவர் 1962 ஆம் ஆண்டு நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் கும்பகோணம் தொகுதியில் போட்டியிட்டுத் தோல்வியுற்றார்.

1970ஆம் ஆண்டு தி.மு.கழகத்தின் சார்பில் மாநிலங்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆறாண்டுகள் பணியாற்றினார்.

1980ஆம் ஆண்டு தமிழ்நாடு திட்டக்குழுவின் துணைத் தலைவராகப் பொறுப்பேற்று ஓராண்டு பணியாற்றினார்

1982ஆம் ஆண்டு தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவன மேலாண்மை இயக்குநராகப் பொறுப்பேற்று மூன்றாண்டுகள் பணியாற்றினார்.

1989ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 9ஆம் நாள் தன்னுடைய 67ஆவது வயதில் மரணமடைந்தார்

**எழுத்தாளர் டி. கே. சீனிவாசன்**

40களில் புதுக்கோட்டையிலிருந்து திரு. முருகு. சுப்பிரமணியம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு 'பொன்னி' என்ற இலக்கிய இதழ் ஒன்று வெளிவந்து கொண்டிருந்தது.

திராவிட இயக்கத்தின் பல்வேறு இலக்கியச் சிந்தனையாளர்களுக்கும் அந்த இதழ் ஒரு வடிகாலாய் அமைந்திருந்தது. திரு.டி.கே சீனிவாசன் அவர்கள் 'பொன்னி' இதழின் முதன்மை எழுத்தாளராக உருவானார். 1947 முதல் தொடர்ந்து பல்வேறு சிறுகதைகளையும் புகழ் மிக்க 'ஆடும் மாடும்' என்ற தொடர்கதையையும் 'பொன்னி'யில் எழுதிவந்தார்.

தொடர்ந்து முரசொலி, வாழ்வு, போர்வாள், இனமுழக்கம், திராவிட நாடு, தென்னகம் போன்ற பல்வேறு திராவிட இயக்கச் சிற்றிதழ்களில் சிறுகதைகள், கட்டுரைகள் மற்றும் தொடர்கதைகள் எழுதியிருக்கிறார்.

**இதழாளர் டி. கே. சீனிவாசன்**

விடுதலை பெறுவதற்கு முன்பு தமிழகத்தில் பல்வேறு விடுதலை இயக்க இதழ்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துகொண்டிருந்தன. குறிப்பாகத் தினமணி, சுதேசமித்திரன், நவசக்தி, குடியரசு போன்ற இதழ்களும் ஆங்கிலத்தில் இந்து, சுயராஜ்யா போன்ற இதழ்களும் விடுதலை

இயக்கக் கொள்கைகளை வலுவாகவும் முழுமூச்சுடனும் பிரச்சாரம் செய்து வந்தன.

விடுதலைக்குப் பின் மேற்கண்ட இதழ்கள் வணிக முறையிலான செய்தித்தாள்களாக மாறித் தமிழ் நாட்டின் பெரும்பான்மையான மக்களால் விரும்பிப் படிக்கப்பட்ட இதழ்களாக மாறின.

அந்தச் சூழலில் திராவிட இயக்கம், தங்களுடைய இலட்சியங்களை யும் கொள்கைகளையும் மக்கள் மன்றத்தில் எடுத்துவைப்பதற்குச் சில இதழ்களைத் தொடங்கியது. திராவிடர் கழகத்தின் சார்பில் 'விடுதலை'யும் தி.மு.கழகத்தின் சார்பில் 'நம் நாடும்' அதிகார பூர்வ இதழ்களாக விளங்கின. மேலும் திராவிட இயக்கத் தலைவர்கள் பலரும் தனித் தனியே பல இதழ்களை நடத்திவந்தனர். கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் 'முரசொலி', நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களின் 'மன்றம்' கே. ஏ. மதியழகன் அவர்களின் 'தென்னகம்' பேராசியர் க. அன்பழகன் அவர்களின் 'புதுவாழ்வு' காஞ்சி மணிமொழியார் அவர் களின் 'போர்வாள்' என்.வி. நடராஜன் அவர்களின் 'திராவிடன்' போன்ற இதழ் களோடு அறிஞர் அண்ணா அவர்களின் தமிழ் இதழான 'திராவிட நாடு' மற்றும் ஆங்கில இதழ்கள் 'home land' போன்ற இதழ்கள் கடுமை யான வணிகப் போட்டிக்கிடையே மிகச்சிறிய அளவானாலும் தொடர்ந்து தமக்கென ஒரு வாசகர் வட்டத்தை உருவாக்கிக் கொண்டு வளர்ந்தன.

அத்தகைய சூழ்நிலையில் உருவான இதழ்தான் 'ஞாயிறு'.

ஏ.கே. வேலன் அவர்களை ஆசிரியராகவும் வெளியிடுபவராகவும் கொண்டு வெளிவந்த அந்த இதழில்தான் டி.கே. சீனிவாசன் ஒரு இதழாளராக அறிமுகமானார்.

'ஞாயிறு' வார இதழ் தஞ்சை கரந்தையிலிருந்து வெளிவந்தது. பதினாறு பக்கங்களுடன் வெளிவந்த அந்த இதழில் அரசியல் கட்டுரை கள் மற்றும் சிறுகதைகள் இடம் பெற்றிருந்தன.

ஏனைய திராவிட இயக்க இதழ்கள் போலவே ஞாயிறு இதழும் காங்கிரசு எதிர்ப்பு, மூட நம்பிக்கை ஒழிப்பு, பார்ப்பனர் ஆதிக்க எதிர்ப்பு, இந்தி எதிர்ப்பு, வடவர் ஆதிக்க எதிர்ப்பு போன்றவற்றை முன்னிலைப் படுத்திவந்தது. திராவிட இயக்க இதழ்கள் அனைத்திலும் கொள்கை சார்ந்த சிறுகதைகள், கவிதைகள், மேலை நாட்டு வரலாறுகள் இடம் பெறும். அதைப் போலவே ஞாயிறு இதழிலும் தலையங்கம், அரசியல் விமர்சனக் கட்டுரை, சிறுகதை, வரலாற்றுக் கட்டுரை, தி.மு. கழகச் செய்திகள் ஆகியவை இடம்பெற்றன.

ஞாயிறு இதழில் பெரும்பாலான கட்டுரைகளை எழுதியவர் டி.கே. சீனிவாசன். இதழ் வெளிவந்த காலத்தில் அவர் தென்னக இரயில்வேயில் பணியாற்றி வந்த காரணத்தால் தனது பெயரை, 'தாமரைச் செல்வன்' என்று மாற்றிப் பயன்படுத்தி வந்தார்.

மேலும், கண்ணாடி, தேவன், வண்ணன், தாமரை, உழவன், 'டிகே. எஸ்' என்று பல்வேறு புனைபெயர்களைப் பயன்படுத்தி எழுதி வந்தார்

'ஞாயிறு' இதழ் 16 பக்கங்கள் கிரவுன் ¼ அளவில் பக்கத்துக்கு இரண்டு பத்திகளைக் கொண்டதாக வெளிவந்தது.

அட்டையில் புகழ்பெற்ற திராவிட இயக்கத் தலைவர்கள், கிரேக்கச் சிந்தனையாளர்கள், ரோமானிய வரலாற்று நாயகர்கள், மேலைத் தத்துவ இயல் அறிஞர்கள் போன்றோரது புகைப்படங்கள் வெளிவந்தன. பின் அட்டையில் பெரும்பாலும், திராவிட இயக்க உணர்வாளர்கள் தயாரித்த, நடித்த, கதை, வசனம் எழுதிய, சமுதாயச் சீர்திருத்தத் திரைப்படங்களின் விளம்பரங்கள் இடம் பெற்றிருந்தன.

'சமூக நீதி' என்ற தலைப்பின்கீழ் தி.மு.கழகக் கொள்கை விளக் கங்களைத் தொடர்கட்டுரையாகச் 'செல்வன்' என்ற புனைபெயரில் டி.கே. சீனிவாசன் எழுதி வந்தார். 'எங்கள் குடும்பம்' என்ற தலைப்பில் 'டி.கே.எஸ்' என்ற புனைபெயரில் தி. மு. கழக முன்னணித் தலைவர்களான மூவலூர் ராமாமிர்தம் அம்மையார், கே.ஏ. மதியழகன், கே. கே .நீலமேகம், மன்னை ப. நாராயணசாமி, மதுரை எஸ். முத்து, கலைஞர் மு.கருணாநிதி, நாவலர் இரா. நெடுஞ்செழியன் மற்றும் பல்வேறு தலைவர்களின் வாழ்க் கைக் குறிப்புகளைப் புகைப்படத்துடன் கட்டுரையாக வடித்துத் தந்தார். டி.கே. சீனிவாசன்.

'ஏழையின் கதை' என்ற தலைப்பில் தமிழ்நாட்டு மக்களின் நிலை யினையும் வடவர் ஆதிக்கத்தால் புறக்கணிக்கப்பட்டு வந்த தென்னக மக்களின் சீர்கேடுகளையும் 'கண்ணாடி' என்ற புனைபெயரில் எழுதிவந்தார்.

ஏறத்தாழ ஒன்றரை ஆண்டு காலம் தொடர்ந்து வெளிவந்த 'ஞாயிறு' இதழ், பிறகு பொருளாதாரப் பிரச்சனையால் நின்று போயிற்று.

அதன் பின்னர் 1960 ஆம் ஆண்டு சென்னையிலிருந்து கரந்தை திரு.என்.எஸ் சண்முகவடிவேல் அவர்களை வெளியிடுபவராகக் கொண்டு வெளிவந்த 'தாய் நாடு' இதழில் ஆசிரியர் பொறுப்பேற்று நடத்தினார் டி.கே. சீனிவாசன்.

தாய் நாடு இதழும் ஏறத்தாழ 'ஞாயிறு' இதழ் போன்ற அமைப் புடன் வெளிவந்தது.

'செல்லரித்த நோட்டும் செல்லாத சில்லறையும்' என்ற தலைப்பில் டி.கே. சீனிவாசன் எழுதி வந்த அரசியல் விமர்சனத் தொடர் 'தாய் நாடு' வெளிவந்த காலத்தில் சிறப்பாகப் பேசப்பட்டது.

தாய்நாடு இதழும் சில மாதங்களுக்குப் பிறகு பொருளாதாரச் சிக்கல்களால் நிறுத்தப்பட்டது.

## டி.கே. சீனிவாசனின் எழுத்தாற்றல்

திராவிட முன்னேற்றக் கழக வரலாற்றில் ஆற்றல்மிக்க எழுத்தாளர் களில் ஒருவராக விளங்கியவர். டி.கே.சீனிவாசன்.

அவர் படைத்த இலக்கியங்கள் திராவிட இயக்க இலக்கியங்களில் முதன்மையாகப் பேசப்பட்டன.

அவருடைய சிறுகதைகள் கொள்கை சார்ந்த பிரசாரத்தை உள்ளடக்கியனவாக இருப்பினும் சிறுகதைக்குரிய முழுமையான இலக் கண வரம்புக்குள் அமைந்தனவாக ஆய்வாளர்களால் கருதப்பட்டன.

'தமிழ்ச் சிறுகதைகளின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற நூலில் புகழ்பெற்ற ஆய்வாளர் பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்கள் டி.கே. சீனிவாசனின் சிறுகதைகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'திராவிட இயக்க எழுத்தாளர்களின் சிறுகதைகளிலேயே இவரது சிறுகதைகள்தாம் இலக்கணத்தோடு சிறந்து விளங்குகின்றன என்று குறிப்பிடுகிறார்.

டி.கே.சீனிவாசன் 'ஆடும் மாடும்' என்ற நெடுங்கதையின் முதல் பதிப்புக்கு முன்னுரை வழங்கிய பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் 'பேச்சில் இவரை அண்ணாவின் எதிரொலி என்பார்கள்; ஆனால் எழுத் தில் இவர் அனைவரையும் விஞ்சி நிற்கிறார், என்று குறிப்பிட்டுள்ளார்.

'ஆடும் மாடும்' என்ற நூலை மதிப்புரை செய்த தினமணி நாளிதழ் 'டி.கே. சீனிவாசன் தமிழகத்தின் காண்டேகர்' என்று குறிப்பிட்டுள்ளது.

பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்கள் ஒரு கட்டுரையில், தமிழிலிருந்து பல மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடக் கூடிய பத்துச் சிறுகதைகளில் டி.கே. சீனிவாசன் எழுதிய 'துன்பக்கதை' என்ற சிறுகதையும் ஒன்று என்று குறிப்பிடுகிறார்.

புகழ்பெற்ற எழுத்தாளர் சா. கந்தசாமி அவர்கள், திராவிட இயக்க எழுத்தாளர்களிலேயே தனக்கு மிகவும் பிடித்த எழுத்தாளர் டி.கே.சீனி வாசன் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

டி.கே. சீனிவாசன் மிகச் சிறந்த கட்டுரையாளரும்கூட. தென்னகம் இதழில் அவர் எழுதிய 'மண்ணிலிருந்து' என்ற கட்டுரை குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

டி.கே. சீனிவாசன் அவர்கள், பிரெஞ்சு எழுத்தாளர் எமிலி ஜோலா, ரஷ்ய எழுத்தாளர் கார்க்கி, ஆங்கில எழுத்தாளர் டெனிஸ் ராமின்ஸ், பெர்ல் எஸ்.பக், பிராண்டி தம்பதியர், ஜேன் ஆஸ்டின் மற்றும் வங்காளத்தின் சரத் சந்திர சாட்டர்ஜி, தமிழில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் ஆகியோரின் எழுத்துக்களால் ஈர்க்கப்பட்டவர்.

மேலைத் தத்துவயியல் மற்றும் இந்தியத் தத்துவச் சிந்தனைகளை முழுமையாகக் கற்றவர். பன்மொழிப் புலமை பெற்றவர். 1956ஆம் ஆண்டு திருச்சியில் நடைபெற்ற தி.மு.கழக இரண்டாவது மாநில மாநாட்டில் 'தத்துவ வரலாறு' என்ற தலைப்பில் அவர் ஆற்றிய உரையால் கவரப்பட்ட அறிஞர் அண்ணா அவர்கள் அவரைத் தத்துவமேதை என்று அழைத்தார்.

டி.கே.சீனிவாசனின் கட்டுரைகளில் இயற்கை சார்ந்த உவமைகளும் உருவகங்களும் நிறைய இடம்பெற்றிருக்கும்.

நிலவு, தாமரை, அல்லி, சூரியன், காற்று போன்ற இயற்கை சார்ந்த பொருட்களை உருவகப்படுத்தி அரசியலை விவரிக்கும் பாங்கு அவரிடம் நிறைய உண்டு.

பல கட்டுரைகளில் புரட்சிக் கவிஞர். பாரதிதாசனின் கவிதை வரிகளைக் கையாள்வது அவருடைய பாங்கு.

எந்தச் செய்தியையும் நேரடியாகச் சொல்லாமல் ஒரு உவமையைச் சொல்லி விளக்குவதை டி.கே.சீனிவாசன் அவர்கள் தன்னுடைய தனித்தன்மையாகக் கொண்டிருந்தார்.

எடுத்துக்காட்டாக, 'மண்ணிலிருந்து' என்ற கட்டுரையில் தலைமைப் பண்பை விளக்குவதற்கு,

அரியாசனத்தில் அமர்பவன், அரியாசனத்தின், அழகையும், அதன் வேலைப்பாடுகளையும் பார்த்து மகிழ்ச்சியடைபவனாக இருப்பின், அவன் தலைவனாகக் கருதப்படமாட்டான்; தச்சு வேலைக்காரனாகத்தான் இருப்பான்.

> இயக்கத்தைப் பட்டமாக்கிப் பறக்கவிட்டு அது அறுந்து விடாமல் பாதுகாப்பவன்தான் தலைவன்; தானே பட்டமாகிப் பறக்க நினைப்பவன் தலைவனாக மாட்டான்

என்று உவமைகளால் விளக்குகிறார்.

'அடிக்கடி ஆவேசத்தை வரவழைத்துக் கொள்ளும் பூசாரியைத் தான் ஆண்டவனுக்கு வேண்டியவனாகப் பக்தர்கள் கருதிக்கொள்வார்கள்.'

தென்னகம் இதழில் 'முத்தமிழ்க் காவலருக்கு ஒரு வெளிப்படைக் கடிதம்' என்ற கட்டுரையில், ஆரவாரத்தால் தன்னை நிலைநிறுத்திக் கொள் பவர்களைப் பற்றி இப்படிக் குறிப்பிடுகிறார்.'

## முடிவுரை

தான் இரயில்வே பணியிலிருந்து ஓய்வுபெற்ற பின்னர், தன்னை ஒரு இதழாளர் என்றே டி.கே.சீனிவாசன் குறிப்பிட்டு வந்திருக்கிறார்.

நல்ல பேச்சாளன் என்பவன் நல்ல எழுத்தாளனாகவும் இருக்க வேண்டும் என்று ஒருமுறை கவிஞர் திரு. குடியரசு அவர்களிடம் குறிப் பிட்டதாக அவர் கூறியிருக்கிறார்.

டி.கே. சீனிவாசன் அவர்களது மிகப் பெரிய கனவு, தானே ஒரு இதழ் நடத்த வேண்டும் என்பதுதான். ஆனால் அந்த எண்ணம் அவருடைய பொருளாதாரச் சூழ்நிலைகளால் இறுதிவரை நிறைவேறவில்லை.

OOO

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னைப் பல்கலைக்கழகத்

தமிழ் இலக்கியத் துறை

டாக்டர் மா. இராசமாணிக்கனார்

இதழியல் ஆய்வுமையம்

இணைந்து நடத்தும்

# திராவிட இயக்க இதழ்கள்

## கருத்தரங்கம் - 2

அழைப்பிதழ்

(இதழியல் கருத்தரங்கம் - 6)

அன்புடையீர், வணக்கம்.

திராவிட இயக்க இதழ்கள் என்னும் பொருள் பற்றிய கருத்தரங்கு, சென்னைப் பல்கலைக்கழகப் பேரவை அரங்கில் (எஃப் 50) 21-9-1998, 22-9-1998 ஆகிய இருநாள்களில் நடைபெற உள்ளது.

அனைவரும் வருகைதந்து சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| தலைவர் | இயக்குநர் |
| தமிழ் இலக்கியத்துறை | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் |
| சென்னைப் பல்கலைக்கழகம் | சென்னை |

இயக்குநர்

டாக்டர் மா. இராசமாணிக்கனார்

இதழியல் ஆய்வு மையம், சென்னை.

பேராசிரியர் முனைவர் **பொற்கோ** அவர்கள்

(தலைவர், தமிழ் இலக்கியத் துறை,

சென்னைப் பல்கலைக்கழகம்)

தலைமையில்

21-9-1998 அன்று முற்பகல் 10.00 மணியளவில்

பேராசிரியர் முனைவர் **பெ. த. மனோகரன்** அவர்கள்

(துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம்)

கருத்தரங்கைத் தொடங்கி வைத்து

# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

(தொகுதி - 3)

**என்னும் நூலினை வெளியிடுவார்கள்.**

❖❖❖

பேராசிரியர் முனைவர் **இரா. இளவரசு** அவர்கள்

(பேராசிரியர், தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி - ஓய்வு)

தலைமையில்

22-9-1998 அன்று மாலை 5.00 மணியளவில்

திருமிகு **எஸ்.வி. இராசதுரை** அவர்கள்

கருத்தரங்க நிறைவுரை நிகழ்த்துவார்கள்.

## முதல் அமர்வு

21-9-1998 முற்பகல் 11.00 - 1.00

தலைமை : **முனைவர் இ. சுந்தரமூர்த்தி**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு அம்பேத்கர் பிரியன் | ஒரு பைசாத் தமிழன் |
| திரு மா.ச. மதிவாணன் | நகரதூதன் |
| முனைவர் பூவண்ணன் | கலை மன்றம் |

கருத்துரை : **திரு ஜே.வி. கண்ணன்**

## இரண்டாம் அமர்வு

21-9-1998 பிற்பகல் 2.00 - 5.00

தலைமை : **திரு கயல் தினகரன்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு ப. புகழேந்தி | நம்நாடு |
| திரு பி.வி. கிரி | தனி அரசு |
| திரு இராம. கண்ணப்பன் | தென்றல் |
| திரு சு.அ. இராமசாமி | தென்னகம் |
| திரு க. சந்திரசேகரன் | கதிர் |

கருத்துரை : **முனைவர் இரா. குமரவேலன்**

## மூன்றாம் அமர்வு

22-9-1998 முற்பகல் 10.00 - 1.00

தலைமை : **திரு மா. செங்குட்டுவன்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு. பி.எல். இராசேந்திரன் | இதழாளர் பாரதிதாசன் |
| திரு வே. கபிலன் | இதழாளர் சி.பி. சிற்றரசு |
| புலவர் கி.த. பச்சையப்பன் | இதழாளர் புதுவை சிவம் |

கருத்துரை : **பேராசிரியர் பி. விருத்தாசலம்**

## நான்காம் அமர்வு

22-9-1998 பிற்பகல் 2.00 - 5.00

தலைமை : **புலவர் இளஞ்செழியன்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு. அ. மறைமலையான் | இதழாளர் ஏ.பி. சனார்த்தனம் |
| திரு. டி.கே.எஸ். இளங்கோவன் | இதழாளர் டி.கே. சீனிவாசன் |
| கவிஞர் தமிழேந்தி | இதழாளர் வே. ஆனைமுத்து |

கருத்துரை : **முனைவர் மு.பி. பாலசுப்பிரமணியன்**

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி.901 - கி.பி.1300 | 100.00 |
| பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் | 40.00 |
| பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் | 40.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்) - ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 3 | 150.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 2 | 115.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 1 | 130.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல் - தொழில்நுட்பம் II | 100.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல் - தொழில்நுட்பம் I | 90.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி.1851 - கி.பி.2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| திராவிட இயக்க இதழ்கள் - தொகுதி 1 | 60.00 |
| சைவ சித்தாந்தத்தில் ஆன்மக்கொள்கை | 65.00 |
| பெரியபுராணம் - திருமுறைகளின் கவசம் | 55.00 |
| காஞ்சிபுரம் கி.பி. 6ஆம் நூற்றாண்டுக்குமுன் | 65.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | 25.00 |
| திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | 30.00 |
| தமிழிலக்கியத்தில் மனித நேயம் | 115.00 |
| தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழ் இதழ்கள் - விடுதலைக்குப்பின் | 40.00 |
| பாவாணரின் ஞாலமுதன்மொழிக் கொள்கை | 45.00 |
| பெண்ணியப் படைப்பிலக்கியம் | 75.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்குவெளியே | 75.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை | 80.00 |
| தமிழியல் ஆய்வுச்சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்.கலை,பண்பாடு | 90.00 |